# பத்திரிகை, தலையங்கம்,கருத்துரை

**க. பூரணச்சந்திரன்**

**Thulir Software Technologies**

**Chennai**

# பதிப்புரை

முனைவர் க. பூரணச்சந்திரன் எழுதிய ‘பத்திரிகை தலையங்கம், கருத்துரைப்பு’ என்னும் நூலை வெளியிடுவதில் தமிழ் இலக்கியக் கழகம் பெருமிதம் கொள்கிறது. தமிழிலும் ஆங்கிலத்திலும் முதுகலைப்பட்டங்களும் தமிழில் முனைவர் பட்டமும் பெற்றுத் திருச்சிராப்பள்ளி பீஷப் ஹீபர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கும் பூரணச்சந்திரன் காலமெல்லாம் கல்வியில் கருத்தூன்றி நிற்பவர். தொடர்ந்து பலதுறையிலும் வளர்த்துக்கொண்டேயிருப்பதும், தாம் ஆய்ந்தறிந்தவற்றைக் கட்டுரைகள், நூல்கள், வகுப்பறைகள், கருத்தரங்குகள் மூலமாகப் பிறருக்குப் புலப்படுத்துவதும் இவருக்கு கைவந்த கலை, காலச்சுவடு, நிகழ். மேலும் எத்தனையோ சிற்றிதழ்களில் அவரது ஆய்வுக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. கல்லூரிகளும் பல்கலைக்கழகங்களும் நடத்தும் பல்வேறு கருத்தரங்கங்களில் அவரது கட்டுரைகள் அடிக்கடி இடம் பெறுகின்றன. தமிழ், ஆங்கிலம், இந்தி, வடமொழி ஆகிய பல மொழிகளில் புலமைபெற்ற இவர், சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களைப் போலவே தற்கால இலக்கியங்களிலும் தோய்ந்து நிற்பவர். அக்கால இலக்கியக் கொள்கைகள் போலவே தற்கால இலக்கியக் கொள்கைகளையும்

ஐயந்திரிபறக் கற்றுச் சிறந்தவர். அறிவியல் ரீதியாகச் சிந்திக்கவும் எழுதவும் வல்லவர்.

பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் இதழியல் துறைப் பாடத் திட்டக்குழு உறுப்பினராகிய இவர், தமிழ் இலக்கியக் கழகம் தமிழகமெங்கும் ஏற்பாடு செய்து நடத்திய சிறுகதை, கவிதை, நாடகப்பட்டறைகளில் பயிர்ச்சியாளராக அரும்பணி புரிந்து அனுபவம் பெற்றவர். எங்கள் தனிநாயகம் அடிகள் இதழியல் கல்லூரியின் முதுநிலை விரிவுரையாளராகவும் தொடக்கமுதல் பணியாற்றி வருகிறார். ஏற்கெனவே ‘செய்தித் தொடர்பியல் கொள்கைகள்’, ‘அமைப்பு மைய வாதமும் பின்னமைப்பு வாதமும்’ என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

இத்தகைய அனுபவமும் அறிவாற்றலும் நிறைந்த முனைவர் பூரணச்சந்திரன் ‘பத்திரிகை, தலையங்கம் கருத்துரைப்பு’ என்னும் இதழியல் நூலை எழுதி எங்கள் நிறுவனத்திற்குப் பெருமைசேர்த்துள்ளார். இப்பொருள் குறித்து வெளிவரும் முதல் தமிழ்நூல் இது என்பது குறிப்பிடத்தக்கது. பழைய தமிழ் இதழ்களை எல்லாம் ஆராய்ந்து தேவையான எடுத்துக்காட்டுக்களை இந்நூலில் இவர் கையாண்டுள்ள திறம் வியத்தற்குரியது. பாரதியும் திரு.வி.க.வும் எழுதிய ஆசிரியவுரைகள் முதலாகத் தற்கால

ஆசிரியவுரைகள் வரை எதுவுமே இவரது பார்வையிலிருந்து தப்பவில்லை.

அரிய இந்நூலை வெளியிடுவதில் தமிழ் இலக்கியக்கழகம் பெருமை கொள்கின்றது. நூலாசிரியரையும் பாராட்டி நூலை வெளியிடும் உரிமையை வழங்கியமைக்காக அவருக்குத் தன் நன்றியைப் புலப்படுத்தி மகிழ்கின்றது.

21-02-1998

**அமுதன் அடிகள்**

செயலர்

தமிழ் இலக்கியக்கழகம்

முதல்வர்

தனிநாயகம் அடிகள் இதழியல் கல்லூரி

திருச்சிராப்பள்ளி - 620 001

# இந்நூல்...

‘எப்படி எழுதுவது’ என்பது மேற்கு நாடுகளில் ஓர் அரிய கலையாகவே பயிலப்பட்டு வருகிறது. இதற்கென ‘எழுத்துப் பாசறைகள்’ பல அந்நாடுகளில் நடத்தப்படுகின்றன. (எழுத்தாளர் அசோகமித்திரன் அவர்களும் பங்குபெற்ற அயோவா பாசறை இதற்கொரு சான்று). எழுதுவது பற்றிப் பல நூல்களும் ஆங்கிலம் முதலிய மொழிகளில் உள்ளன. தமிழில் இப்படிப்பட்ட நூல்கள் மிகுதியாக இல்லை. (இங்கு, ‘எழுதுவது எப்படி?’ என்னும் தலைப்பில் இரண்டு பாகங்களாக ‘மகரம்’ தொகுத்து வெளியிட்ட அருமையான நூல் நினைவுக்கு வருகிறது.) எழுதுவது பற்றியே நூல்கள் குறைவு என்றால், கருத்தேர்ப்பு எழுத்து, தலையங்கம் எழுதுவது பற்றியெல்லாம் தமிழில் நூல்கள் இல்லை என்பதை வலியுறுத்த வேண்டியதே இல்லை. அந்த வகையில் இது ஒரு முதல் முயற்சி. குறிப்பாகக் கருதுவயமாக்கல் பற்றிப் பேசும் நூல் என்ற முறையில் முதல் முயற்சி.

இந்நூலின் நோக்கங்கள் இரண்டு: பத்திரிக்கை அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்குப் பார்வை நூலாகப் பயன்பட வேண்டும் என்பது ஒன்று; இதழியல் துறையில் தங்களை மேம்படுத்தப் பயிலும் மாணவர்களுக்கு வழிகாட்டியாக உதவ வேண்டும் என்பது அடுத்தது.

இந்நூல் உருவாகக் காரணமானவர் என்னைப் போன்றோர்க்கு ஆதர்சமாக விளங்கும் அருட்திரு. அமுதன் அடிகளார் அவர்கள். அவர்களோடு இணைந்து எழுத்துப் பாசறைகளில் அளித்த பயிற்சியும், தனிநாயகம் கல்லூரி மாணவர்களுக்கு அளித்த பயிற்சியுமே இந்நூல் உருவாக முதன்மைக் காரணங்கள். இந்நூலில் நான் பயன்படுத்தியுள்ள சில தலையங்கங்களை அளித்து உதவியவர் என் அருமை நண்பரும், மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையத்தின் இயக்குநருமான திரு. மா. ரா. அரசு அவர்கள். இவருக்கும் எனது உளங்களிந்த நன்றி உரியது.

தமிழ்வுலகிற்கு இந்நூல் சிறப்புற பயன்படுமெனில் அதைத்தவிர ஆக்கியவனுக்கு மகிழ்ச்சி வேறேது?

**க. பூரணச்சந்திரன்**

# பொருளடக்கம்

# இயல் ஒன்று

# கருத்துரைக்கும் பணி(Opinion Function)

மக்களாட்சி சரிவர நடைபெற வேண்டுமானால் மக்களிடம் தகுந்த கல்வியும் அரசியல் ஞானமும் பொதுநல உணர்ச்சியும் பரவியிருக்க வேண்டும். அதிகமாகக் கல்வியறிவு பெறாத ஒரு சமூகத்தில் மக்களாட்சி கடினமானதாகிவிடுகிறது. மக்களுக்குத் தகுந்த அரசியல் அறிவை, பொதுநல உணர்ச்சியைப் பரப்புவது பத்திரிக்கைகளின் பணி. இப்போதிருக்கும் மக்களாட்சியில் எத்தனையோ தவறுகள் நடைமுறையில் ஏற்படுகின்றன; நமது கண்முன்னேயே பல தவறுகள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. இவை ஆட்சியாளரின் திறமையின்மை, சுயநலம் இவற்றின் விளைவாக இருக்கலாம். மக்களிடம் பல குறைகள் இருப்பதால் அவர்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளிடமும் அவை காணப்படலாம். இப்போதிருக்கும் அரசியல், சமூக முறைகளை மாற்றுவதற்கான சிந்தனைகளைத் தூண்டுவதும், மாற்று கிடைக்கும் வரை இந்தக் குறைகளைக் களைந்து திருத்திக்கொள்ளப் போராடுவதும் பத்திரிக்கைகளின் தலையாய பணிகள், ‘நடக்கும்’ செய்திகளை வெறுமனே வெளியிடுவது மட்டும் அல்ல. பத்திரிகை சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம் முதலிய வெளிப்பாட்டுச் சுதந்திரங்கள் இந்த வகையில்தான் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன. பெற்ற அரசியல் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் பெறாத சமூக சுதந்திரம் முதலியவற்றைப் பெறவும் கருத்துரைத்தல் அதாவது மக்களுக்குக் கருத்துக்களைத் தக்கவாறு உணர்த்துதல் அவசியம். இதற்கு மக்களைக் கருத்தேற்க வைத்தல் (Persuation) அவசியம். ஆகவே, எழுத்துக் கலையை பத்திரிக்கையாளர்கள் பயிலுவது மிகவும் அவசியம்.

## வெகுசன உளவியலும் மக்கள் கருத்தும்(Mass Psychology and Public Opinion)

நவீன தொழிற்சமுதாயம் உருவாக்கிய மக்கள் திரள், வெகுசனம் (Mass) எனப்படுகிறார்கள். வகுப்பு, வர்க்கம், இனம், சாதி, பால்

முதலிய எந்த அடிப்படையிலும் தெளிவாகப் பகுக்கமுடியாத, பொதுரசனை, நுகர்வு இவற்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்ட ஒரு மக்கள் திரள் இன்று உருவாகிவிட்டது. வெகுசனச் சமூகம் (Mass society) உற்பத்தி செய்வது 'வெகுசனக் கலாச்சாரம்' (mass culture). நன்கு கட்டமைக்கப்பட்ட நுகர்வோர் அமைப்பும், வெகுசனச் சாதனங்களின் பரவலான அமைப்பும் இருக்கும்போது இத்தகைய கலாச்சாரம் உருவாகிறது. பிரிக்கப்படாத தொகுதியான 'வெகுசனத்தைச்' சார்ந்த தனிமனிதர்களின் மீது தொடர்புச் சாதனங்கள் பெரும் செல்வாக்கைச் செலுத்துகின்றன.

1) தங்களைத் தாக்கும் உளவியல் சுமைகளிலிருந்து தப்பிப்பு, 2) உணர்ச்சி விடுவிப்பு, 3) தோழமை சமூக-உறவுகளை பலப்படுத்திக்கொள்ளுதல், 4) தம்மை அடையாளம் கண்டுகொள்ளுதல், 5) பொது அறிவு பெறுதல் போன்ற தேவைகளுக்கெனவே 'வெகுசனம்' எனப்படும் மக்கள், தொடர்புச் சாதனங்களை நாடுகின்றனர். எனவே அவர்கள் (சிலர் நினைப்பதுபோல) முற்றிலும் அறிவற்றவர்களோ, வெகுசனச் சாதனங்களால் முற்றிலுமாகப் பயன்படுத்திக்கொள்ளப்படுபவர்களோ அல்ல. இருந்தாலும், நீண்டகாலம் ஒரேவிதமான நுகர்வுப்பண்டங்கள் மட்டுமே அவர்கள்முன் வைக்கப்படும்போது அவர்கள் கொண்டுள்ள மதிப்புகளில் (values) மாறுதல் நிகழ்கிறது; ஏனெனில் வெகுசனச் சாதனங்களின் ஆட்சி, மக்கள் முன்னேற்றத்தைப் பற்றி எவ்வித அக்கறையும் அற்ற வணிக முதலாளிகளிடம் இருக்கிறது. தொடர்ந்து வெறும் கனவுகளும், நுகர்வுசார் மதிப்புகளுமே திணிக்கப்படும் மக்கள், உண்மையான வாழ்க்கை மதிப்புகளில் அர்த்தம் அற்று, வெறும் 'நுகர்வு சார்ந்ததே வாழ்க்கை' என்ற மனோநிலையை அடைந்துவிடக்கூடும். இந்தத் தீமையிலிருந்து மக்களைக் காப்பாற்றப் பத்திரிக்கைகள் மட்டுமே உதவ முடியும்.

பத்திரிக்கைகளும் வணிகமயமாகிவிட்ட வெகுசனச் சாதனங்களின் ஒரு பகுதிதானே, அவை எப்படி மக்களை அவற்றை எதிர்க்கும் பணியில் ஈடுபடுத்த முடியும் என்பது ஓர் அடிப்படைக் கேள்வி. பத்திரிக்கைகளும் வெகுசனச்சாதனங்களின் ஒரு பகுதியே; அவற்றிலும் வணிக நோக்கு ஆட்சி செலுத்தத்தான் செய்கிறது. இருப்பினும் பிற வெகுசனச் சாதனங்களுக்கும் 'எழுத்து' என்னும்

ஊடகத்தைச் சார்ந்த பத்திரிக்கைகளுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. தொலைகாட்சி, திரைப்படம் முதலிய சாதனங்கள் பிம்பங்களை—காட்சிப்படுத்தலை முன் வைக்கின்றன. இடைவிடாத பிம்பங்களின் குவிப்பில், சிந்திக்கும் செயலற்று, திக்குமுக்காடிப் போய், அவற்றுள் ஐக்கியமாகி, மனிதன் தன்னை இழந்துவிடுகிறான். வானொலி மூலம் மனிதர்கள் பாதிப்புப் பெறுவது குறைவு-காரணம், மனிதனின் புலன்களில் காட்சிப்புலனே சக்தி வாய்ந்தது. கேள்விப்புலன் அவ்வளவு சக்தி வாய்ந்ததன்று. எழுத்து என்னும் ஒரு செயல் மட்டுமே காட்சிப் புலனையும், சிந்திக்க வைத்தலையும் உடன்படுத்துகிறது. எவ்வளவு குப்பையான விஷயங்களைப் படிக்கும் ஒருவனும், சிந்திக்கும் செயலற்று, ‘ஒருமைப்பட்டு மட்டுமே படித்தல்’ என்பது இயலாது. படிக்கும் செயல், உள்ளத்தில் தொடர்வினையாக, படிக்கும் விஷயங்களைப் பற்றிய சிந்தனைகளையும் தூண்டிவிடுகிறது. எனவே எழுத்து இன்னும் முற்றிலும் நுகர்வுச் செயலுக்கு மட்டுமே ஆட்பட்டுவிடவில்லை; என்றைக்கும் ஆட்படவும் செய்யாது.

மக்களுள் பலர், ஒருமிக்க, ஒரேவிதமான நோக்குகள், மதிப்புகள், எண்ணங்கள் ஆகியவற்றை உடையவராக இருப்பின், இவற்றின் தொகுதி ‘மக்கள் கருத்து’ எனப்படுகிறது. “அதிகமான சிந்தனை இன்றி, பிறருடைய ஆலோசனைகள், செல்வாக்கு இவற்றின் வாயிலாகப் பெறப்படும் நம்பிக்கைத் தொகுதி” என்ற மக்கள் கருத்து (Public Opinion) சமூக உளவியலில் வரையறுக்கப்படுகிறது. பெரும்பாலும் மக்கள் கருத்து, அவர்களை அழுத்தும் சமூகப் பிரச்சினைகள் பற்றி உணர்வதால் உண்டாவது; ஒரு பிரச்சனை மீது பலர் வெளிப்படுத்தும், பலவிதமான மாறுபட்ட கருத்துகளால் அது அறியப்படுகிறது. சில சமயங்களிலேனும், குறிப்பாகப் பத்திரிக்கைகள்-காரணமாகின்றன. மக்கள் கருத்து என்பது ஒரு நிகழ்முறை (Process). அதை வெளிப்படுத்தும் உறுப்பினர்களுக்குப் பொதுவான கருத்துகளும் மரபுகளும் உண்டு.

## மக்கள் கருத்து (Public Opinion)

**“** வெளியுலகில் நிகழும் நிகழ்ச்சிகள்,மக்கள் நடத்தைகள் ஆகியவை நம்மைப் பாதித்து, அல்லது நம்மைப் பொறுத்து, இயங்கும் வலிமை பெற்றவையாயின், அல்லது அவை நமக்கு ஆர்வமூட்டுபவையாக

இருப்பின் அவற்றைப் பொதுவிஷயங்கள் (Public Affairs) எனலாம். ஒரு பொதுவிஷயத்தில் சம்மந்தப்பட்ட மக்களின் மனச் சித்திரங்கள், அவர்களது தேவைகள், நோக்கங்கள், உறவுகள் முதலியவை 'மக்கள் கருத்து' (Public Opinion) எனப்படும்" என்கிறார் வால்டர் லிப்மன் என்னும் பிரபல பத்திரிக்கையாளர்.

ஒரு சமூகத்தைப் பாதிக்கின்ற அல்லது அதன் ஆர்வத்திற்குப் பாத்திரமான விஷயங்களைப் பற்றி, அந்தச் சமூகத்தைச் சேர்ந்த மக்கள் வைத்துள்ள ஒட்டுமொத்தமான நோக்கினைக் குறிக்கவே 'மக்கள் கருத்து' என்னும் சொல் பயன்படுகிறது.

மக்கள் கருத்து, குழப்பமான ஒன்றாகத்தான் ஆரம்பத்தில் தொடங்குகிறது. ஒரு பிரச்சினையைச் சார்ந்து அது கெட்டிப்பட்டு, பிறகு தெளிவுபட்டு, அந்தச் சமூகக்குழுவின் எல்லா மக்களும் ஏற்கத் தக்க பார்வையாக அது உருப்பெறுகிறது. ஒரு பொதுக் கோட்பாட்டின் (எ.டு: பெண்விடுதலை) பல்வேறு அம்சம்களையும் கவனித்து, அவற்றில் ஒவ்வொன்றையும் சார்ந்தோ மறுத்தோ எழும் கருத்தமைவுகளையும் மக்கள் கருத்து என்று குறிப்பிடலாம். இவ்வாறு எழும் மக்கள் கருத்துக்களுள் சில, பலபேரின் ஆதரவினால், பிறவற்றைவிட வலுப்பெறுகின்றன. இப்படித்தான் 'தலைமை பெற்ற மக்கள் கருத்து' உருவாகிறது. இம்மாதிரிக் கருத்து, ஒரு நாட்டின் அல்லது ஒரு பெரும் மக்கள் சமூகத்தின் கருத்தாக ஏற்கப்படுகிறது என்கிறார் பிரைஸ் பிரபு (Lord Brice).

"மக்கள் கருத்தும் வெகுசனங்களும் இன்று முன்னைவிட இதழ்த்துறையில் முக்கியத்துவம் பெறுகிறார்கள். வெகுசன விருப்பங்களும் 'சமூக முக்கியத்துவம்' வாய்ந்த குழுக்களின் வெளிப்பாடுகளுக்கும் பணிந்து, இதழியல் தலைமை அரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது" என்கிறார் பி. என். அஹூஜா (B.N. Ahuja).

## பத்திரிக்கைக் கருத்துரைப்பின் தேவை

முன்னரே, மக்களாட்சியின் அடிப்படையான கருத்துச் சுதந்திரம் என்பதன் அடிப்படையில், கருத்துரைத்தல் தேவை என விளக்கப்பட்டது. இன்னொரு முக்கியத் தேவையை மேற்கண்ட அஹூஜாவின் மேற்கோள் தெளிவாக்குகிறது.

இன்றைய செய்தித்தாள்கள், மக்கள் கருத்தை உருவாக்குவதற்கு மாறாக, மக்கள் கருத்தால் அடித்துச் செல்லப்படுகின்றன. முன்பெல்லாம் செய்தியிதழ்கள் மக்கள் நலனில் அக்கறை கொண்டிருந்தால், அவை மக்கள் கருத்தை உருவாக்கின. இன்று, பத்திரிக்கைகள் வணிக நிறுவனங்களாகிவிட்டன. பத்திரிக்கையின் விற்பனைச் சுற்றை அதிகரிக்க வேண்டிய பொறுப்பு ஆசிரியருக்கு இருக்கிறது. ஆகவே மக்கள் மனப்போக்கை அளவிட்டு, அதற்கேற்பத் தமது பத்திரிக்கையை நடத்தவேண்டிய நிலைக்குப் பத்திரிகை ஆசிரியர் ஆளாகிறார். மேலும், மக்கள் கருத்தினைச் சரியாக உருவாக்க விரும்பும் சில இதழ்கள், உயர் குழு மனப்பான்மை உள்ளவை, மக்களுக்கு எதிரானவை எனும் ஏச்சுக்கு ஆளாகின்றன. அச்சமயத்தில் அந்தப் பத்திரிக்கையை வாங்குவதைப் பலர் நிறுத்திவிடக்கூடும். அதன் சுற்றுக் குறைந்துபோகலாம் என்னும் நிலையும் உருவாகிறது. இம்மாதிரி, நல்லதொரு பத்திரிகைக்கு எதிராகவே ‘மக்கள் கருத்து’ உருவாகிவிடக்கூடும். எனவே இன்றைய பத்திரிக்கையாசிரியர்கள் பலர், தங்கள் கருத்தை எழுதுவதற்குப் பதிலாக, ‘மக்கள் கருத்தை’ அளவிட்டு, அதையே ‘பத்திரிக்கையின் கருத்தாக’ முன் வைக்கிறார்கள்.

பல சமயங்களில், வெகுசன ரசனையே மக்கள் கருத்தாக வெளிப்பட்டுவிடலாம்; அப்போது செய்தித்தாள்கள், அதை அப்படியே ஏற்று, அதன்படி நடப்பது அவற்றின் சுற்றை அதிகமாக்கலாம்; ஆனால் அது மக்களுக்குச் செய்யும் துரோகம். இன்று தமிழில் பல செய்தித்தாள்கள், வெகுசன விருப்பங்களையே வெளியிட்டு, நுகர்வை ஊக்குவிப்பதன் மூலம், தங்கள் உண்மையான கடமையாகிய மக்கள்கருத்தை உருவாக்குதல் (Opinion function of Editorial function) என்பதனின்றும் தப்பித்துக்கொள்கின்றன “பத்திரிக்கைகள் தங்கள் பொறுப்பைத் தட்டிக் கழித்து, தங்களிடமிருந்தே தப்பித்து ஓடி, உண்மையான மனிதத் தன்மையை உருவாக்குவதனின்றும் விலகிச் சென்று, வீணான காரியங்களை அதிகரிக்கும் சாதனங்களாகச் செயல்படுகின்றன” என்கிறார் கார்ல் யாஸ்பாஸ் (Carl Jaspers) என்னும் தத்துவ அறிஞர்.

பல செய்தித்தாள்களும், பிற சாதனங்களும், மக்களுக்கு எது நல்லது, நாட்டுக்கு எது நல்லது என்பதை அறிந்து சொல்பவையாக இன்று இல்லை. ‘வெகுசனங்கள் நினைக்கும் கருத்து போலத்’

தோன்றுவனவற்றையே அவை முன் வைக்கின்றன. அதாவது, அவை உண்மையில் முன்வைக்கும் கருத்துகள், நிறுவனங்களிலும், ஆளும் குழுக்களிலும் அதிகாரம் கொண்டவர்களின் ஆதிக்கக் கருத்துகளைத் (Dominant opinions) தான். மேலும், இன்று உண்மையான மக்கள் கருத்து வெளிப்படுவதற்கும் பெரும்பாலும் வாய்ப்பில்லாது போய்விட்டது. வெகுசனக் கூட்டுமனத்தின் வெளிப்பாடான தப்பித்தல், விருப்பு வெறுப்பு சார்ந்த கருத்துகளே 'மக்கள் கருத்து' என்னும் போர்வையில் வெளிவருகின்றன. முதலாளிகள், அரசியல் தலைவர்களின் கருத்துகளை மட்டுமே சில இதழ்கள் பிரதிபலிக்கின்றன. இந்த நிலைமையில் உண்மையான சமூக நோக்குக் கொண்ட பத்திரிக்கையாளர்களின் பணி மிகச் சிக்கலாகிவிடுகிறது.

இன்று பத்திரிகைத் தொழிலும் பிற சாதனங்களும், பெரும் தொழில் நிறுவனங்கள் (Large Industries). பெரும் முதலீடு, பெரும் வணிக நிறுவனங்களின் விளம்பரங்கள், வாசகச்சுற்று போன்றவை இன்றி இவை இயங்கமுடியாது. இத்தகைய நிலையில் மக்கள் கருத்து ஒடுக்கப்பட்டுவிடுகிறது. அரசாங்கமும் இப்போது செய்தி நிறுவனங்களின் குரலை ஒடுக்கவே முயல்கிறது.

நன்கு வளர்ந்துவிட்ட ஒரு வெகுசாதன அமைப்பு, மிக அதிக எண்ணிக்கையிலான செய்தியிதழ்கள் என்பவை மட்டுமே ஜனநாயகத்துக்கான அடிப்படையை உருவாக்கிவிடுவதில்லை. வெகுசனச் சாதனங்கள், ஒரு ஜனநாயகவாதியின் கருத்தைப் பரப்புவதைப்போலவே, சர்வாதிகாரியின் கருத்தையும் நன்கு சர்க்கரையிட்டு வெளிப்படுத்தவே செய்கின்றன; இன்னும் சொன்னால், சர்வாதிகாரியின் கட்டுப்பாட்டுக்குள் பத்திரிக்கைகள் இருப்பதனால், அவனுக்குத்தான் வெகுசனச்சாதனங்கள் நன்கு சேவை செய்யக்கூடும்.

ஆனால் நமது நாட்டில் அரசியல் சட்டத்தினாலேயே சுதந்திரம் நன்கு உறுதிப்படுத்தப்பட்ட ஒரே தனியார் நிறுவனம், பத்திரிக்கைகள்தான். ஆகவே பத்திரிக்கைகள் மட்டுமே மக்கள் சார்பாகச் சிறப்பாக இயங்கமுடியும். மக்களது உண்மைக் கருத்துகள், ஏமாற்றங்கள், எதிர்பார்ப்புகள், நம்பிக்கைகள் போன்ற அனைத்தையும் வெளிப்படுத்த முடியும். தங்கள் 'காவல்நாய்ப்' பணியை (Watch Dog

Function) நிறைவேற்றி, மக்களுக்கு அறிவூட்டும் கடமையையும் செய்யமுடியும். இதற்குத்தான் கருத்தேர்ப்பு எழுத்து அல்லது வயப்படுத்தும் எழுத்து (Persuasive Writing) இன்று முக்கியத்தேவை.

ஜேம்ஸ் மாடிசன் சொன்னார்: “அறியாமையை அறிவு என்றைக்குமே ஆதிக்கம் கொள்கிறது. தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ள விரும்பும் மக்கள், அறிவு தரும் அதிகாரத்தைப் பெற்றுக் கொள்ள தவறவே கூடாது. மக்களுக்குக் கல்வியும் தகவலறிவும் அளிக்காத ஒரு மக்கள் அரசாங்கம் வெகுவிரைவில் ஒரு கேலிக்கூத்தாகவோ, ஒரு பெருந்துன்பமாகவோ, அல்லது இரண்டுமாகவோ மாறிவிடும்”. இங்கு மாடிசன் கூறும் கல்வியும் தகவலறிவும் பத்திரிகைகள் வாயிலாக அடையப்படுபவையே. முன்பு சுட்டிக் காட்டிய குறைகளுக்கிடையிலும் நமது அரசியல், சமூக, பொருளாதார, மற்றும் பிற பிரச்சினைகளைச் சந்திக்க, வெகுசனச்சாதனங்களையும் பத்திரிக்கைகளையும் தவிர நமக்கு வேறு வழியில்லை.

ஆகவேதான், தாமஸ் ஜெபர்சன் இவ்வாறு எழுதினார்: “நமது அரசாங்கத்தின் அடிப்படை, மக்கள் கருத்தாகவே இருக்கின்ற காரணத்தால், அதைச் சரியாகத் தரவேண்டிய அவசியம் பத்திரிகைகளுக்கு இருக்கிறது. செய்தித்தாள்கள் இல்லாமல் ஓர் அரசாங்கம் வேண்டுமா, அரசாங்கம் இல்லாமல் செய்தித்தாள்கள் மட்டுமே வேண்டுமா என்றால், நான் பின்னதைத்தான் தேர்ந்தெடுப்பேன்”.

## பல்வேறு வழிகள்

பத்திரிக்கைகள் ‘தங்கள் கருத்தை’ வெளியிடுவதை – அதாவது, உண்மையான மக்கள் கருத்தை அறிந்து வெளியிடுவதை, கருத்துரைப்பதைப் பல்வேறு வழிகளில் செய்யலாம்; செய்து வருகின்றன. தலையங்கம் அல்லது ஆசிரியவுரை (Editorial) எழுதுவது ஒரு வழி; வாசகர் கடிதங்களைப் பெருமளவு வரவேற்பது இன்னொரு வழி; மதிப்புரைகள் வெளியிடுவது, செய்திச் சித்திரங்கள் (Features) பத்திகள் (Columns), கட்டுரைகள் (Articles) வெளியிடுவது வேறொரு வழி.

சென்னையை ஆந்திரர், கேரளர், கன்னடர் ஆகியோர்க்கு உரிமையாக்க வேண்டும் என்ற கருத்து முன் வைக்கப்பட்ட போது திரு. ம. பொ. சிவஞானம் தமது ‘தமிழ் முரசு’ இதழில் (1-4-1947) வரைந்த ஆவேசமான தலையங்கத்தினை இங்கு காண்போம். பத்திரிகைகள் தைரியமாகத் தங்கள் கருத்தினைச் சொல்ல வேண்டும் என்பதற்கு ஒரு நல்ல சான்று இது.

## தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்!

தலைநகருக்கு ஆபத்து வந்துவிட்டது. ஏகாதிபத்தியத்தின் தலைநகரான டில்லிக்கு அல்ல; இந்திய முதலாளித்துவத்தின் தலைநகராகிய பம்பாய்க்கு அல்ல. தமிழ்நாட்டின் தலைநகராகிய சென்னைக்குத் தான் ஆபத்து.

அரசியல் நிர்ணய சபையின் ஆலோசகர் பி. என். ராவ் என்பவர் சென்னை மாகாணப் பிரிவினை பற்றி எல்லா மாகாணச் சட்டசபைகளின் அங்கத்தினர்களுக்கும் அ. நி. சபை அங்கத்தினர்களுக்கும் அனுப்பியுள்ள சுற்றறிக்கையின் சுருக்கத்தைப் பிறிதோரிடத்தில் வெளியிட்டிருக்கிறோம். அந்த அறிக்கையிலுள்ள திட்டப்படி சென்னை நகரமும் அதைச் சுற்றியுள்ள பிரதேசங்களும் தமிழ் நாட்டிலிருந்து துண்டிக்கப்பட்டு ஆந்திரர், கேரளா, கன்னடர் ஆகிய எல்லா இனத்தவருக்கும் பொதுமனையாக்கப்படும்.

ஆந்திரர் கேட்பது சென்னை நகரை மட்டும்தான். ஆனால், பி.என். ராவ் பறிப்பது சென்னை நகரை மட்டுமல்ல; அதைச் சுற்றியுள்ள தமிழ்ப் பிரதேசங்களைக் கூட. சென்னை நகரத்தின்மீது இத்தனை நாளும் ஆந்திரர் மட்டும்தான் உரிமை கொண்டாடினர். ஆனால் பி.என். ராவின் திட்டம் ஆந்திரரோடு மலையாளிகள், கன்னடருக்கும்கூடச் சென்னையில் உரிமை தேடித் தருகின்றது. கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்தவனைப் பற்றித் தமிழர்கள் அறிவார்கள். அதே போல் தமிழருக்குரிய சென்னையையும் அதன் சுற்றுப்புறத்தையையும் பிற இனத்தவருக்கெல்லாம் தாராளமாக வழங்குகிறார் சர் பி.என்.ராவ்.

ஆந்திரர்களுக்கு இந்தத் திட்டம் நன்மையைப் பயக்கும் என்று “இந்தியன் எக்ஸ்பிரஸ்” கூறுகிறது. இந்தத் திட்டத்தால் ஆந்திரருக்குத்

தனிச் சட்டசபை, மந்திரி சபைகளுடன் கூடிய தனி மாகாணம் அமைவதுடன் சென்னை நகரத்தின்மீது ஆதிக்கம் ஏற்படும் என்று அப்பத்திரிகை சுட்டிக்காட்டுகிறது.

ஆரம்பத்தில் ஆந்திரர்கள் சென்னை தங்களுடையது என்றனர். அது பலிக்காது என்று தெரிந்தவுடன் பாதியாகவேனும் பங்கிட வேண்டும் என்றனர். அதுவும் முடியாது என்று அறிந்தவுடன் சென்னையைப் பொதுவாக்கத் திட்டம் புறப்பட்டு விட்டது. சென்னையைப் பற்றிய சர்ச்சை இதுவரை ஆந்திரருக்கும் தமிழருக்கும் மட்டுமே உரியதாக இருந்தது. சர் பி.என்.ராவ் திட்டம் மலையாளிகளையும், கன்னடர்களையும் இந்தச் சர்ச்சையில் ஆந்திரர்கள் பக்கம் சேருவதற்குத் தூண்டுகின்றது. சென்னையைப் பொதுவாக்க வேண்டுமென்ற யோசனையை, முன்பு கவர்னரின் ஆலோசகராயிருந்த சர் பி.என். ஸ்டிராத்திதான் முதன் முதலில் வெளியிட்டார். இப்போது சர் பி.என். ராவ் அதை ஒரு திட்டமாக உருவாக்கியிருக்கிறார். காங்கிரஸ் தலைவர்களிடம் தமது திட்டத்தைக் காட்டியதாகவும் ராவ் கூறுகிறார். பட்டேல் போன்ற பெருந் தலைவர்களின் ஆதரவும் இந்தத் திட்டத்துக்கு இருப்பதாகவும் நாம் அறிகிறோம். அண்மையில் சென்னை வந்த காங்கிரஸ் தலைவர் கிருபாலனி, “மொழிவாரி மாகாணங்களைப் பிரிப்பதுகூட இந்தியாவைச் சீர்குலைத்துவிடும்” என்று கூறியிருக்கிறார். இதையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் தமிழ் நாட்டின் விடுதலையைத் தடுக்க, தமிழினத்தை இன்னுமின்னும் அடிமைத் தளத்தில் ஆழ்த்தி வைக்கப் பலமான சதி உருவாகி வருகிறதென்றே நம்ப வேண்டியிருக்கின்றது.

மொழிவாரி மாகாணப் பிரிவினை காங்கிரஸ் ஒப்புக்கொண்ட திட்டத்தில் ஒன்று! அதைக் கிருபாலினி வெறுப்பானேன்? அதற்கு விரோதமான ராவ் திட்டத்தைக் காங்கிரஸ் தலைமையினர் ஆதரிப்பானேன்? தமிழர்கள் தன்மானம் அற்றவர்கள், அவர்களைப்பற்றி எதுவும் சொல்லலாம் செய்யலாம் என்ற எண்ணம் போலும்!

இன்றுள்ள சென்னை மாகாணத்தின் அமைப்பு ஏகதிபத்தியத்தால் வகுக்கப்பட்டதே ஒழிய, மக்களால் அல்ல. பல்வேறு இனங்களையும் ஒரே அமைப்பில் கொண்டுவருவதும் அந்த இனங்கள்

ஒன்றோடொன்று மோதிக் கொள்ளும் வகையில் பிரித்து ஆள்வதும் ஏகாதிபத்தியத்தின் பிறவிக்குணம். அந்தப் பிற்போக்கு முறையை ஏகாதிபத்தியம் போன பிறகும் இந்த நாட்டில் நிலைக்க விடுவது தேச பக்தியல்ல. தமிழருக்குத் தாயகம் தமிழகத்தைத் தவிர வேறு இருக்க முடியாது. உறவுக்கு எல்லை இமயமாய் இருக்கலாம். ஆனால் உரிமைக்கு எல்லை வேங்கடந்தான்.

ராவ் திட்டம் அமுலுக்கு வருமானால் வட சென்னை என்ற உப மாகாணம் பெரும்பாலும் ஆந்திராவாகத்தான் இருக்கும். ஆனால், தென் சென்னை என்பது மலையாளம் உள்ளிட்ட தமிழ் நாடாக இருக்கும். உப மாகாணம் என்ற அளவுக்குக்கூட தமிழருக்குத் தனி மாகாணம் ஏற்படப் போவதில்லை. தென் சென்னை உப மாகாணத்தில், மலையாளம் தமிழ் ஆகிய மொழித் தகராறுகளும் பதவிப் போட்டியும் இருக்கத்தான் செய்யும் சென்னை மாகாணக் கவர்னர் அல்லது தலைவர் பதவிக்குத் தென்இந்திய தேசீய இனங்களிடையே போட்டி நிகழ்வதும் தவிர்க்க முடியாதது. இந்தப் போட்டியின் காரணமாக மீண்டும் மீண்டும் தென் இந்திய தேசீய இனங்களிடையே பொறாமையும், பகைமையும் வளர்ந்து கொண்டே போகும். என்றென்றும் வட இந்தியரின் மத்தியஸ்தத்திற்குத் தென்னிந்தியர் மனுப் போட்டுக்கொண்டே இருக்க நேரும். இப்போதுள்ள சென்னை மாகாணத்தின் பிரதமர் தேர்தலில் நிகழ்ந்த கேவலமான நிகழ்சிகளே இதற்குத் தக்க சான்று.

குமரி முதல் வேங்கடம் வரை தமிழ்நாட்டின் எல்லையாகக் கொண்டு அதில் தமிழரசு அமைய வேண்டுமென்று சென்னை எழுத்தாளர் மாநாடு தமிழாசிரியர் மகாநாடு அதை ஆமோதித்தது. தமிழர் திருநாளில் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகள்தோறும் ‘தமிழருக்குத் தமிழரசு’, ‘தமிழருக்குச் சுய நிர்ணயம்’ என்ற கோரிக்கைகள் ஒவ்வொரு மேடையிலும் வற்புறுத்தப்பட்டன. அவை அனைத்துக்கும் அரை கூவல் விடுகின்றார், சர் பி.என். ராவ். இத்தனை நாளும் தமிழரசுக் கோரிக்கையை ஆதரித்த மக்கள் அந்தக் கோரிக்கையைக் குழிதோண்டிப் புதைக்கும் ராவ் திட்டத்தை எதிர்க்கப் பின் வாங்கக்கூடாது. தமிழர் விழாவின்போது தமிழரசுக் கோரிக்கையை, ‘தினசரி’, ‘தினமணி’, ‘ஆனந்தவிகடன்’ போன்ற பத்திரிகைகள் ஆமோதித்துத் தலையங்கங்கள் எழுதின. ஆனால் இன்று பி.என். ராவ் திட்டத்தைப் பற்றி அவர்கள் மௌனம் சாதிக்கக்

காரணம் என்ன? இனியேனும் அவைகள் மௌனத்தைக் களைத்துத் தமிழ் நாட்டின் மானத்தைக் காக்க முன்வருமாக!

தமிழினத்தின் ஆண்மையைச் சோதிக்கின்றது பி.என். ராவின் அறிவற்ற அறிக்கை. தமிழர், தமிழினத்தின் தாயகத்தை துண்டாடுவதற்கு யார் நினைத்தாலும் சரி, அந்தச் செயலை தமிழர் தங்கள் உயிர் கொடுத்தேனும் தடுத்தே தீரவேண்டும். தமிழ்நாடு தனி நாடு; அதை உப மாகாணம் என்று சொல்வது தமிழரை ஏய்க்கச் செய்யும் சதி. தமிழன் இந்தியனாய் இருக்கத் தயார்; ஆனால், அவன் முதலில் தமிழன்; இரண்டாவதாகத்தான் இந்தியன். தமிழன் என்ற உணர்வோடுதான் பிற இந்திய இனங்களோடு அவன் உறவாட முடியும்.

பல்வேறு வழிகளையும் கையாண்டு பத்திரிகைகள் தங்கள் கருத்துகளை தைரியமாக மக்கள் முன் வைக்க வேண்டும். தமிழ் நாட்டிலோ தலையங்கமே வெளியிடாத பத்திரிகைகள்தான் அதிகம்.

இந்தியாவில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே செய்தித்தாள்கள் மக்கள் பிரச்சினைகளைச் சிறப்பாகச் வெளிப்படுத்தும் பாரம்பரியம் கொண்டிருக்கின்றன. நாடு முழுவதிலும் அரசியல் போராட்டங்களையும் இயக்கங்களையும் அவை தோற்றுவித்துள்ளன. பல சமூகச் சீர்திருத்தங்கள் ஏற்படவும் காரணமாக அவை இருந்துள்ளன. ஆகவே மக்களுக்கு உண்மையில் நன்மை செய்யக்கூடிய விஷயங்களை-அவை ஆட்சியாளர்க்கு முரண்பட்டாலும்-இளைஞர்கள் வெளிப்படுத்த முன்வரவேண்டும். இலட்சிய நோக்குக் கொண்ட இளைஞர்கள் மட்டுமே நமது மக்களின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் பணியாற்ற முடியும். மக்களின் உண்மையான குரலை எழுதுகின்ற ‘வயப்படுத்தும் எழுத்தினை’ (Persuasive Writing) அவர்கள் தங்கள் பணிக்கு அடித்தளமாகக் கொள்ள வேண்டும்.

## கருத்தேற்கச் செய்தாலும் மக்கள் தொடர்பும் (Persuasion and Communication)

மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் இடையில் நிலவும் அமைப்புகளே (Mediators) பத்திரிகைகள். ஆகவே மக்கள் கருத்தை அரசாங்கத்திற்கு

எடுத்துச் சொல்லும் பொறுப்பு பத்திரிகைகளுக்கு நிச்சயம் உண்டு. சிக்கலான பிரச்சினைகளில், மக்கள் சிந்திக்குமாறு செய்து, பல்வேறு வழிமுறைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கச் செய்யும் அல்லது ஏற்றுக்கொள்ளச் செய்யும் பணியும் அவற்றிற்கு உண்டு. ஆகவே கருத்தேற்றுதல் அல்லது வயப்படுத்தல் (Persuasion) பத்திரிகையாளர்களுக்கு அவசியம் தேவை. கருத்தேற்கச் செய்தல் என்பது ஒரு முக்கியமான கருவி; முடிவெடுப்பதற்கான கருவி (Decision-making tool). பிரச்சினைகளை அகிம்சை முறையில் தீர்த்துக் கொள்வதற்கான ஒரு கருவி. பழங்காலச் சமூகங்களின் ஆட்சி முறையிலிருந்து வேறுபட்டுள்ள, வித்தியாசமான மக்களாட்சி முறைக்கு ஏற்றதொரு கருவி. (இங்கு, இந்தக் ‘கருவிக்குப்’ பல குறைபாடுகள் உண்டு என்பதைக் கருத்தில் கொள்ளாமல் இல்லை).

ஒரு கருத்துப்பூசல் ஏற்படும்போது அதனைத் தீர்த்துக்கொள்ள முக்கியமான வழிமுறைகள் மூன்று: 1. அதிகார முறை, 2. ஆழ்ந்து சிந்தித்தல் முறை, 3. கருத்தேற்கச் செய்யும் முறை.

‘தலைமையின் முடிவுக்குக் கட்டுப்படு-வேறு எதையும் சிந்திக்காதே’ என்று சொல்வது அதிகார (Authority) முறை. ஆழ்ந்து சிந்தித்தல் முறை (Reflection) இதற்கு எதிர் மாறானது. இந்தச் சிந்தனை முறை, சிந்தனையில் பயிற்சியும் ஒழுங்கும் பெற்றவர்களுக்கே இயலும்; மேலும், அப்படிப்பட்டவர்களுக்கும் தேவையான எல்லாத் தரவுகளும் (Data) கிடைக்க வேண்டும். ஆகவே, பொதுமக்கள் ஆழ்ந்து சிந்தித்து மிகச் சிக்கலான பிரச்சினைகளிலும் தாமே ஒரு முடிவுக்கு வந்துவிடுவார்கள் என்று கருத முடியாது. இரண்டிற்குமிடையே சமரச முறையாக அமைவதுதான் கருத்தேற்றுதல் (Persuasion). இங்கு ஒரு பிரச்சினையின் பல தரவுகளும் கிடைக்கப் பெற்று அதனை ஆழ்ந்து சிந்தித்து முடிவெடுக்கும் திறன் பெற்ற ஒருவர் (Opinion leader). தமது தலையங்கம் வாயிலாகவோ, அன்றிக் கட்டுரைகள் வாயிலாகவோ தமது கருத்தை மக்கள் ஏற்குமாறு செய்கிறார்: அதன் வாயிலாக ஒரு அழுத்தத்தை (Pressure) உருவாக்குகிறார். ஆகவே அரசாங்கமும் அந்தக் கருத்தை ஏற்கச்செய்ய முனைகிறார். கருத்துரைக்கும் பணி எனப்படுவது இதுதான் (Opinion function).

அடக்குமுறையால் ‘கருத்தைத் திணித்தல்’ என்பது மக்களை ஒடுக்குவதே ஆகும். ‘ஆழ்ந்து சிந்தித்தல்’ என்பது முற்றிலுமாகக் கல்வியறிவு பெற்ற ஒரு சமூகத்திலும்கூட அனைவருக்கும் சாத்தியமன்று. கருத்தேற்றுதல்-மக்கள் மனதை வயப்படுத்தலே, ஓரளவு சாத்தியமாகும்.

## கருத்துப் பரிமாற்றம்

கருத்தேற்றுதலினால் அடையப்படும் முடிவுகள், என்றைக்கும் பொருத்தமான மாறா உண்மைகளோ, முடிவுகளோ அல்ல. அந்தச் சமயத்தில், அந்தச் சூழலில் அவை சரியானவை, பயனுடையவை என்றுதான் அவற்றைக் கொள்ள வேண்டும். எனினும் இப்படிக் கருத்துவயப்படுத்தலில் சில அடிப்படைத் தேவைகள் உண்டு. கருத்துப் பரிமாற்றம் என்னும் தலைப்பில் இவற்றை அடக்கலாம்.

1. ஒரு கருத்து முரண்பாட்டில் சம்பந்தப்படும் எல்லாக் காட்சியினரும் தங்கள் கருத்துக்களைச் சுதந்திரமாகச் சொல்வதற்கான வாய்ப்பு கிட்ட வேண்டும்.ஒருவரது கருத்து மிக விசித்திரமானதாக, நடைமுறைக்கு ஒவ்வாததாக இருப்பினும் கூட, அது கவனிக்கப்பட வேண்டும்: கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட வேண்டும். வெளிப்பாட்டுச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம் இன்றிக் கருத்தேற்றுதல் என்பதில்லை. கருத்தேற்றுதல் என்பது எப்படியோ ஒருவரது மண்டைக்குள் ‘கருத்தை ஊற்றித் திணிக்கும்’ செயல் அன்று. அவர் தாமாக ஒன்றை உடன்பட்டு ஏற்றுக் கொள்ளச் செய்வதே கருத்தேற்றம்.

பிறரது கருத்துகளை நாம் உடன்படாத நிலையிலும், அவற்றைப் பொறுத்துக் கொள்ளுதலும் (சகிப்புத்தன்மை) மிக இன்றியமையாதது. பிறரது கருத்துகளை ஒடுக்காத தன்மை இருந்தால்தான் ஜனநாயக பூர்வமான கருத்தேற்பு நிகழும் என்று ஜெ.எஸ்.மில் (J.S.Mill) எடுத்துக்காட்டுகிறார்.

2. முரண்பட்ட எல்லா கருத்துக்களும், சற்றேறத்தாழ சமமான திறமை படைத்தவர்களால் முன் வைக்கப்பட வேண்டும். ஒரு குறிப்பிட்ட கருத்தை முன் வைப்பவர் மற்றவரை விடத் திறமைசாலியாக இருந்துவிட்டால், அது தவறான ஏற்புப் பெற்றுவிடும். விவாதத்திற்கே இடமில்லாமல் போய்விடும்.

3. தமக்கு மாறுபாட்ட நோக்குகளில் காணப்படும் சரியான வாதங்களையும் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் பங்கேற்பவர்களுக்குத் தேவை. முரண்பட்ட கருத்துகள் என்பன கருப்பு-வெள்ளைத் தன்மை (எதிரெதிர் நிலைப்பாடுகள்) கொண்டவை அல்ல; முற்றிலும் எதிமறையானவையும் அல்ல. ஆகவே ‘எதிராளியிடம் எந்த நல்லதுமே கிடையாது’ என்பது சரியான வாதம் அல்ல. பிறரது கருத்துகளுள் நல்லனவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். இதைத்தான் ஒருமுறை அண்ணாதுரை ‘மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு’ என்று குறிப்பிட்டார்.

4. ஜனநாயகத்தில் முக்கியமானது ‘பெரும்பான்மை முடிவு’. நாம் அதனோடு ஒத்துப்போகாவிட்டாலும் கூட ஏற்கும் தன்மை அவசியம். பல்வேறு வாதங்களை முன் வைத்து, அவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து, பெரும்பாலோர் ஒரு முடிவுக்கு வருகிறார்கள் என்றால், அதை ஏற்றே தீரவேண்டும். சந்தர்ப்பம் கிடைக்கும்போது நமது கருத்திற்கான வலுவான ஆதாரங்களைச் சேர்த்து எதிரான கருத்துடையோரையும் நம் வயப்படுத்த வேண்டும்.

## கருத்து வயமாக்களின் நன்மை தீமைகள்

ஒரு முரண்பாட்டில் சம்பந்தப்பட்ட அனைவரது கருத்துகளும் வெளிப்பட கருத்துவயப்படுத்தல் வாய்ப்பளிக்கிறது. மேலும், சிறுபான்மையினரின் கருத்துகளையும் அது ஆக்க பூர்வமான பரிசீலனையின் வாயிலாகப் பயன்படுத்திக்கொள்கிறது. கருத்துவயமாக்கலின் முக்கியமான நன்மைகள் இவை.

எனினும் பல சந்தர்ப்பங்களில் சிறுபான்மையினர் (மத அர்த்தத்தில் மட்டுமே இந்தச் சொல் இங்கு வழங்கப்படவில்லை. எல்லாக் கருத்துகளிலும் சிறுபான்மையினர் புறக்கணிக்கப்படுகின்றனர்). இவ்வாறு அடுத்தடுத்து நிகழும்போது பெரும்பான்மைக் கருத்துள்ளவர்களால் சிறுபான்மைக் கருத்துள்ளோர் ஏளனம் செய்யப்படுகின்றனர்; பெரும்பான்மைக் கருத்து ஒரு வழிபாட்டுப் பொருளாகிவிட, அதன் ‘தவறைச் சுட்டிக்காட்டும்’ சிறுபான்மையோரின் திருத்தல்பணி (Corrective Function) தடைக்குள்ளாகிறது. நமது சட்டசபைகளிலும், பாராளுமன்றத்திலும்

ஒரு கட்சி 75% - 80% இடத்தினளவு பெரும்பான்மை பெறும்போதெல்லாம் இந்த அபாயம் ஏற்படுவதை நாம் பார்த்திருக்கிறோம். 'நாங்கள் பெரும்பான்மையினர், ஆகவே நாங்கள் சொல்வதுதான் சரி' என்னும் மனப்பான்மை உருவாகிவிடுகிறது. மேலும், சந்தேகத்துக்குரிய வழிமுறைகளையும் கூட, ஒரு இறுதிப் பயன் கருதிக் கையாளலாம் என்னும் குருட்டுத் திட நம்பிக்கைக்கு இது இட்டுச் செல்கிறது.

கருத்துவயப்படுத்தலின் மிக முக்கிய அம்சம் 'முரண்பட்ட எல்லா கருத்துகளும், சமமான திறமை படைத்தவர்களால் மொழியப்படவேண்டும்' என்பதுதான். இப்படிப்பட்டவர்கள் கிடைப்பது அரிது; கிடைத்தாலும், அந்த விவாதம் நிகழும் களங்களில் அவர்களைப் பயன்படுத்திக் கொள்வது அரிது. "உண்மையும் நீதியும் இயல்பிலேயே (பொய்மையையும் அநீதியையும் விட) சக்தி வாய்ந்தவை" என்றார் அரிஸ்டாட்டில். இப்போதுள்ள சூழலில் இவ்வாறு திடமாகக் கூற நம்மால் முடியாது. 'உண்மை', 'நீதி' பற்றிப் பொதுக்கருத்துகள் உண்டா என்பது ஒரு புறமிருக்க, இன்று அரசாங்கமும், பெரு முதலாளிகளும் வெகுசனச் சாதனங்களை வயப்படுத்தி, தமது கருத்துகளே 'உண்மை', 'பிற அனைத்தும் பொய்' என்ற கருத்தேற்பினை உருவாக்கமுடியும்: தவறான கருத்தேற்பு, நல்ல கருத்தேற்பிற்கே எதிராகப் பயன்படும்.

## சில அடிப்படைக் கருத்துகள்

பிறரைக் கருத்தேற்கச் செய்யும் ஒருவர், அச் செயல் பற்றியும், மனிதர்களுக்கிடையிலான தொடர்புச் செயல் பற்றியும், மனித நடத்தை பற்றியும், சில அடிப்படைக் கருத்தாக்கங்களை மனதிலிருத்த வேண்டும்.

1. கருத்துவயப்படுத்தல் என்ற சிந்தனையே, மனித நடத்தையினைப் பாதிக்கமுடியும் என்ற கருதுகோளைக் கொண்டது. கருத்துவயமாக்கல் பற்றிய பல புத்தகங்கள், அதனை "ஏற்போரின் நடத்தையினைத் தமக்குச் சாதகமான வழியில் திருப்புவதற்குப் பயன்படுவதே கருத்தேற்புச் செய்தி" என்று வரையறுக்கின்றன. "வாசகரின் மனப்பாங்குகள், நம்பிக்கைகள், விருப்பங்கள் போன்றவற்றுடன் சாதகமான முறையில் தொடர்புபடுத்தி, அவர்களது

சிந்தனையை அல்லது செயலைத் தம் வயப்படுத்தும் செயல்முறை” என்று கருத்துவயமாக்கலை ஐசென்சன், ஆயர், இர்வின் மூவரும் வரையறுக்கின்றனர். “நீங்கள் பிறருக்கு ஏதேனும் நன்மை செய்யமுடிந்தால், அவர்களைக் கருத்துவயப்படுத்தலாம்; அவர்களைத் தண்டிக்க முடியுமானால், உங்கள் கருத்தை ஏற்கச் செய்யலாம்: அவர்களுடன் தொடர்பும் நெருக்கமும் கொண்டிருந்தால் உங்கள் வயப்படுத்தலாம்; அவர்களுக்குக் கிட்டக் கூடிய வாய்ப்புகள் மிகக் குறைவாக இருந்தால், உங்கள் வயப்படுத்தலாம்; உங்களிடம் தனித்திறன் உண்டு என்று நிரூபித்தாலோ, அல்லது நீங்கள் ஒரேமாதிரி முறையில் தொடர்ந்த நடத்தையைப் பின்பற்றினாலோ, பிறரை உங்கள் வயப்படுத்தலாம்” என்கிறார் ரோஜர் டாசன் (Roger Dawson).

‘வாய்ப்பு’ என்பதன் அர்த்தத்தை இங்கே கொஞ்சம் விளக்கவேண்டும். தன் விருப்பப்படி நடக்கக்கூடிய ‘வாய்ப்பு’ அல்லது சுதந்திரம் தனக்கு இருக்கிறது என்று ஒருவர் கூறும்போது, 1. ஒன்றிற்கு மேற்பட்ட வழிகளில் அவர் இயங்கக்கூடியதற்கான நிலை அவருக்கு இருந்தது; அவற்றுக்குள் எதைத் தேர்ந்தெடுப்பது என்ற சிக்கல் வயப்பட்டார் என்பதும், 2. அவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுக்குமாறு பிறரால் அவர் வற்புறுத்தப்படவில்லை என்பதும் அர்த்தங்கள்’ இதற்கு எதிரான செயல்தான் ‘நிர்ணயப்படுத்துதல்’ அல்லது வரையறைப்படுத்தல் (Determination) என்பது.

2. மக்களின் நடத்தைகளை நிர்ணயிக்கும் பல்வேறு காரணிகளில் ஒன்றே ஒன்றுதான் கருத்துவயப்படுத்தும் எழுத்து/பேச்சு. ‘முடிவெடுத்தல்’ (Decision making) போன்ற செய்கைகள் சிக்கலானவை; பல்வேறு பாரம்பரிய, சூழல் காரணிகளால் அவை நிகழ்கின்றன. ஒரு குறிப்பிட்ட நடத்தைக்கு இட்டுச்செல்லும் இயக்கப்பூர்வமான இழுவிசைகளுள் ஒன்றே ஒன்றுதான் ‘கருத்துவயப்படுத்தல்’ என்பது.

3. ‘தர்க்க’ அடிப்படையிலான, ‘அறிவியல்பூர்வமான’ கருத்துவயப்படுதல் வெற்றி பெறுவதற்கான வாய்ப்பு அதிகம். ‘அறிவியல் பூர்வமான’ என்று சொல்லும்போது, ‘மனித நடத்தைக் காரணிகளை நன்கறிந்து, மக்கள் ஏற்றுக்கொள்வது மாதிரியான தன்மையில் தருவது’ என்று பொருள். பல அரசியல்வாதிகள்,

மேடைப்பேச்சாளர்கள் இதனை நன்கறிந்தவர்கள். (அவர்கள் தங்கள் சுயநலத்திற்காக, சாதகமான கருத்தேற்றத்திற்கு இம்முறைகளைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதுதான் குறை.)

“வாசகர் ஒரு குறிப்பிட்ட எண்ணத்தை அல்லது செயலை ஏற்கச் செய்வதில், பத்திரிகை ஆசிரியர் பொருத்தமுடைய தொடர்புக் காரணிகளைப் பயன்படுத்தி உருவாக்கும் எழுத்து சொல்லாடல்” என்ற அர்த்தத்திலேயே இனி, இந்த நூலில் ‘கருத்துவயப்படுத்தல்’ என்ற தொடர் பயன்படுத்தப்படும்.

4. மேற்கண்ட கோட்பாட்டின்படி, கருத்துவயமாக்கல் என்பது செய்தியளிப்போர் (Sender-இங்கே, பத்திரிகை ஆசிரியர்) முதன்மைப்பட்டது. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு வாசகருக்கு’ அளிக்கப்படுவது. வெறுமனே ‘கருத்துவயமாக்கல்’ என்பது கிடையாது. ‘ஒருவரை’ அல்லது ‘ஒரு பொருளை’ த்தான் ‘வயமாக்கமுயும்’.

5. ஒரே ஒரு, தனித்த கருத்து வயமாக்கும் செய்தியும் கூடத் தேவைப்படும் எதிர் விளைவை உருவாக்கக்கூடும்; என்றாலும், வாசகர்கள், தொடர்ந்து நீண்ட காலத்திற்கு, ஒரே வித செய்திகளுக்குட்படும்போது தான் வெற்றிகரமான ‘வயப்படுதல்’ நிகழும். இதை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவோர் விளம்பரக்காரர்கள்தான். அவர்களுக்குத் தங்கள் செய்தியை ஒரு முறை சொன்னால் எடுபடாது என்பது நன்கு தெரியும். ஒரு தனி விளம்பரம் போதாது, ஒரு படைத்தொடுப்புதான் (Campaign) தேவை என அறிவார்கள். இதனை உளவியலார் ‘மேலடுக்கு விளைவு’ (Pyramiding sensation) என்பார்கள்.

## கருத்துரை வாசகர்கள்

வாசகர்கள் ‘இப்படிப்பட்டவர்கள்’தான் என்று வரையறுப்பது மிகக் கடினம். சிலர் எதனையும் ஏற்றுக்கொள்ளக் கூடியவர்களாக இருக்கிறார்கள். சிலர் எதனையுமே சந்தேகக் கண்கொண்டு நோக்குபவர்களாக இருக்கிறார்கள். சிலரை உணர்ச்சி முதன்மைப்பட்ட முறையீடுகள் மிகவும் பாதிக்கின்றன. சிலரையோ அறிவு சார்ந்த விவாதங்கள்தான் ஈர்க்கின்றன. வாசகர் பல

சமயங்களில் தங்கள் விருப்பத்திற்குத் தேர்ந்தெடுத்துப் படிக்கிறார்கள்: (Selective). சில சமயம், அவநம்பிக்கையுடன் கருத்துரைப் பகுதிகளை அணுகுகின்றனர்; (Sceptical). மிகச் சில சந்தர்ப்பங்களில் 'ஏற்றுக்கொள்ள மாட்டேன்' எனப் பிடிவாதமாகவும் இருக்கின்றனர்; (Obstinate). இவையாவும் அவர்களுடைய மனப்பாங்கினை (Attitude)ப் பொறுத்தது. வில்பர் ஷ்ராம் (Wilbur Schramm) என்னும் ஆசிரியர், "மனப்பாங்கு என்பது, ஒரு குறிப்பிட்ட சூழலுக்கு எதிராகவோ, அதனை ஏற்றோ மதிப்பிடும் முறையில் இயக்குவதற்கான ஊகித்துணர் தயார் நிலை" என்று கூறுகிறார்.

மனப்பாங்குகள் மூன்று பகுதிகளைக் கொண்டனவாகக் காணப்பட்டுள்ளன: 1. புலனறிவு சார்ந்த பகுதி (Cognitive); 2. உணர்வு சார்ந்த பகுதி (Affective); 3. நடத்தை சார்ந்த பகுதி (Behavioral). புலனறிவு சார்ந்த பகுதி என்பது ஒருவர் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும் பொருள் பற்றிக் கொண்டிருக்கும் அறிவு, நம்பிக்கைகள் இவற்றைக் குறிப்பது. உணர்வு சார்ந்த பகுதி என்பது அந்தப் பொருள் பற்றிய மதிப்பீடு, விருப்பம் அல்லது உணர்ச்சி சார்ந்த எதிர் வினையைக் குறிப்பது. நடத்தை சார்ந்த பகுதி என்பது அந்த விவாதப் பொருளை நோக்கிய நடத்தையைக் குறிப்பது.

மனப்பாங்குகள், வேறு மூன்று விதக் கருத்தாக்கங்களுடன் அடிக்கடி தொடர்புபடுத்திப் பார்க்கப்படுகின்றன; சுய கருத்துகள் அல்லது அபிப்பிராயங்கள் (Opinions), நம்பிக்கைகள் (beliefs), மதிப்புகள் (Values) என்பன இவை. ஒரு மனப்பாங்கினைச் சொல் வாயிலாக வெளிப்படுத்துவது அபிப்பிராயம் எனப்படும். மனப்பாங்கு என்பதில் எப்போதுமே ஓர் உள்ளார்ந்த மதிப்பீடு (Evaluation)-உணர்வு சார்ந்த பகுதியின் ஓர் அம்சம் உண்டு. நம்பிக்கை என்பதில் மதிப்பீட்டுத் தன்மை கிடையாது. "காவிரி நீர்ப் பிரச்சினை விரைவில் தீர்க்கப்பட்டு விடும்" என்பது நம்பிக்கை. "அது சம்பந்தமாக இன்றைய அரசு எடுத்துவரும் நிலைப்பாட்டை நான் ஆதரிக்கிறேன்" என்பது மனப்பாங்கு. பல்வேறு தொடர்புடைய பொருட்கள் மீது ஒருவர் காட்டும் ஒருங்கிணைந்த தக அமைவுகளின் (Orientations) தொகுதியே மதிப்பு (Value) எனப்படும். மதிப்பு (Value) வேறு; மதிப்பீடு (Evaluation) வேறு. மதிப்புகள், மனப்பாங்குகளை விட நிரந்தரத் தன்மை கொண்டவை. சான்றாக, ஒருவரது சமய மதிப்புகள் (Religious values). ஒருவர் ஏதேனும் ஒரு பொருள் பற்றி வலுவான

நேர்முக மனப்பாங்கு கொண்டு அடைய முயலும் இலட்சியம் அல்லது ஈடுபடும் நடத்தை என்பதை ‘மதிப்பு’ எனலாம். ஒரு விஷயத்தை நமது மதிப்பு என்னும் தராசில் நிறுத்துப் பார்த்தலே, மதிப்பீடு (Evaluation) ஆகும். மதிப்பு இடும் செயலே மதிப்பீடு.

மனப்பாங்கு என்பதை வரையறுப்பதில் சமூகவியல் நூல்கள், உளவியல் நூல்கள் போன்றன வேறுபடலாம். ஆனாலும், ஒரு பொருள் குறித்த ஒருவரது மனப்பாங்கு என்பது, அவர் அப்பொருள் பற்றி உடன்பாடாகவோ, எதிராகவோ நோக்குவதற்குரிய சார்புத் தன்மை என்பதில் ஐயமில்லை. நடத்தை உள்நோக்கு (behavioural intention) என்பது மனப்பாங்கிலிருந்து உருவாவது; ஒவ்வொரு உள்நோக்கமும் ஒரு குறித்த விதமான நடத்தையுடன் சம்பந்தப்பட்டது. மனப்பாங்குகள், சூழலிலிருந்து கற்றுக் கொள்ளப்படுபவை. எனவே அவை மாறக் கூடியவை.

புலனறிவு (Cognition) பற்றிய கொள்கைகளை ‘ஒத்துச் செல்லுதல் கொள்கைகள்’ (Consistency theories), ‘வேறுபடுதல் கொள்கைகள்’ (Dissonance theiories) எனப் பிரிக்கலாம். இவற்றுள் புலனறிவு வேறுபாட்டுக் கொள்கை (Cognitive dissonance) என்பது முக்கியமானது. லியோன் ஃபெஸ்டிஞ்சர் (Leon Festinger) என்பவர் முன் வைத்தது. இதன்படி ‘வேறுபடுதல்’ அல்லது ‘ஒன்றாமை’ என்பது நம் மனத்திற்குள் ஒரே பொருளை / விஷயத்தைப் பற்றி அறியும் பல்வேறு தகவல்களுக்கிடையிலும் காணப்படும். ஒன்றாமை, உளவியல் ரீதியாக நமக்குச் சலிப்பூட்டக் கூடியது. எனவே ஒன்றாமையைக் குறைத்து, ஒத்துச் செல்லுதலை மிகுதியாக்குவதில் நம் மனம் ஈடுபடுகிறது. ஒன்றாமையைத் தவிர்க்க முடியவில்லை என்றால். வாசகர், அந்தச் செய்தியைப் ‘புரியவில்லை’ என்று ஒதுக்க முனைகிறார்.

ஒரு தலையங்கம் (ஆசிரியவுரை) முன் வைக்கின்ற விவாதங்களை ஏற்றுக் கொள்ளும் நிலை இல்லாவிட்டால் அவர்கள் அதை ஒதுக்கப் பல்வேறு உளவியல் வழிகள் உண்டு. சான்றாக, ஒரு தலையங்க ஆசிரியர் புகை பிடித்தலின் தீமைகள் பற்றி வயப்படுத்தும் திறனுடன் ஓர் ஆசிரியவுரை எழுதியதாக வைத்துக் கொள்வோம்; அதில் மருத்துவர்களின் ஆதாரப்பூர்வமான தகவல்களைத் தந்திருப்பதாகவும் கொள்வோம். தொடர்ந்து புகை பிடிக்கும் ஒருவர்,

அதன் தீமைகளையும் அபாயத்தையும் புறக்கணிக்கும் அளவிற்குப் புகைப்பது தமக்கு அதிக சந்தோஷத்தைக் கொடுக்கிறது என வாதிடலாம்; அல்லது, டாக்டர்கள் சொல்லும் அளவிற்கு இந்தப் பிரச்சினை தீவிரமானதல்ல, தான் புகை பிடிப்பதால் பாதிக்கப்படமாட்டார் என நினைக்கலாம்; அல்லது வாழ்க்கையில் எப்போதுமே அபாயம் இருக்கத்தான் செய்கிறது, புகை பிடிப்பது மட்டுமா அபாயம் என வாதிடலாம்; அல்லது தான் புகை பிடிப்பதை விட்டுவிட்டால் தன் எடை அதிகரித்துவிடும், அது புகை பிடிப்பதை விட உடல்நலத்திற்குத் தீங்கானது என்று சொல்லலாம். வயமாக்கும் செய்திகளை வாசகர்கள் இப்படியெல்லாம் பல்வேறு விதங்களில் எதிர்கொள்வார்கள்.

“ஒரு மனிதர்/விஷயம்/பொருள் பற்றித் தாம் அறிந்திருப்பதோடு, பொருந்தாத தகவல்களை மக்கள் புறக்கணித்து ஒதுக்கி விடுகிறார்கள் என்பதுதான் புலனறிவு சார்ந்த ‘ஒன்றாமைக் கோட்பாடு (dissonance theory). தொடர்பியல் ஆய்வாளர்கள், “மனிதர்கள் ஏற்கனவே தாம் வைத்துள்ள அபிப்பிராயங்களோடு ஒத்துச் செல்லும் ‘வயப்படுத்தும் எழுத்தை’ ஏற்றுக் கொள்கிறார்கள்; தங்கள் மனநிலைக்கு ஒத்துப்போகாத செய்திகளை-அவை எவ்வளவு சிறப்பாக எழுதப்பட்டிருந்தாலும்-புறக்கணித்து விடுகிறார்கள்” என்கின்றனர். (சான்றாக, 1996-இல், முந்தைய ஆட்சியைப் புறக்கணிக்க வேண்டும் என்ற மனநிலை மக்களிடம் ஏற்கெனவே இருந்தது; அதற்கு ஒத்துப் பத்திரிக்கைகளும் தலையங்கம்/கட்டுரை எழுதிய போது, அவை மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டன.)

ஆகவே ஒரு சாதனம் மட்டுமே, கருத்துவயமாக்கலை முற்றிலும் நிகழ்த்திவிடுவதில்லை. இதில் ‘செல்வாக்குள்ள மனிதர்’களின் பங்களிப்பும் அதிகம். இவர்கள் ‘அபிப்பிராய முன்னோடிகள்’ (opinion leaders) எனலாம்.

ஸ்டோன்சைஃபர் (Stonecipher) என்னும் ஆசிரியர், கருத்துரைப்போர் அல்லது கருத்து வயமாக்குவோர் தங்கள் வாதங்களை முதலில் ‘அபிப்பிராய முன்னோடிகள்’ ஏற்குமாறு முன்வைக்க வேண்டும் என்கிறார். மேலும் கருத்துவயமாக்குவோர், தமது செய்தியில் தம் கருத்திற்குச் சாதகமான வாதங்களை நன்கு எடுத்துக்காட்ட வேண்டும்; அவற்றிற்கு எதிர்ப்பாக என்ன விஷயங்கள்

சொல்லப்படும் என்பதை நினைவிற் கொண்டு, எதிர் வாதங்களையும் தமது கருத்துரையில் முன்வைக்க வேண்டும். இது, பின்னால் அந்தக் கருத்துரைக்கு வரும் எதிர்ப்புகளிலிருந்து வாசகரைக் காப்பாற்றும் தடுப்பூசி போலச் செயல்பட வல்லது.

## சுயமதிப்பும் கருத்துவயமாக்கலும் (Self-esteem and persuasion)

கருத்துரையாளரின் சுயமதிப்பு, தன்னம்பிக்கை இவை வாசகரைக் கவர்வன என்பதை ஆய்வுகள் நிரூபித்துள்ளன. தன்னம்பிக்கை, மகிழ்நோக்கு (optimism), செயல்திறன் (competence) இவை மூன்றும் இணையும் போது சுயமதிப்பு உருவாகிறது. போதாமை, சமூக மனத்தடை, கலவரம் ஆகியவை கொண்ட மனநிலை, ஒருவர்க்குச் சுயமதிப்பு குறைவாக இருப்பதைக் காட்டும்.

ஓரளவு ஆதிக்க மனப்பான்மையும் (authority) கருத்து வயப்படுத்தும் தன்மை கொண்டது. ஆகவே கருத்துவயமாக்க முனைவோர், தகுந்த பிரமாணங்களை – அவை பொருத்தமாக இருக்கும் பட்சத்தில் - கையாள வேண்டும்.

புறமுகத் தன்மை (extroverted type) சார்ந்த ஆளுமை கொண்டவர்கள், அறிவாற்றல் பொருந்தியவர்களாக இருப்பின், பிறரை எளிதில் தங்கள் கருத்துக்கு இணங்கச் செய்வர்.

படைப்பாற்றல் கொண்ட இணைப்புச் சிந்தனைத் திறனும் (associative thinking) பிறரை எளிதில் வயப்படுத்த வல்லது.

## கருத்துவயப்படுத்தலில் பிற காரணிகள்

கருத்தேற்கச் செய்வதில், வாசகர்தம் வயது, பால், அறிவுத்திறன் மூன்றும் ஓரளவு முக்கியக் காரணிகள் என்று சொல்லலாம். பதின்பருவத்தின் (teenage) ஆரம்ப நிலையில் எளிதில் கருத்துவயப்படும் பாங்கு (மசியும் நிலை) காணப்படுகிறது. பொதுவாகப் பெண்கள் ஆண்களைவிட எளிதில் கருத்துவயப்படுபவர், பிறர் கருத்துக்கு இணங்குபவர் என்று ஆய்வுகள் காட்டுகின்றன. அறிவுத்திறன், பிற திறமைகள்,

கல்வியறிவு போன்றவை எளிதில் கருத்து வயப்படுதலைத் தடுப்பவை. ஆயினும் இதே காரணிகள், ஒரு நல்ல கருத்துக்கு இணங்கவைப்பதில் சாதகமாகவும் செயல்படுபவை. விமர்சன மனப்பான்மை வாய்ந்த வாசகர்கள் எதையும் தாங்கள் சீர்தூக்கி ஆராய்ந்தே ஏற்றுக் கொள்வர்.

மேற்குறித்த காரணிகள், மனப்பாங்குகள், போன்றவை பற்றியெல்லாம் பல்வேறு கோட்பாடுகள் முன் வைக்கப்பட்டிருந்தாலும், முற்றிலுமாக வாசகர் கருத்து எவ்விதம் செல்லும் என்பதைத் திட்டவட்டமாக அளந்தறிய வழியில்லை. திரைப்படங்கள் பெறும் வரவேற்பு / புறக்கணிப்பிலிருந்து இந்த நிச்சயமற்ற தன்மையை நாம் எளிதில் அறியலாம். நன்கு ஓடுமென எதிர்பார்த்து விளம்பரம் செய்யப்படும் படங்கள் தோல்வியடைகின்றன; ஓடாது எனக் கணிக்கப்படும் சில படங்கள் பெரும் வெற்றியடைகின்றன. மக்கள் மனத்தைக் கணிப்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை.

இருந்தாலும், இந்தச் சவாலை எதிர்கொள்வது தான் கருத்துவயமாக்குவோரின் / கருத்துரை எழுதுவோரின் முக்கியப் பணி. முன்பே கூறியதுபோல, வாசகர்கள், தேர்ந்தெடுக்கும் தன்மை – அவநம்பிக்கை – பிடிவாதம் கொண்டவர்கள் என்பதைப் புரிந்து கொண்டு அணுகுவது ஓரளவு வெற்றியைத் தரும். ஒரு கருத்துரையாளர், தம் வாசகருடன் எப்போதுமே உளவியல் போராட்டத்தில் (psychological warfare) ஈடுபட வேண்டியிருக்கிறது. ஆயினும் மாற்றம் என்பது ஒரு வழிப் பாதை அல்ல. தாம் மாற்ற நினைக்கும் வாசகர்களாலேயே பலசமயம் கருத்துரையாளரும் தொடர்ந்து மாற்றமடைந்து வருகிறார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். திறம்படக் கருத்துவசமாக்க முனைவோர், மனப்பாங்குகளுக்கும் நடத்தைக்குமுள்ள உளவியல் தொடர்பில் ஆழ்ந்து கவனம் செலுத்திவர வேண்டும்.

# இயல் இரண்டு

## கருத்துவயமாக்கல் உத்திகள்(Persuasive Techniques)

கருத்துரைக்கும் எழுத்தாளர் ஒருவர் எந்தப் பிரச்சினைகள், எந்த விவாதப் பொருள்கள் பற்றித் தாம் எழுதவேண்டும் என்பதை முதலில் தீர்மானிக்க வேண்டும்: ‘அவ்வாறு தீர்மானிப்பதில் குறிப்பிட்ட அளவு பொதுப்புத்தியையும், தேர்ந்தெடுப்பதில் தைரியத்தையும் காட்டவேண்டும். எடுத்துக்கொண்ட பிரச்சினையை அதன் சிக்கல்களோடு முழுமையாக உணர்ந்துகொள்வதற்குத் தேவையான ஆராய்ச்சியில் - தேடலில் அவர் ஈடுபட வேண்டும். எழுதும்போது அவதூறினைத் தவிர்க்க வேண்டும்’ என்பவை அடுத்தாற்போல முக்கிய விஷயங்கள். மேலும் ‘அந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கான வழிமுறைகள் யாவை, அவற்றின் மாற்றுகள் (alternatives) யாவை, அவற்றின் விளைவுகள் யாவை’ என்பதிலெல்லாம் ஆழ்ந்த, படைப்பாற்றல் மிக்க சிந்தனையைச் செலுத்தவேண்டும். அதாவது, ஒரு குறிப்பிட்ட பிரச்சினை பற்றித் தம் வாசகர்கள் செலுத்தும் கவனத்திற்கு மதிப்பளிக்குமாறு ஆழமான, தேவையான விஷயங்களைத் திரட்டித் தருவது ஒரு பத்திரிகையாசிரியர் பணி. இவை எல்லாவற்றையும்விட முக்கியமானது, ஆசிரியவுரை அல்லது கருத்துப்பகுதி எவ்விதம் எழுதப்படுகிறது என்பது.

ஒரு நல்ல சிறப்புக் கட்டுரை (article) அல்லது கருத்துச் சித்திரம் (feature) எப்படியிருக்க வேண்டுமோ, அதே தன்மைகளை ஆசிரியவுரையும் பெற்றிருக்க வேண்டும். நல்ல வாசிப்புத் தன்மை அதற்கு இருக்க வேண்டும்; இறுக்கமான, செறிவான கட்டமைப்பு வேண்டும்; தேர்ந்தெடுத்த சொற்களையும் தொடர்களையும் ஆளும் தன்மையும், காட்சிப்படுத்தலும் வேண்டும்; எளிமையான நடையில், ஆனால் ‘வண்ணமயமாக’ ஆக்கவேண்டும்.

பொதுவாக பத்திரிகைகளில் கருத்துரைத்தல், அதாவது ஆசிரியவுரை, சிறப்பானதாக அமைவதில்லை; அதற்குப் போதிய கவனம்

செலுத்தப்படுவதில்லை. எவரெஸ்ட் எஸ். ஆலன் என்னும் பத்திரிகையாளர் ஒரு சமயம் கூறினார்: “பத்திகைகளில் வேலை செய்வோரை மூன்று வகையாகப் பிரிக்கலாம். ஒருவகையினர்: போதிய தெளிவும் நுட்பமும் கூடிய செய்திகளைத் தரவல்லவர்கள், எழுத முடியாதவர்கள் ஆனாலும் எழுதிக்கொண்டிருப்பவர்கள். இரண்டாம் வகையினர்: கொஞ்சம் நன்றாக எழுதத் தெரிந்தவர்கள் - ஆனால் அவர்களை எழுதுமாறு யாரும் கேட்டுப் பயன்படுத்திக் கொள்வதில்லை. மூன்றாம் வகையினர்: நன்கு எழுதத் தெரிந்தவர்கள், எழுதவேண்டும் என்று விரும்புபவர்கள், ஆயினும் சூழல்கள் இடம் கொடுக்காததாலும், அவர்களை எழுதுமாறு வேண்டுவோர் இன்மையாலும் மனம் முறிந்து போனவர்கள்.”

பொதுவாக இதழாளர்கள் நல்ல எழுத்தாளர்களாக இருக்கவேண்டும்; இது அவர்களது அடிப்படைத் தேவை. ஒருவர் செய்திகளைத் திரட்ட வல்லவராக இருப்பதனாலோ, நன்கு பேட்டிகள் எடுக்கத் தெரிந்தவராக இருப்பதனாலோ, செய்தியிதழ்களுக்குத் தேவையான பிற கடமைகள் ஆற்றத் தெரிந்தவராக இருப்பதனாலோ மட்டுமே இதழாளராகிவிட முடியாது. அவற்றைத் தக்க முறையில் எழுதி வெளிப்படுத்தத் தெரியவேண்டும். அப்போதுதான் அவரைப் பத்திரிகையாளர் எனக் கருத முடியும். ஒரு நல்ல எழுத்தாளர், எளிதாகப் பத்திரிகையாளராகிவிட முடியும் - பிற எதையும் அந்தத் துறைக்குள் புகுந்தபின்பு தெரிந்து கொள்ளலாம்.

கருத்துரைக்கும் எழுத்துக்குச் சில அடிப்படைப் பண்புகள் உண்டு. முதலில் அவற்றைத் தெரிந்து கொள்ளலாம்.

## 1. எழுத்துக்கு ‘ எளிமை ’ ( Simplicity ) அவசியம்

பிறரோடு தொடர்புகொள்ள வேண்டுமானால், நீங்கள் சொல்வது அவர்களுக்குப் ‘புரிய வேண்டும்’. ராபர்ட் கன்னிங் (Robert Gunning) தெளிவாக எழுதுவதற்கெனப் பத்து விதிகளை வகுத்துள்ளார். அவற்றுள் ஏழு விதிகள் எளிமை பற்றியவையே. தமிழ் நாட்டில் தலைசிறந்த பத்திரிகையாளர்களில் ஒருவரான பாரதியாரும், எளிமை என்பதை மிகவும் போற்றியிருக்கிறார். கன்னிங் கூறும் ஏழு முக்கிய விதிகள்:

1. வாக்கியங்களைச் சிறிதாக அமைக்கவும்.

2. சிக்கலான தொடர்களைவிட, எளிய தொடர்களைக் கையாளவும்.

3. மக்கள் நன்கறிந்த வார்த்தைகளுக்கே முதன்மை கொடுக்கவும்.

4. தேவையற்ற சொற்களைத் தவிர்க்கவும்.

5. பேச்சு மொழியையே பயன்படுத்தவும்.

6. படிப்போர்க்கு மனச்சித்திரத்தை உண்டாக்கும் வண்ணம் சொற்களைக் கையாளவும்.

7. கருத்து வேறுபாட்டுக்காக எழுதவும்; உங்களைப் பிறர் புகழவேண்டும் என்பதற்காகவோ பிறரை அசத்த வேண்டும் எனவோ எழுத வேண்டாம்.

‘இம்மாதிரி விதிகள் ஒரு நிருபரால் எளிதாகப் பின்பற்றக் கூடியவை; ஒரு தலையங்க ஆசிரியர் சிக்கலான பிரச்சினைகளைப் பற்றி எழுத வேண்டியிருக்கிறது. ஆகவே இவற்றைப் பின்பற்றுவது கடினம்’ என்று தடை கூறலாம்; என்றாலும் பின்பற்றியே ஆக வேண்டும். ஏனென்றால், சிக்கலான விஷயங்களைப் பற்றிப் பேசும்போது எளிமை என்பது ஆழ்ந்த சிந்தனையை எடுத்துக்காட்டுவதாகிறது.

தினத்தந்தி பத்திரிக்கையாளர்களுக்கென ‘நாள்-தாள் கையேடு’ வெளியிட்ட சி.பா. ஆதித்தனாரும் வற்புறுத்திய ‘பொன்விதி’ “பேச்சுமொழியைக் கொச்சை நீக்கி எழுதுக” என்பதே. இதை அவர் பாரதியாரிடமிருந்தே பெற்றுக்கொண்டார் என்று கருத இடமிருக்கிறது.

## பாரதியாரின் கருத்துகள்

ஒவ்வொரு பத்திரிகையாளரும் பாரதியாரின் கருத்துகளை நன்கு மனத்தில் இருத்த வேண்டும்.

“வசனநடை, கம்பர் கவிதைக்குச் சொல்லியது போலவே தெளிவு, ஒளி, தன்மை, ஒழுக்கம் இவை நான்கும் உடையதாக

இருக்கவேண்டும். இவற்றுள் ஒழுக்கமாவது தட்டுத்தடையில்லாமல் நேரே பாய்ந்து செல்லும் தன்மை".

பொதுவாக, பேச்சு நடைக்கும் எழுத்து நடைக்கும் இடையில் அதிக வேறுபாடு இருக்கலாகாது. இது இருவேறுபட்ட மொழிகள் உருவாவதற்கே வழி வகுக்கும். இதனைப் பாரதியார் நன்கு அறிந்தவர். ஆதலினால் தெளிவு ஒழுக்கம் இவற்றை வலியுறுத்துகின்றார். இன்னொரு இடத்தில் கூறுகிறார்:

"ஓரிரண்டு நூற்பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்துதல் வேண்டும்" அதாவது பொருள் விளங்க எழுதுதல் என்பது கற்பனைக்குத் தடையாக இருக்கலாகாது என்கிறார்.

"கூடியவரை பேசுவது போலவே எழுதுவதுதான் உத்தமம் என்பது என்னுடைய கட்சி. எந்த ஒரு விஷயம் எழுதினாலும் சரி, ஒரு கதை அல்லது ஒரு தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம், எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகின்ற மாதிரியாகவே அமைந்துவிட்டால் நல்லது".

இந்தக் கருத்தைத்தான் சி.பா.ஆதித்தனார் தம் நடையேட்டில் வலியுறுத்தினார். சில நவ பத்திரிக்கையாளர்கள், தாம் எழுதும் விஷயம் சிக்கலானதால், நடையும் அதற்கேற்பச் சிக்கலாகத்தான் காணப்படும் என்கிறார்கள். அவர்களுக்குப் பாரதியின் அறிவுரை இது:

"பழக்கமில்லாத ஒரு விஷயத்தைக் குறித்து, அதாவது ஜனங்களுக்குச் சற்றேனும் பழக்கமில்லாமல் தனக்கும் அதிகப் பழக்கமில்லாத ஒரு விஷயத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தால் வாக்கியம் தத்தளிக்கத்தான் செய்யும். சந்தேகமில்லை. ஆனாலும் ஒரு வழியாக முடிக்கும்போது வாய்க்கு வழங்குகிறதா என்று வாசித்துப் பார்த்துக் கொள்ளுதல் நல்லது. அல்லது ஒரு நண்பனிடம் படித்துக்காட்டும் வழக்கம் வைத்துக் கொள்ளவேண்டும். சொல்லவந்த விஷயத்தை மனதிலே சரியாகக் கட்டி வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு கோணல், திருகல் ஒன்றுமில்லாமல் நடை நேராகச் செல்ல வேண்டும். முன்யோசனையில்லாமல் நேராக எழுதும் திறமையை வாணி

கொடுத்துவிட்டால், பின்பு சங்கடமில்லை. ஆரம்பத்திலே கட்டி முடித்த வசனங்களையே எழுதுவது நன்று. உள்ளத்திலே நேர்மையும் தைர்யமும் இருந்தால், கை பிறகு தானாகவே நேரான எழுத்து எழுதும், தைர்யம் இல்லாவிட்டால் வசனம் தள்ளாடும். சண்டிமாடு போல ஓரிடத்தில் வந்து படுத்துக்கொள்ளும்; வாலைப் பிடித்து எவ்வளவு திருகினாலும் எழுந்திருக்காது.”

அவர் தம் காலப் பத்திரிகை எழுத்துப் பற்றிக் குறிப்பிடுவது இன்றைக்கும் பொருந்தும் என்றே சொல்ல வேண்டும்:

“நமது தற்கால வசன நடையில் சரியான ஓட்டமில்லை, தள்ளாட்டம் அதிகமாகக் காணப்படுகிறது. உள்ளத்திலே தமிழ்ச் சக்தியை நிலை நிறுத்திக் கொண்டால் கை நேரான தமிழ்நடை எழுதும்.”

“நீ எழுதப்போகிற விஷயத்தை இங்கிலீஷ் தெரியாத ஒரு தமிழனிடம் வாயினால் சொல்லிக்காட்டு. அவனுக்கு நன்றாக அர்த்தம் விளங்குகிறதா என்று பார்த்துக் கொண்டு பிறகு எழுது. அப்போதுதான் நீ எழுதுகிற எழுத்து தமிழ்நாட்டிற்குப் பயன்படும். உனக்கு இஹபர ஷேமங்களுக்கு இடமுண்டாகும். இல்லாது போனால் நீயும் சிரமப்பட்டு மற்றவர்களுக்கும் பயனில்லாமல் போகிறது.”



எளிமை என்பது, ஒரு விஷயத்தை எழுதுபவர் எவ்வளவு ஆழமாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதைக் காட்டுவது. மேலும் தமது வாசகர்களுடைய அறிவு நிலைக்கு ஏற்ற வண்ணம் அவர் தம்மை அமைத்துக் கொண்டிருக்கிறார் என்பதையும் காட்டும்.

சான்றுக்காக, ஒரு தலையங்கத்தினைப் பார்க்கலாம். 1950களில் அமெரிக்காவில் ஒரு பொருளாதாரச் சரிவு (Depression) ஏற்பட்டது. அது தங்களுக்குத் தாங்களே அமெரிக்கர்கள் உருவாக்கிக்கொண்டது என்னும் விஷயத்தை உணர்த்த விரும்பினார், ‘பனாமா நியூஸ்’ இதழாசிரியர். அவர் வரைந்த தலையங்கம் (1953, மார்ச் 2) இங்கே மொழிபெயர்த்துத் தரப்படுகிறது:

## மனிதனின் பக்கம்

ஒரு நெடுஞ்சாலை ஓரத்தில் ஒரு மனிதன் வாழ்ந்து வந்தான். ‘ஹாட் டாக்’ (Hot dog) எனப்படும் இறைச்சி உணவுப் பண்டங்களைச் செய்து விற்று வந்தான்.

அவனுக்குக் காது கேட்காது; எனவே அவனிடம் ரேடியோ இல்லை.

அவனக்குச் சரிவரக் கண் தெரியாது; எனவே செய்தித்தாள்கள் படிப்பதில்லை.

ஆனால் அவன் நல்ல ‘ஹாட்டாக்’குகளைச் செய்து விற்றான்.

அவை நல்ல தரமுள்ளவை என்று ஓர் அறிவிப்பைச் சாலையோரத்தில் வைத்திருந்தான். சாலையோரத்தில் மக்களைக் கூவியழைத்து விற்பனை செய்தான். “ஹாட்-டாக் சாப்பிடுங்கள் சார்!”

மக்கள் வாங்கினார்கள்.

அதிகம் விற்பனையாயிற்று. ஹாட்-டாக் செய்யத் தேவையான இறைச்சியையும் ரொட்டியையும் கூடுதலாக வாங்கினான்.

பெரிய ஸ்டவ்வாக வாங்கிவைத்து வியாபாரத்தைக் கவனிக்க ஆரம்பித்தான்.

தனக்கு உதவி செய்வதற்காக, பட்டப்படிப்பு படித்த தன் மகனை வரவழைத்தான், ஆனால் ஒரு எதிர்பாராத விஷயம் நடந்தது. அவன் மகன் சொன்னான்: “அப்பா, ரேடியோ கேட்பதில்லையா நீங்கள்? பெரிய பொருளாதார வீழ்ச்சியே தேசத்தில் ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பியச் சந்தை சரிந்தே விட்டது. நமது நிலைமை, இன்னும் மோசம்”.

தந்தை சிந்தித்தான்: ‘என் மகன் கல்லூரியில் படித்தவன். அவன் செய்தித்தாள் படிக்கிறான்; ரேடியோ கேட்கிறான். அவன் சொன்னால் சரியாகத்தான் இருக்கும்’.

ஆகவே தன் மாமிச ஆர்டர்களையும் ரொட்டி ஆர்டர்களையும் அவன் ரத்து செய்தான். சாலையிலிருந்த போர்டையும் எடுத்துவிட்டான். வெளியிலே நின்று அவன் மக்களைக் கூவி, அழைக்கவில்லை.

அவனுடைய வியாபாரம் ஏறத்தாழ ஒரே நாளில் படுத்துவிட்டது.

“நீ சொன்னது சரிதான், மகனே” என்றான் தன்மகனிடம். “பெரிய பொருளாதார வீழ்ச்சிதான் ஏற்பட்டிருக்கிறது.

∴∴∴

வாசகர்களுக்கு எழுத்தாளர்களின் கட்டுப்பாடு மூன்று: தெளிவாக எழுதுவது; எச்சரிக்கை உணர்வோடு எழுதுவது; நல்ல நடையில் எழுதுவது. ‘எச்சரிக்கை’ என்பது, வாக்கிய அமைப்பில் அர்த்த மயக்கத்தைத் தவிர்ப்பது ஆகும். அர்த்த மயக்கம் என்பது (Ambiguity) இரண்டு அர்த்தம் வருமாறு, அல்லது பல அர்த்தங்கள் படுமாறு எழுதுதல். இருண்மை (அர்த்தம் தெளிவாகாத நிலை-obscrulty) கூடாது.

## எழுதும்போது கவனிக்க வேண்டியவை

செய்தித்தாள்களுக்குக் கருத்துரை எழுதுவதைப் பயில, திரு.வி.க., வ.வே.சு. ஐயர், வரதராஜூலு நாயுடு, கல்கி, ஏ.கே. செட்டியார், அண்ணாதுரை, பெரியசாமித் தூரன், மு. வரதராசனார், ஏ.என். சிவராமன், டி.எஸ். சொக்கலிங்கம் போன்றோர் எழுத்துகளைப் பயிலுவது மிக அவசியமானது. கருத்துரை எழுத விரும்புபவர்க்குச் சில கட்டளைகள்:

1.என்ன விரும்புகிறாயோ அதனை நன்கு சிந்தித்து, சரியான அமைப்புக்குள் அதைக் கொண்டு வருக.

2.சுருக்கமாக எழுதுக. வாக்கியங்களைச் சிறியதாக அமைக்க. அலங்காரம் மிக்க நீண்ட வாக்கியங்களைத் தவிர்க்க. சொல்லி (எழுதி) முடித்தாயிற்று என்றால் நிறுத்துக.

3.தனித்த, உனக்கே சொந்தமான, ஆனால் எளிய மொழியைப் பயன்படுத்துக. மிகைச் சொற்கள், அலங்காரச் சொற்கள், தேவையற்ற

மரபுத்தொடர்கள் (Idioms), வாசகர்களுக்குத் தெரிந்தவற்றையே சொல்லும் பழமொழிகள் வேண்டாம்.

4.செய்வினையைப் பயன்படுத்துக. செயப்பாட்டு வினை வேண்டாம். வார்த்தைகளைத் தேர்ந்தெடுப்பதில் நானாவிதத் தன்மை வேண்டும். வாசகர்களுக்குப் பரிச்சயமான மொழியைப் பயன்படுத்துக. எதிர்மறையாக எழுத வேண்டாம்; உடன்பாட்டு முறையில் எழுதுக.

5.என்ன எழுதுகின்றாயோ, அதை நன்கு சிந்தித்து, எப்படிச் சொன்னால் வாசகர்கள் புரிந்து கொள்வார்களோ, எப்படி எழுதினால் அதை நன்கு வெளிப்படுத்த முடியுமோ, அப்படி எழுதுக.

6.வாக்கியங்கள் சரியானவை, பிழையற்றவை என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளுக. பொருத்தமான, சரியான வார்த்தைகளையே பயன்படுத்தியிருக்கிறாயா என்று பார்க்கவும். வாக்கியங்கள் எளிமையாக இருக்கின்றனவா என்று கவனிக்க.

7.கட்டுரை வளர்ச்சி தர்க்கரீதியாக இருக்க வேண்டும். ஆகவே எண்ணங்களை, ஒன்றின் இயல்பான தொடர்ச்சியாக மற்றது அமையுமாறு, வரிசைப்படுத்துக. மூவகைக் காலங்களையும் (tenses) ஒன்றாகக் கையாண்டு குழப்பவேண்டாம்.

8.ஒருதலைச் சார்பின்றி எழுதுக. மறைமுகமாகவும் அது இடம்பெறாதவாறு பார்த்துக்கொள்ளுக.

9.அதிகப்படியான வார்த்தைகள், தொடர்கள், வாக்கியங்கள், தகவல்கள், சம்பவங்கள் எதனையும் அகற்றுக.

10.நேரமிருக்குமாயின் நல்ல எழுத்தாளர்கள், பத்திரிகையாசிரியர்களிடம் உனது கட்டுரையைக் காட்டி அதுபற்றிய விமரிசனத்தைப் பெறுக. உன்னுடைய தவறுகளை நீயே கண்டறிந்து திருத்திவிட முடியும் என்று திடமாக இருக்கலாகாது.

11.உனது செய்தியை எவ்வளவு குறைந்த வார்த்தைகளிலே சொல்லமுடியுமோ அப்படிச் சொல்லுக. ஒரே வாக்கியத்தில் ஏராளமாக வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போனால் தெளிவு குறைந்துவிடும்; வெட்டி எறிக.

## பருமை ( Concreteness )

பருமை என்பது, நுண்மைக்கு எதிர்ச்சொல். ‘நன்கு புலப்படக்கூடியது’, ‘உருவம் கொண்டது’ என்று இதற்கு அர்த்தம். எல்லா வார்த்தைகளுமே ஓரளவு நுண்மை (obstractness) வாய்ந்தவைதான் என்றாலும், நிஜத் தன்மை கொண்டதாக, பார்வைக்குப் புலப்படக் கூடிய சித்திரம் மாதிரியாக எழுத்தை உருவாக்கிக் கொடுப்பது அவசியம். பார்வைப் புலனைத் தூண்டக் கூடிய, மனச் சித்திரத்தை அமைக்கும் வார்த்தைகளையே நல்ல எழுத்தாளர்கள் பயன்படுத்துகிறார்கள்.

பருமைத்தன்மை என்பது ‘குறித்துச் சொல்லுதல்’ (நேரடி எழுத்து) ஆகும். ‘சுற்றிவளைத்துச் சொல்வது’ என்பதற்கு எதிரானது. எழுதும்போது, பொதுக் கூற்றுகளுக்கு உதாரணம் தந்து சொல்லவேண்டும். ஒரு சான்றினைப் பார்ப்போம். பாரதியார், 1920 நவம்பர் 19 அன்று எழுதிய ஒரு கட்டுரைப் பகுதி;

## ‘ ஐர்லாந்துக்கு ஸ்வதந்த்ரம் கொடுக்கமாட்டோம் ’

...ஐர்லாந்து விஷயமான ரஸமிகுந்த லண்டன் ராய்ட்டர் தந்தியொன்று நேற்று வந்தது. அதன் விவரமான வடிவத்தை நேற்றைய மித்திரன் தந்திப் பக்கங்களிலே காணலாம். மிஸ்டர் ஆஸ்க்வித் (மாஜி ப்ரதம மந்திரி) இங்கிலாந்துக்கு ராணுவ விபத்துகள் ஏற்படாதபடி தடைகளேற்படுத்திக் கொண்டு மற்றப்படி ஸம்பூர்ணமான ஸ்வராஜ்யம் கொடுக்கவேண்டுமென்று பார்லிமெண்ட் ஸபையில் சொன்னார்.

எழுந்தார் லாய்ட் ஜ்யார்ஜ் மந்திரி. கத்தியைச் சுழற்றத் தொடங்கிவிட்டார். மெய்யான உருக்குக் கத்தியன்று; பாஷைக்கத்தி; வாக்கு வாள். ஐர்லாந்துக்கு ஸ்வாதீனம் கொடுத்த பிறகும் கூடப் பழைய புண்களை மறந்து ஐர்லாந்து இங்கிலாந்திடம் நட்புச் செலுத்துமென்றும் மிஸ்டர் லாய்ட் ஜ்யார்ஜ் நம்பவில்லை, அவரால் நம்ப முடியவில்லை. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னுமாம்... ஆதலால், ஐர்லாந்தை இறுகப் பிடித்துக்கொண்டிருக்கும் கைப்பிடியை நெகிழ விடப்போவதில்லை என்று மிஸ்டர் லாய்ட் ஜ்யார்ஜ் சொல்லுகிறார். இங்கு.

“மீதெழும் மொக்குளன்ன யாக்கையை விடுவதல்லால்

சீதையை விடுவதுண்டோ, இருபது திண்டோள் உண்டாக?”

(நீர்மீதெழும் குமிழி போன்ற இந்தச் சரீரத்தை விட்டாலும் விடுவமேயல்லாமல், என் உறுதியான தோள் இருபதும் இருக்கையிலே, நான் ஸீதையை விடுவேனென்று நினைக்கவும் செய்யலாமோ?)

என்று ராவணன் சொல்லியதாகக் கம்பர் எழுதியிருக்கிற வரிகள் எனக்கு ஞாபகத்துக்கு வருகின்றன. ராவணனுடைய கதி மிஸ்டர் லாய்ட் ஜ்யார்ஜூக்கு வரக்கூடாதென்று நான் மனப்பூர்வமாகக் கடவுளை வேண்டுகிறேன்.

∴∴∴

இந்த உதாரணத்தில் பருமைத் தன்மையோடு எழுதுவது, மனச் சித்திரத்தை உண்டாக்குவதாக எழுதுதல், உதாரணம் தந்து எழுதுதல் ஆகிய பண்புகளை நன்றாகக் காணலாம்.

## அமைத்துச் சொல்லுதல்-தொடக்கம்

கருத்துக்கேற்ற வரிசைமுறைப்படி வாக்கியங்களையும் பத்திகளையும் வளர்த்துச் சொல்லுதலே ‘அமைத்துச் சொல்லுதல்’ ஆகும். ஒரு கருத்து, இயல்பாக அடுத்த கருத்துக்கு இட்டுச்செல்ல வேண்டும்.

“கருத்துரைத்தல், சாதாரண செய்திக் கட்டுரையின் அமைப்பினின்றும் முற்றிலும் வேறுபட்டது. தலையங்கமும் கருத்துக் கட்டுரைகளும் ஒரு பார்வைக் கோணத்தின், அடிப்படையில் எழுதப்படுவன. எனவே செய்திக் கட்டுரையின் வடிவமான தலைகீழ்க் கோபுர முறையினை இங்கே பயன்படுத்தலாகாது. ஒரு தலையங்கத்திற்கு/ கருத்துக் கட்டுரைக்குச் சாதாரணக் கட்டுரைகள் போன்றே மூன்று பகுதிகள் உண்டு-தொடக்கம், வளர்ச்சி (உட்பகுதி), தீர்மானம் (முடிவு) என்பவை அவை”.

தொடக்கம் என்பது கருத்துரைக்க எடுத்துக் கொள்ளும் விஷயம், பிரச்சினை அல்லது பொருள் பற்றி எடுத்துரைப்பது. அந்தப் பொருளைப் பற்றி விரித்து எழுதுதல் உடற்பகுதி அல்லது வளர்ச்சிப்பகுதி. வளர்ச்சிப் பகுதியில் கொடுக்கப்பட்ட கருத்துரையிலிருந்து பெறப்படும் முடிவு அல்லது தீர்மானம் என்பது மூன்றாவது பகுதி. முதன்மைப் பத்தி 'லீட்' எனப்படும். ஒரு விஷயத்தைச் சுருக்கிச் சொல்வதற்கான ஆணிமாதிரிப் பயன்படுவது லீட் (Lead).

முதல் வாக்கியம் அல்லது முதல் சில வாக்கியங்கள் மிக வெளிப்படையாக அமையவேண்டும். என்ன விஷயம் பற்றி எழுதப்படுகிறது என்பதைத் தெளிவாகச் சொல்லி, அது வாசகர்களுக்கு ஏன் முக்கியமானது என்பதைப் பிறகு விளக்கவேண்டும். சுருக்கமாகவும், சுவையாகவும், குறித்த செய்தியைச் சொல்லுவதாகவும் 'லீட்' அமைய வேண்டும். ஒரு சொற்சித்திரத்தில் அமைவதுபோலவே, ஆற்றல்கொண்டும் கவர்ச்சிகரமாகவும் தொடக்கம் அமைய வேண்டும். படிக்கும் வாசகரின் கவனத்தைப் பிடித்து ஈர்த்து நிறுத்தி வைக்கக்கூடியவாறு காரசாரமாகவும் (Provocative) இருக்க வேண்டும். சில சமயங்களில் மரபுக்கு மாறாக, தீர்மானம் (Thesis) அல்லது ஆசிரியருடைய தீர்ப்பு அல்லது முத்தாய்ப்பு என்பதும்கூட ஒரு தலையங்கத்தின் தொடக்கத்திற்குச் சிறப்பாக உதவக்கூடும்.

சுற்றி வளைக்காமல் நேரடியாக விஷயத்துக்குச் செல்வது சிறந்த முறை. உதாரணம்:

## சங்கீத விஷயம்

பொதுப் பள்ளிக்கூடத்தில் சங்கீதம் கற்றுக் கொடுக்க வேண்டும். இது மற்ற நாகரிக தேசங்களில் சாதாரணமாக நடந்து வருகிறது. உயிரிலே பாதி சங்கீதம். சாஸ்திரத்தை யாரும் பேணாமலிருந்தால், பாடகர்கள்கூட அதைக் கைவிட்டுவிடுவார்கள்.

இது 1916 டிசம்பர் 19 அன்று பாரதியார் எழுதிய ஒரு தலையங்கம். சுற்றி வளைக்காமல் நேராக முதல் வாக்கியத்திலேயே அவர் விஷயத்துக்கு வந்துவிடுவதைக் கவனிக்கவேண்டும்.

முத்தாய்ப்பாகச் சொல்கிற கருத்தை முதலிலேயே எடுத்து ஆண்டுவிட்டு, அதற்கான காரணங்களையும் உபாயங்களையும் பின்னால் அடுக்கிக்கொண்டு செல்லுகிறார். இருந்தாலும் வயப்படுத்தும் தன்மை கொண்ட எழுத்துகளின் தொடக்கத்தில் பின்வரும் மூன்று பகுதிகள் காணப்படலாம்.

1.முகப்புரை (Exordium): எந்த விஷயத்தை அல்லது பிரச்சினையைப் பற்றித் தலையங்கம் பேசப் போகிறதோ, அதன்மீது பரிவும் ஆர்வமும் உண்டாகின்ற மாதிரி இது எழுதப்படும்.

2.சுருக்கமான எடுத்துரை (Brief narrative): அந்த விஷயத்தின் அல்லது பிரச்சினையின் பின்னணியை எடுத்துக்காட்டுவதற்கு இது உதவும்.

3.இடைக்கூற்று (Partition): தீர்மானத்தை அல்லது முடிவைக் கோடிகாட்டி எந்தத் திசையில் தலையங்கம் வளரப்போகிறது என்பதைச் சுட்டிக் காட்டுவது.

ஒரு சிறிய முதன்மைப் பத்திக்குள்ளாகவே இவை அனைத்தும் அமையுமாறும் எழுதலாம். ஒவ்வொன்றாக ஒவ்வொரு பத்தியில் அமையுமாறும் எழுதலாம். முகப்புரை பலவிதங்களில் அமைக்கப்படலாம். சொற்சித்திரம் மாதிரியான முகப்பினைச் சிலர் கையாள்கிறார்கள்.

எடுத்துரையும் பல விதங்களில் அமையலாம். ஏதேனும் ஒப்புமையைக் கையாண்டு உயிரூட்டும் விதமாக அமையலாம். இடைக்கூற்றும் வெவ்வேறு விதங்களில் அமையலாம். எப்படியிருப்பினும் வாசகர் கவனத்தை அவை கவர்ந்து, மேற்கொண்டு வாசிக்குமாறு தூண்டவேண்டும் என்பதே முக்கியம்.

## ‘ நேர்க்கோட்டில் ’ வாதம் புரிதல்(Arguing in a straight line)

தொடக்கத்திற்குப் பிறகு வருவது வளர்ச்சிப் பகுதி, தொடக்கப்பகுதி ஒரு விஷயத்தை அல்லது பிரச்சினையை இனம் காட்டிவிட்டது என்றால், தகுந்ததொரு முடிவுக்குக் கொண்டு செல்லும் விதமாக வளர்ச்சிப் பகுதி வரவேண்டும். தக்க வாதங்களை முன்வைத்து அதற்கான ஆதாரங்களையும் தந்து செல்லவேண்டும். ஏற்புடைய,

தூண்டுகின்ற மொழியைக் கையாள வேண்டும். உடற்பகுதியை வளர்க்க ஒரு சிறப்பான வழி, எடுத்துக்கொண்ட பிரச்சினைக்குத் தீர்வு எது, அதற்கான மாற்றுகள் எவை என்று சிந்தித்து வளர்ப்பது. பிறகு அவற்றில் எது சாத்தியம் என்று ஆசிரியர் கருதுகிறாறோ அதைக் காரணங்களோடு முன் வைக்க வேண்டும். மெய்ம்மைகளின் அடிப்படையில் சிந்தனைகளைக் தட்டியெழுப்ப வேண்டும். உதாரணங்கள் தரலாம்; முடிவுகள் சொல்லலாம்; விற்பன்னர்களின் கருத்துக்களை மேற்கோள் காட்டலாம். ஆனால் அர்த்தமற்ற, அலங்காரமான பொதுமைப்படுத்தலைத் தவிர்க்கவேண்டும். குறித்த கருத்தைப் பருமைநோக்கில் எழுத வேண்டும்.

முக்கியமாக, தருக்கக் குற்றங்கள் அல்லது போலி நியாயங்கள் (Logical Fallacies) எனப்படுபவை ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இவற்றைப் பற்றிப் பின்னொரு சந்தர்ப்பத்தில் காண்போம்.

நேரான வாதம் புரிதல் என்பது காரணகாரியத்தொடர்பு காட்டி ஒவ்வொரு இழையாகப் பின்னிக் கொண்டு செல்லுதலாகும். இறுதியில் முடிவுரைத்தலில் இவ்வாதங்களின் பயன், தொகுப்புற்று நிறைவாகிறது. நேரான வாதம் என்பதற்கு இன்னொரு அர்த்தமும் உண்டு. செய்திகளை ஒழுங்குபடுத்தித் தருதலும், இறுதியாக ‘எல்லாம் அதனதன் இடத்தில் பொருந்தி நிறைவாக இருக்கிறது’ என்ற எண்ணத்தைப் படிப்பவர்க்கு உருவாக்குதலுமே அது.

நேராக வாதம் புரிதலுக்கு ஒரு சான்று (தருக்க முறைப்படி வளர்த்துச் செல்லுதல்):

## தாய்மொழி வாயிலாகக் கல்வி

உலகில் வேறு எந்த நாட்டிலும் இல்லாத சிக்கல்கள் தமிழ்நாட்டிலும், பொதுவாக இந்தியாவிலும் உண்டு. ஒரு ஆங்கிலேயனோ, ஃப்ரெஞ்சுக்காரனோ, ஜப்பானியனோ ‘நான் என் தாய்மொழியில்தான் கல்வி கற்க வேண்டுமா’ என்ற வினாவை எழுப்புவதில்லை. இயல்பாகத் தாய்மொழி வாயிலாகவே கல்வி கற்கிறார்கள். கல்வியறிஞர்களும் உளவியலாளர்களும் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்பதே மனநலத்துக்கேற்றது, சிறந்தது என்று

ஆணித்தரமாகக் கூறியிருக்கிறார்கள். ஆனால், தமிழ் நாட்டிலோ எவ்வளவு பணம் கொடுத்தும் எல்.கே.ஜி.யில் ஆங்கில வழிக் கல்வியில் மட்டுமே பிள்ளைகளைச் சேர்க்க அலைகிறார்கள். இந்த முரண்பாடு ஏன்?

## தாய்மொழி வழிக் கல்வியே சிறந்தது

தாய்மொழியே குழந்தை பிறந்ததிலிருந்து உள்ளத்தில் ஏற்பது. தாய்மொழியின் மொழியமைப்புகளும், எந்தச் செய்தியை எப்படிக் கூற வேண்டும், எதைப் பேசலாகாது, எவற்றில் கவனம் செலுத்த வேண்டும் போன்ற அடிப்படைகளும் தான் ஒருவனது சிந்தனைப் போக்கினைத் தீர்மானிக்கின்றன. தாய்மொழியின் வாயிலாகப் பெறப்படும் மொழியின் தர்க்க அமைப்புத்தான், பிறகு அவனது கல்வி கற்கும் ஆற்றலையே தீர்மானிக்கிறது. ஆகவே அறிவு வளர்ச்சி பெறவும் நல்ல சிந்தனைத் திறன் உருவாகவும் தாய்மொழிக் கல்வியே ஏற்றது.

அறிவு வளர்ச்சி, சிந்தனைத் திறன் மட்டுமல்ல, சமூக உணர்வைத் தட்டியெழுப்ப வல்லதும் தாய்மொழியே. அதனால்தான் அரசியல் மேடைப்பேச்சாளர்கள் ஆற்றலோடு பேசி, வாக்குச் சீட்டுகளைப் பெறுகிறார்கள். ஆங்கிலத்தின் வாயிலாகப் படிப்பது அல்லது பிறமொழி வாயிலாகக் கற்பது என்பது நமது மக்களோடு ஒட்டுறவின்மையை ஏற்படுத்தி, சமூகத்திலிருந்து நம்மை அந்நியப்படுத்திவிடுகின்றது. ஆகவே சமூகம் எக்கேடு கெட்டால் என்ன, நான் பிழைத்தால் போதும் என்ற சுயநல மனப்பான்மை உருவாகிறது. சமூகம் பொது நிலையில் முன்னேற வேண்டுமானால் தக்க உணர்வுகளைத் தூண்டியெழுப்பத் தாய்மொழி வழிக் கல்வியே சிறந்தது.

இறுதியாக, சிறு வயதில் நன்கு புரிந்து கொண்டு படிக்கும் ஆற்றலையும் தாய்மொழியே தருகிறது. பிறமொழி வாயிலாகக் கல்வி கற்றல், புரிந்து கொண்டு படித்தலுக்கு உதவுவதில்லை. இதனால் புரியாமலேயே மனப்பாடம் செய்தல், தனிக் கற்பித்தல் (டியூஷன்) போன்ற தீங்குகள் உருவாகின்றன.

## ஆங்கில வாயிலான / பிறமொழி வாயிலான கல்வியின் குறைகள்

மேலே கூறியதற்கு நேர் எதிர்மாறான விளைவுகளைப் பிறமொழி வாயிலான கல்வி உண்டாக்குகிறது. தாய்மொழி வாயிலான கல்வி என்பது, பிற மொழிகளைக் கற்பதற்குத் தடையாக இருத்தல் எனச் சிலர் தவறாக நினைக்கின்றார்கள். அப்படியல்ல. பிறமொழிகளைக் கற்பது வேறு; பிறமொழிகள் வாயிலாகக் கல்வியை அமைத்துக் கொள்வது வேறு; முன்னது ஆர்வத்தின் விளைச்சல்; பின்னது அடிமை மோகத்தின் வெளிப்பாடு.

தமிழ்நாட்டில் ஆங்கில வழிக்கல்வி, அடிமை உணர்வைத் தான் இத்தனை ஆண்டுகளாக உருவாக்கியுள்ளது. "உலகிலேயே சிறந்த இரண்டாந்தர அறிவாளிகள் தமிழர்கள்" என்று 'ஸ்பான்' என்னும் அமெரிக்க இதழ் மதிப்பீட்டுள்ளது. அதாவது அடிமைத்தனமாக விளைவுகளைப் பற்றிய கவலையோ சமூக உணர்வோ இன்றித் தத்தம் துறைகளில் மட்டும் புத்தியைச் செலுத்துபவர்கள் என்பது இதன் பொருள். இப்படிப்பட்ட சிந்திக்கும் திறனின்மையையும், சமூக உணர்வின்மையையும் ஏற்படுத்துவது ஆங்கிலக்கல்வி. ஆங்கிலக்கல்வி படித்த எத்தனைப் பேர் நம் நாட்டில் ஏழைகளாக வாழும் அடித்தள மக்களைப் பற்றிக் கவலை கொண்டிருக்கிறார்கள்? சுயநலம் ஒன்றே அவர்களுக்குப் போதுமானது.

முன்பே கூறியபடி, புரிந்து கொள்ளாமலே மனப்பாடம் செய்யும் பழக்கத்தையும் சிறுவயதிலிருந்தே குழந்தைகளுக்கு ஆங்கில வழிக் கல்வி ஏற்படுத்திவிடுகிறது. குழந்தைகளுக்கு ஒரு சுமையாகவும் அப்படிப்பு அமைந்து விடுகிறது. அதன் பௌதிக வெளிப்பாடு தான் மூட்டை போலப் பாடப் புத்தகங்களைச் சுமந்து கொண்டு நம் நாட்டுக்கு ஏற்காத 'டை' 'சாக்ஸ்' 'ஷூ' அணிந்து கொண்டு (இவை குளிர்ப்பிரதேசங்களுக்காக ஏற்பட்டவை) முதுகு வளைந்து செல்லும் குழந்தைகள்.

## தமிழ்வழிக்கல்வி ஏன் தமிழ்நாட்டில் வளரவில்லை ?

முதல் காரணம். நமது அடிமை மோகம். நமக்கு நமது பிள்ளைகள் 'அப்பா' 'அம்மா' என்று கூப்பிட்டால் பிடிப்பதில்லை. 'மம்மி' 'டாடி'

என்று கொஞ்ச மகிழ்கின்றோம். 'தமிழ் தெரியாது' என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்பட்டுக் கொள்கிறோம். 'பிரதாப முதலியார் சரித்திரத்'தில் ஒரு கதை: ஆங்கிலக்கல்வி படித்த ஓர் அதிகாரி, தனது சொந்த அப்பனையே வேலைக்காரன் என்று சொன்னாராம். அதுபோல,

இரண்டாவது காரணம், தமிழில் அல்லது தமிழ் வாயிலாகப் படித்தால் வேலை கிடைக்காது என்று பல பேர் தவறாகக் கருதுகிறார்கள். படித்தவர்களுள் 2% பேர்கள் மட்டுமே தமிழ்நாட்டுக்கு அப்பால் வெளி மாநிலங்களுக்கோ வெளிநாடுகளுக்கோ சென்று பணிபுரிய வாய்ப்புக் கிடைக்கிறது. மற்ற அனைவரும் தமிழ்நாட்டில் தமிழர்களுக்காகப் பணி புரிய வேண்டியவர்களே. அப்போது தமிழே முதல் தேவையல்லவா?

மூன்றாவது காரணம், தமிழ் தாய்மொழிதானே, படிக்காமலே தானே வரும்; பிறமொழிகளைத்தான் படிக்கவேண்டும் - என்ற மனப்பான்மை. இதுவும் தவறுதான். தமிழ்மொழியின் அமைப்புத்தான் சிந்தனையை உருவாக்குகிறது என்று மேலே கூறினோம். சிந்தனையின்றி அடிமைகளாக இருக்கவே தமிழ்மொழி கல்லாமை உதவும்.

நான்காவது, அரசாங்க ஆதரவின்மை, அரசாங்கம் நல்ல தமிழ்ப்பள்ளிகளை உருவாக்கி யாவருக்கும் ஒரே மாதிரியான கல்வி என்ற நிலையை (15 வயது வரையிலேனும்) ஏற்படுத்தியிருந்தால் தமிழ்வழிக்கல்வி வளர்ந்திருக்கும். அரசாங்கமே தனது வணிகக்கொள்கை காரணமாக, தனியார் நிறுவனங்களுக்குப் பணம் பண்ண ஒரு வாய்ப்பாக ஆங்கிலக்கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி வழியமைத்துக் கொடுக்கிறது. குறைந்த அளவு அடிப்படை, நடுத்தரக் கல்வி நிறுவனங்களேனும் அரசு சார்பானவையாக (இதற்குத் தரம் தாழ்ந்தது என்று அர்த்தமல்ல), தரமானவையாக அமைக்கப்பட வேண்டும்.

ஐந்தாவது, தமிழில் சரியான பாடப்புத்தகங்கள் இல்லை, அவற்றை உருவாக்கத் தேவையான கலைச்சொற்கள் இல்லை என்கிறார்கள். இது உயர்கல்விக்கு மட்டுமே பொருந்தக் கூடியது. அடிப்படை, நடுத்தரக் கல்விக்கான பாடப் புத்தகங்களும் ஏராளமாகத் தமிழில்

உள்ளன; நல்ல பார்வை நூல்களும் உள்ளன; கலைச் சொற்களுக்கும் பஞ்சமில்லை.

யாவற்றுக்கும் மேலாக, நமக்கு அறிவு வளர்ச்சியில் கவலையில்லை. எப்படியோ ஒரு 'டிகிரி' வாங்கிவிட்டு, ஏதாவது ஒரு வேலைக்குப் போனால்போதும் என்ற மனப்பான்மை நம்மிடம் வளர்ந்திருக்கிறது. எந்தத் துறையிலும் அறிவு மேம்பட்டால்தான் வளர முடியும் என்ற தன்னம்பிக்கை இல்லை. இதனால் ஒரு சில படிப்புகளே மேம்பாடு அடைய, மற்றவை பயனற்றவை எனக் கருதப்படும் நிலை இருக்கிறது.

**வளர்ச்சிக்கு வழிகள்**

தமிழன் தனது அடிமை மோகத்தை விட்டொழிக்க வேண்டும். இன்னும் மெக்காலேயின் பிசாசு நம்மைப்பிடித்து ஆட்டிக்கொண்டிருக்கிறது. 'கறுப்புத்தோலுள்ள வெள்ளை அடிமை' களை உருவாக்க நினைத்த மெக்காலே இருநூறு ஆண்டுகளாக நம்மைப் பிடித்திருக்கிறான்.

ஆங்கிலத்தில், ஆங்கில வாயிலாகப் படித்துவிட்டால், ஆங்கிலம் பேசிவிட்டால் (ஸ்போக்கன் இங்கிலீஷ்) வேலை கிடைத்துவிடும் என்னும் மடமை ஒழிய வேண்டும்.

சமூக நலனில் மக்கள் ஆர்வம் பெருகவேண்டும். சிந்தனைத் திறன் வேண்டும். நாம் மட்டும், நல்ல பொருளாதார நிலை படைத்தவர்கள் மட்டும் - கல்வியை விலை கொடுத்துவாங்கிவிட்டால் போதும் என்ற எண்ணம் கூடாது. நூற்றுக்கு நூறு விழுக்காடு தமிழ்நாட்டில் நல்ல கல்வி பெற வேண்டும் என்ற எண்ணம் வேண்டும்.

அரசு, ஐம்பதுகளில் இருந்ததுபோல, நல்ல தரமான அரசுப் பள்ளிகளை உருவாக்கி, தாய் மொழி வாயிலாகக் கல்வியை அனைவர்க்கும் வேறுபாடின்றி அளிக்கவேண்டும்.

உயர்கல்வி நிலையில், கலைச்சொல்லாக்கம் புரியவும், தக்க பாடநூல்கள், பார்வை நூல்களை எழுதவும் அறிஞர்கள் முன்வரவேண்டும். அதற்கு அரசு (ஒருங்கிணைப்புக்கும் ஊதியத்துக்கும்) உதவி புரியவேண்டும்.

படிக்கும்போது, எந்தத் துறையானாலும் நாம் முன்னேறுவோம் - நன்கு படிப்போம் என்ற எண்ணம் வேண்டும். எப்படியேனும் பட்டம் வாங்கும் சிந்தனை அற்றுப்போக வேண்டும்.

இவற்றையெல்லாம் செய்தால், தாய்மொழி வாயிலாகக் கல்வி நிலவும்; சிந்தனை வளரும்; சமூக நலன் ஓங்கும். எல்லாவற்றிற்கும் அமெரிக்காவையும், ஜப்பானையும் மேற்கோள் காட்டிக் காப்பியடிக்க நினைக்கும் நாம், தாய்மொழி வாயிலாகக் கல்வி என்பதிலும் அப்படிச் செய்தால் என்ன? (இது காப்பியடிப்பவர்களுக்கு, இரண்டாந்தர மூளைகளுக்கு ஒரு ஆலோசனை). எனினும் நமது நாட்டில் இன்று நிலவும் நிலையைப்பார்க்கும் போது அவநம்பிக்கையும் ஏமாற்றமுமே மனத்தில் தங்குகிறது.

ஓவ்வொரு பாராவும் ஒரு புதிய விஷயத்தைச் சொல்வதாக அமைந்தாலும், இணைப்புச் சொற்கள் (ஆனால், அப்படியே, எவ்வாறிருப்பனும்... போன்றவை) தந்து கருத்தொருமையை ஏற்படுத்துதல் அவசியம், சொல் தொடர்புகள் (Word Bridges) இதற்குப் பெரும் துணை புரியக்கூடியவை.

சான்று: (பாரதியின் ஒரு தலையங்கத்திலிருந்து)

...இதுவரை பழைய கட்சிக்காரருக்கு முக்கிய தர்மமாக இருந்த விண்ணப்ப முறையை நேற்று அவர்கள் தாமாகவே பேதமையாகும் என்று நிறுத்திவிட்டனர்.

அப்படி அவர்கள் விண்ணப்பம் செய்ய விரும்பாத போதிலும்...

(இங்கு, ;அப்படி' என்பது இணைச்சொல். இருவேறுபட்ட கருத்துகளை இணைக்க வருகிறது).

...அவர்கள் சர்க்காரை ஸஹஸ்ரநாமம் சொல்லி அர்ச்சனை செய்வது தான் சரியான பாதை என்று நினைப்பது வினோதமாயிருக்கிறது.

இவர்கள் என்ன நினைத்தாலும் சரியே. இனி அதைப் பகிரங்கமாக வெளியிட்டுக் கூறத் துணியமாட்டார்கள் என்பது நேற்றே தெளிவாய்விட்டது.

(இங்கே ‘நினைப்பது’ என்பது, தொடர்புச் சொல்லாக Word Bridge ஆகப் பயன்பட்டுள்ளது.)

ஒழுங்கமைவு குறித்த அணிகள் சில இருக்கின்றன. ஒழுங்கமைவு என்பது இயல்பான செயல் தொடர்ச்சி அல்லது வாதத் தொடர்ச்சியினைக் குறிக்கும். ஒத்துச் செல்லும் வாக்கிய அமைப்பு, முரண்பாட்டு வாக்கிய அமைப்பு இரண்டினையும் விளைவு கருதிக் கையாளலாம்: “அவன் அறைக்கு நடந்தான். சாவியை எடுத்துக் கதவைத் திறந்தான், ஏதோ மயக்கத்திலிருப்பவன்போல் சென்று நாற்காலியில் அமர்ந்தான்.” (இது, ஒத்துச் செல்லும் வாக்கிய அமைப்பு). “மக்களுள் பலருக்குத் தரை வாகனங்களில்தான் செல்ல முடிகிறது. சிலருக்கோ வானூர்தியிலே பயணம் செய்யக் கொடுத்து வைத்திருக்கிறது” (முரண்பாட்டு அமைப்பு.)

உடன்கோள் - எதிர்க்கோள் வாக்கிய அமைப்புமுறை (Thesis-Antithesis construction). ஒரு சிந்தனையை . மையத்திலிருத்த உதவும், “ஊழல் விவகாரம் தொடர்பாகத் தமக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லிவிட்டதாகப் பிரதமர் கூறுகிறார்; இந்திய மக்களுள் பெரும்பான்மையினரோ வேறுவிதமாக நினைக்கிறார்கள் என்பதைத் தேர்தல் முடிவுகள் நிரூபிக்கின்றன” (முதல் வாக்கியம் உடன்கோள்; அடுத்தது, எதிர்கோள்).

திரும்பத் திரும்பக் கூறல் (Repetition), இணைத்தொடர் அமைப்பு (Parallelism), வரிசையிடல் (Enumeration).

இவை மூன்றும் தமக்குள் இலேசான உறவுடையவை. ஒரே தொடர் அல்லது சொல் திரும்பத் திரும்பச் சொல்லப்படுவது, திரும்பக் கூறல் (Repetition).

“பாரதி பராசக்தியை வழிபட்டவன்; பாரதி, தாய்நாட்டை ‘மாநிலத் தாயாக்கி’ வழிபட்டவன்; பாரதி பெண்மையை வழிபட்டவன்”. (திரும்பக்கூறல்).

இணையமைப்பு (Parallelism), நேர்க்கோட்டு வாதத்தில், விவாதத்தை முன்னெடுத்துச் செல்லும் சக்தியும் உடையது; படைப்புத் திறன்மிக்க திரும்பக்கூறலையும் உள்ளடக்கியது; தெளிவு, அழுத்தம் தருதல், வசப்படுத்தல் ஆகிய விளைவுகளைத் தரவல்லது. இரண்டு அல்லது

இரண்டிற்கு மேற்பட்ட சொற்களோ தொடர்களோ ஒரே மாதிரி இலக்கண அமைப்பில் வரும்போது இணையமைப்பில் இருப்பதாகக் கூறுகிறோம். இணையமைப்பு, திட்டவட்டமான இலக்கண நியதிக்கு உட்பட்டது; ஒரே இலக்கண வடிவத்தில் தொடர்கள் அமையவேண்டும். சான்றாக.

“இருநூறு ஆண்டுகாலமாக அடிமைப்பட்டுக் கிடந்த நாட்டிற்கு விடுதலை வாங்கித் தந்துவிட்டு, அதற்குப் பரிசாகப் பிரதமராகவோ, ஜனாதிபதியாகவோ ஆகாமல்-

அந்த மாபெரும் வெற்றியைப் போஸ்டர் போட்டுப் பிரகடனப்படுத்தத் தெரியாமல் - அதற்கு ஈடாகவோ, மாற்றாகவோ எந்த ஒரு பல்கலைக்கழகத்திலும் டாக்டர் பட்டம் வாங்கிக் கொள்ளாமல்-

மலர்க் கிரீடம் சூட்டிக்கொண்டு மகிழத் தெரியாமல்-

கேவலம் ஒரு முழுத் துண்டைக் கூட ஒரு தனி மனிதனிடம் பெற்றுக்கொள்ளாமல் - போய்ச் சேர்ந்தாரே ஓர் அப்பாவி, அவர் வம்சத்திலே வந்த நமக்கு அரசியல் உண்டு”.

மேற்கண்ட மாலனின் கடிதத்தில் (கல்கி, 20.1.72) இணையமைப்பு மிகச் சிறப்பாகக் கையாளப்பட்டுள்ளது.

இணையமைப்புக்குப் பல சிறப்புகள் உண்டு. வாசிப்பதற்கு / கேட்பதற்கு இனிமையாக இருக்கின்றன; ஒழுங்கானவையாக, ஓசைநயம் கொண்டவையாக உள்ளன; ஒவ்வொன்றிற்கும் ஓரிடமும், ஓரிடத்தில் பொருந்துவதற்கு ஒவ்வொன்றுமாகத் திட்டப்படி தொடர்கள் அமைகின்றன. மேலும் இணையமைப்பு சிக்கனமானது; இணையமைப்பு வாக்கியத்தில் ஒரே கூறு, பல வேறு கூறுகளுக்குப் பொருந்துமாறு ஆகிறது. மேலும் அழுத்தம் தரவும், வார்த்தைகளுக்கிடையிலான நுட்பமான இணைப்புகளைச் சுட்டிக்காட்டவும், அர்த்தத்தை வளப்படுத்தவும் இது உதவுகிறது.

ஆனால் இணையமைப்புக்குச் சில குறைகளும் உண்டு: தர்க்கரீதியாக இணைத்தன்மை கொண்ட தொடர்களை மட்டுமே இம்முறையில் இணைக்க முடியும். தர்க்கரீதியாக இணைத்தன்மை கொள்ளாத

தொடர்களை இம்முறையில் இணைத்தால், மயக்க நிலை உருவாகும், இரண்டாவதாக, கொஞ்சம் செயற்கையாகவும் தோன்றுகின்ற நடை இது. மூன்றாவதாக, அர்த்தத்தைவிட வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் தரும் எழுத்தாளர்கள் இதனை பயன்படுத்தத் தொடங்கினால், வார்த்தை ஜாலம்தான் மிஞ்சும். ஆகவே எச்சரிக்கையாகக் கையாள வேண்டும்.

வரிசைப்படுத்துதல் (Enumeration) என்பது, கருத்துகளை ஒன்று, இரண்டு என வரிசைப்படுத்திச் சொல்லுதலாகும். எண்ணிக்கையிட்டுச் சொன்னாலும், எண்ணிக்கை இடாவிட்டாலும் தர்க்கரீதியான எந்த எழுத்திலும் இத்தன்மையைக் காணலாம்.

இலக்கியக் கூறுகளை அல்லது அணிகளைப் பயன்படுத்துதல்

உவமை, உருவகம், தன்மை நவிற்சி, உயர்வு நவிற்சி, தற்குறிப்பேற்றம், பிறிதுமொழிதல் போன்ற எவ்வகை அணியையும் கருத்துரையாசிரியர் மிகச் சிறப்பாகப் பயன்படுத்தமுடியும். சான்றாக,

## உழைப்பு

...உழைப்பு எப்போதுமுண்டு. தெய்வத்தின் தலையிலே சுமையைப் போட்டுவிட்டு, நாம் கவலை, பயன் என்ற இரண்டு நாய்களுக்கும் உள்ளத்தை இரையாக்காமல், சந்தோஷமாகப் பாட்டுப் பாடிக்கொண்டு நிலத்தை உழுவது நல்லது. அழுதுகொண்டே உழுதால் உழவுக்குக் கெடுதி; மனத்துக்குச் சந்தோஷமில்லை; மடத் தன்மை தவிர வேறொன்றுமில்லை.

உருவகம் இப்பகுதியில் பாரதியாரால் மிகச் சிறப்பாகக் கையாளப்படுகிறது. இதே போல வேறுவேறு அணிகளையும் இலக்கியக் கருவிகளையும் நன்கு பயிற்சியுள்ளவர்கள் எளிதாகத் தங்கள் எழுத்தில் பயன்படுத்தமுடியும். எனினும் அளவறிந்து பயன்படுத்துவது நல்லது என்றும் ஓர் எச்சரிக்கையை மட்டும் இங்கே தரலாம்.

## கருத்தீர்ப்பு அணுகுமுறை ( Appeal Approach )

ஒரு கருத்துரையாளர் இரண்டு விதிகளைக் கட்டாயம் பயன்படுத்தவேண்டும்: 1. தம் வாசகருடைய ஆர்வங்கள், மனப்பாங்குகள், அறிவுநிலை, உணர்வுகள் ஆகியவற்றிற்கு மதிப்புத் தருதல்; 2. தம் வாசகர்கள் தம் கருத்துகளை ஒப்புக்கொள்ளுமாறு எழுதுவதற்குத் தேவையான மொழிநடை. ஆகவே ஒரு பயன்மிகுந்த விவாதப் பாங்கு என்பது, எதிராளியிடம் காட்டும் பரிவுணர்ச்சி சார்ந்த விவாதப் பாங்கேயாகும். கருத்துரையாளர், தம் வாசகர்களின் உணர்வு நிலைகள் (Emotions), உணர்ச்சிகள் (Feelings) ஆகியவற்றில் பரிவுணர்ச்சி காட்டியே தமது கருத்தீர்ப்பு அணுகுமுறை, தொனி, நடைக்கருவிகள் (அல்லது உத்திகள்) ஆகியவற்றை வகுக்கவேண்டும்.

ஒரு வயமாக்கும் கருத்துரையில், இறுதியாக ஏதேனும் ஒரு கருத்தீர்ப்பு (Appeal) நிச்சயம் இருக்கும். வேண்டுகோள் என்றும் இதனைச் சொல்லலாம். இந்தக் கருத்தீர்ப்பு அல்லது வேண்டுகோள் வாசகரின் அறிவுக்கானதா? அல்லது உணர்வுக்கா? அது, இருதரப்பு வாதங்களையும் முன் வைத்து, நேராக வாதிட்டுச் செல்லும் நேர்க்கோட்டு அணுகுமுறை கொண்டதா? அன்றி, சொல்லும் நடையை மாற்றி, அங்கதம், உயர்வு நவிற்சி, குறிப்புமுரண் போன்றவற்றைக் கையாளுவதா? ஆசிரியருக்குத் தமது விஷயத்தின் மீதான தொனி எவ்வாறிருக்கிறது? நேர்த்தியான, நுட்பமான, தேர்ந்த முறையில் இருக்கிறதா? அல்லது கொச்சைநடை, முறை சாராத்தன்மை போன்றவற்றைக் கொண்டிருக்கிறதா? என்னவிதமான நடையுத்திகள் அவரால் கையாளப்படுகின்றன?

அந்த விஷயங்கள் அனைத்திலும் ஒரு தேர்ந்த கருத்துரையாளர் கவனம் செலுத்தியாக வேண்டும். மேற்கண்ட கேள்விகளுக்கெல்லாம் என்ன விடை? எவ்விதமான வாசகர்கள், எந்த வித மனப்பாங்கோடு கருத்துரையை அணுகப் போகிறார்கள் என்பதைப் பொறுத்துதான் விடை அமையும். ஓரளவுக்கு, இவை எழுதும் ஆசிரியரின் ஆளுமை, அவரது எழுத்துத்திறன் ஆகியவற்றையும் பொறுத்தது.

சான்றுக்கென இரண்டு தலையங்கங்களை இங்கே காண்போம்.

## பாரதம்

(தமிழோசை, லண்டன்-டிசம்பர்10, 1992)

**அன்று**

தந்தை கொடுத்த வரம் காக்க, சிற்றன்னையின் விருப்பப்படியே, பரதனுக்கு முடி கொடுத்து, வன வாசம் ஏகிய ராமர் அவதரித்த நாடு.

அண்ணனது பாதுகைகளை அரியணை ஏற்றி, மணிமுடி சூட்டி, அவனது வருகை பார்த்து அரசாண்ட பரதன் வாழ்ந்த நாடு.

தன்னையே சூதில் இழந்துவிட்ட அண்ணன் தருமரின் சொல் தட்டாமல் வனவாசம் சென்ற வீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் ஆண்ட நாடு.

“கற்க கசடற கற்பவை கற்றபின்

நிற்க அதற்குத் தக”

என்று மூவாயிரம் ஆண்டுகட்குமுன், மதச்சார்பில்லாமல், காலங்களால் அழிக்கப்பட முடியாத திருக்குறள் என்னும் காவியம் படைத்த திருவள்ளுவரின் நாடு.

அகிம்சையின் கோட்பாடுகளை உலகுக்கு எடுத்துக்காட்டிய மகாத்மா பிறந்த நாடு.

“சாதிகள் இல்லையடி பாப்பா – குலத்

தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்

நீதி உயர்ந்த மதி, கல்வி – அன்பு

நிறைய உடையவர்கள் மேலோர்”

என்று பாடிய பாரதி பிறந்த நாடு.

சமதர்மம் வேண்டி துறவறம் பூண்ட புத்தரைப் பெற்றெடுத்த நாடு.

கன்றைத் தேர்ச்சில்லில் இழந்த பசுவின் மணியொலி கேட்டு, தன் மகன் மேல் தேரோட்டி நீதி கண்ட சோழன் வாழ்ந்த நாடு.

## இன்று

ராமர் அவதரித்த நாட்டில், ராமரின் பெயரால், அறிவு நோக்கி அடியெடுத்து, பணம், பட்டம், பெயர், பதவி என்னும் மோகத்தினால் உந்தப்பட்டு, அண்ணனுக்கெதிராகத் தம்பியையும், நண்பனுக்கெதிராக நண்பனையும், இரத்தக் கடலில் மிதக்கவிட்டு, மதங்களின் பெயரால், ஜாதியின் பெயரால், சுயமேம்பாட்டுக்காக மனிதனைக் பலி கொடுக்கும் சந்தர்ப்ப வாதிகளும் பிறந்து வளர்கிறார்கள், வாழ்கிறார்கள்..

தெருவில் அனாதையாக இறந்தவனை வைத்து, துண்டு போட்டுப் பணம் சேர்க்கும் துச்சர்களும் வளர்கிறார்கள், வாழ்கிறார்கள்.

கடவுள் இந்த இன்னல்கள் தீர்க்க அவதாரம் எடுத்தால், கடவுளைக்கூடக் கட்அவுட் போட்டு வாழ நினைக்கும் அற்பப் பிறவிகள் வளர்கிறார்கள், வாழ்கிறார்கள்.

புத்தர் வந்த திசையிலே போர்

புனித காந்தி மண்ணிலே போர்

சத்தியத்தின் நிழலிலே போர்

தர்மத்தாயின் மண்ணிலே போர்

-கண்ணதாசன் என்றோ பாடியது.

ஆண்டாண்டுக் காலமாக அடிமைத்தனம் போதித்து, ஆண்டு வரும் இந்த இனம் கூண்டோடு ஒழிவதற்கு,

‘என்று தணியும் இந்த மோகத்தின் தாகம்?’

## தலையங்கம் 2

## ஆயுத வியாபாரம்

(தமிழோசை, லண்டன்-நவம்பர் 13, 1992)

1982 இல் ஈராக்கில் ஒரு கிளர்ச்சியை அடக்குவதாகச் சொல்லி ஒரு முழுக்கிராம மக்களையும் கொன்று குவித்தவர் ஈராக்கிய தலைவன்(?) சதாம் ஹூசைன். 1980 இல் ஆரம்பமாகி நடைபெற்ற ஈரான்-ஈராக் போரில் ஈரானியக் கைதிகளை மிகக் கொடூரமாகச் சித்திரவதை செய்து, உலகெங்கும் தடை செய்யப்பட்ட இரசாயன ஆயுதங்களைப் பாவித்து ஏராளமான ஈரானிய மக்களைக் கொன்ற சர்வாதிகாரி, 1988 இல் குர்டிஸ்தான் பிரதேசத்தில் நச்சு வாயுத் தாக்குதலினால் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட குர்தீஸ் மக்களைக் கொன்ற மனுக்குலத் துரோகி. 1990 இல் சிறிய நாடான குவைத்தை ஆக்கிரமித்து, பல கொலைகளையும் மனித உரிமை மீறல்களையும் புரிந்தவர் சதாம்.

இவரைப் பலப்படுத்தி, ஆயுத வியாபாரம் நடத்தியவர்கள் யார்?

தன்னை ஒரு ஏகாதிபத்திய எதிர்ப்பாளனாகவும், தனது ‘புனிதப்போரில்’ அனைத்து அராபியர்களும் இணைய வேண்டும் என்றும் கூறும் சதாமின் ‘உண்மை முகம்’ இந்நாட்டின் பொது சனத் தொடர்புச் சாதனங்களில் வெளிப்படுகின்றதுதான்.

ஆனால் 1991 இல் சிறிய நாடான குவைத்தை மீட்டு, ஜனநாயகத்தை நிலை நாட்டுவதாகச் சொன்ன அமெரிக்காவும் பிரிட்டானியாவும் 1990 வரை தமது ஆயுத வியாபாரத்தை விட்டுவிடவில்லை.

அமெரிக்காவின் ஈரான் ஆயுத விவகாரம் முன்னர் அம்பலப்படுத்தப்பட்டது, அறிந்ததே. தற்போது பிரிட்டானியா ஈராக்குடன் 1990 இல் செய்து கொண்ட இரகசிய ஆயுத விற்பனை வெளிச்சத்துக்கு வந்துள்ளது.

திரிக்கப்பட்டும், மறைக்கப்பட்டும், பூதாகாரப்படுத்தப்பட்டும்தான் பல செய்திகள் எமக்குக் கிட்டுகின்றன. இருந்தும் சிலவேளைகளில் உண்மைகள் தாமதமாகவேனும் வெளியாகின்றன.

உலகெங்கும் இரகசியமாக நடைபெறும் இது போன்ற ஆயுத வியாபாரங்கள் தான் பல நாடுகளின் உள்நாட்டுப்

பிரச்சினைகளையும் உக்கிரமடையச் செய்கின்றன.

மேற்கண்ட இரு ஆசிரியவுரைகளிலும் காணப்படும் நடைப்போக்கு, முறையீடு, அணுகுமுறை, உத்திகள் ஆகியவற்றை ஒப்பிட்டுப் பார்ப்போம். முதல் தலையங்கம் உணர்வுகளுக்கான குறியீடாக அமைந்துள்ளது; இரண்டாம் தலையங்கம், உணர்வுக்கும் சிந்தனைக்கும் ஓரளவு சமநிலை தந்து அணுகுகிறது. அறிவுப்பூர்வமான வாதங்களை முன்வைத்து அணுகும் 'Intellectual approach' என்பதற்குப் பின்வரும் சான்று உதவும்:

## ' நடந்தாய் வாழி , காவேரி '

(செப்டம்பர் 9, 1991-தினமணி தலையங்கம்)

இருகரையும் தொட்டுப் பிரவாகமாக நீருடன் இருந்த காலத்தில் காவிரி நதி நிதானமாக நடந்து செல்வதைப்போல் இருந்த காட்சியை உருவகித்து இளங்கோவடிகள் 'நடந்தாய் வாழி, காவேரி' என்று வாழ்த்திப் பாடினார். இன்று மழைக்காலம் தவிர, பிற மாதங்களில் அநேகமாக வரண்டு கிடக்கும் காவிரி நதியை எந்த வகையில் வாழ்த்திப் பாடுவது என்ற வேதனையில் தமிழகம் இருக்க, காவிரி நதிநீர்ப் பங்கீட்டுப் பிரச்சினையை அரசியல் கண்ணோட்டத்துடன் அணுகி வரும் மத்திய அரசும், கர்நாடக அரசும் வேதனையை அதிகப்படுத்தும் விதத்தில் செயல்பட்டு வந்திருக்கின்றன. இதுவரை பாரபட்சமில்லாமல் அறிவுரைகளையும் நீதியையும் வழங்கி வந்த உச்சநீதிமன்றம், இன்று நதிநீர்ப் பிரச்சனைக்குத் தமிழக அரசும் கர்நாடக அரசும் பேச்சு வார்த்தைகள் மூலம் இடைக்காலத் தீர்வு ஒன்றைக் காண வேண்டும் என்று அறிவுரை வழங்கியுள்ளது.

இனிமேல் பேச்சு வார்த்தைக்கு இடமில்லை என்ற தமிழக அரசின் உறுதியான நிலையை முதல்வர் ஜெயலலிதா மீண்டும் தெரிவிக்க வேண்டிய அவசியத்தை ஏற்படுத்திவிட்ட இந்த அறிவுரை, கர்நாடகத்தின் சார்பாகவே இருக்கிறது என்பதைத் தலைமை நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா உணர்ந்திருந்தால் அந்த அறிவுரையை வழங்கியிருக்கமாட்டார்.

உச்சநீதி மன்றத்தின் யோசனையைத் தமிழ்நாடு நிராகரித்துவிட்டது என்ற பிரசாரம் தமிழ் நாட்டிற்கு நியாயம் கிடைக்காமல் செய்துவிடக் கூடும். ஜூன் மாதம் நடுவர் மன்றம் தமிழ்நாட்டிற்குக் குறைந்த பட்சம் 205 டி. எம். சி. தண்ணீரைக் கர்நாடக அரசு தன் அணைகளில் இருந்து திறந்து விட வேண்டும் என்று ஓர் இடைக்காலத் தீர்ப்பு வழங்கியது. கர்நாடக அரசு அதை ஏற்றுக்கொள்ள மறுத்தபோதே மத்திய அரசு இரு மாநில முதல்வர்களையும் அழைத்து, பேச்சு வார்த்தை மூலம் இடைக்காலத் தீர்ப்பு பற்றி ஒரு சமரசத்தை ஏற்படுத்தியிருக்கலாம். அந்த வாய்ப்பைத் தவற விட்டுவிட்டதால் பேச்சு வார்த்தைக்கே இடமில்லை என்ற நிலையைக் கர்நாடக முதல்வர் பங்காரப்பா ஏற்படுத்திவிட்டார்.

நடுவர்மன்றத் தீர்ப்பை அவமதிக்கும் வகையில் ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்துள்ளார். இச்சட்டம் செல்லுமா, செல்லாதா என்பது பற்றி உச்சநீதி மன்றத்தை மத்திய அரசு கேட்டது தேவையற்றது என்றாலும், அப்படிக் கேட்பதற்கு அதற்கு உரிமை உண்டு. அதோடு நில்லாமல், நடுவர் மன்றத்திற்கு இடைக்காலத் தீர்ப்பு வழங்க உரிமை உண்டா என்பது பற்றியும் உச்சநீதிமன்றத்தைக் கருத்துக்கேட்டது முறையற்றதாகும். நீதிமன்றத்தின் யோசனையின் பேரில், நாடாளுமன்றத்தின் அனுமதியுடன் ஏற்படுத்தப்பட்ட நடுவர் மன்றக்குழு பல மாதங்கள் இருதரப்பினரின் வாதங்களையும் கேட்டு, காவிரியின் உற்பத்தி ஸ்தானத்திலிருந்து கடலில் சங்கமமாகும் இடம் வரை நேரில் சென்று ஆய்வு நடத்திய பின்தான் இடைக்கால தீர்ப்பை வழங்கியது. இந்தத் தீர்ப்பு செல்லுமா, செல்லாதா என்பதை ஆராய்வது உச்சநீதி மன்றத்தின் பணி அல்ல. கர்நாடக அரசு நடுவர் மன்றத் தீர்ப்புக்குக் கட்டுப்படவில்லை என்றால், அதன்மீது என்ன நடவடிக்கை எடுப்பது என்பது பற்றி மத்திய அரசுக்கு ஆணை பிறப்பிப்பதுதான் உச்ச நீதி மன்றத்தின் பொறுப்பு.

கர்நாடக அரசுடன் பேச்சுவார்த்தை நடத்திச் சமரச முடிவிற்கு வரவேண்டும் என்று தமிழ் நாட்டுக்கு ஆலோசனை வழங்குவது முற்றிலும் பொருத்தமற்றது.

கர்நாடக அரசின் சார்பில் உச்சநீதி மன்றத்தில் வழக்காடிவரும் வழக்கறிஞர் நாரிமன், கர்நாடக அரசு 200 டி. எம். சி. தண்ணீரைத் தருவதற்குத் தயாராக உள்ளது என்று புதிதாக ஒரு செய்தியைக்

கூறியிருக்கிறார். அப்படியானால், மேற்கொண்டு 5 டி. எம். சி தண்ணீர் வழங்குவது பற்றித்தான் பேரம் நடத்த வேண்டியிருக்கும், இதற்காகப் பேச்சு வார்த்தை எதுவும் தேவை இல்லை. தமிழ் நாட்டுக்குத் தேவைப்படும் நீரை உரிய காலத்தில் ஓர் ஆண்டுக்கு 200 டி. எம். சி. என்ற கணக்கில் கர்நாடக அரசு வழங்க ஆரம்பிக்கட்டும். ஓர் ஆண்டு முடிவதற்குள் நடுவர் மன்றத்தின் இறுதியான தீர்ப்பு கிடைக்கவேண்டும் அல்லது உச்சநீதி மன்றமே இது குறித்து ஒரு முடிவான தீர்ப்பை வழங்கலாம். தமிழ்நாடு பேச்சுவார்த்தைக்குச் சம்மதித்தால், தீர்ப்பு கிடைப்பதற்குக் காலதாமதத்திற்கு வழிவகுக்குமே அன்றி நியாயம் கிடைக்க வழி ஏற்படாது.

மத்திய அரசு தமிழ்நாட்டின் நலனை முற்றிலுமாகப் புறக்கணிக்க முடிவுசெய்து விட்டது என்பதற்கு இன்னொரு சான்று, கங்கை – காவிரி இணைப்பைப் பற்றி மத்திய நீர்வள அமைச்சர் வி. சி. சுக்லா நாடாளுமன்றத்தில் கூறியிருப்பதாகும். நதிகளை இணைப்பதற்கும், கங்கை, மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா வரை நதிகளை இணைப்பதற்கும் ஒரு திட்டம் தயாராகிறது என்று அறிவித்த அவர், முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் பரிசீலனையில் இருந்துவரும் கங்கை – காவிரி இணைப்புத் திட்டம் பொருளாதார ரீதியிலும் சாத்தியமில்லை என்று அறிவித்துள்ளார். கங்கையையும், கிருஷ்ணாவையும் இணைக்கமுடியுமானால், காவிரி வரை இணைப்பை ஏற்படுத்துவது எப்படி சாத்தியமில்லாமல் போகும் என்ற கேள்வி எழுகிறது. கிருஷ்ணா நீரைக் கால்வாய் மூலம் சென்னைக்குக் கொண்டுவரக் கூடிய அதே தொழில்நுட்பமும் பொருளாதார அடிப்படையும் கிருஷ்ணா – காவிரி இணைப்புக்கும் பொருந்தும். குறுகிய அரசியல் கண்ணோட்டம் தவிர, வேறு தடையேதும் இல்லை.

தமிழக எம். பி. க்கள் மத்திய அமைச்சரை இந்தப் பிரச்சினை குறித்துப் பேசியிருக்கின்றனர். தமிழகத்தில் நிலத்தடிநீர் நிர்வாகம் சரியில்லை, பெருமளவு வீணடிக்கப்படுகிறது என்று அவர் கூறியதுடன், இதைச் சரிவர நிர்வகிப்பதற்கு உலக வங்கியின் உதவியுடன் திட்டங்களை நிறைவேற்றித்தர மத்திய அரசு தயாராக இருப்பதாகவும் கூறியிருக்கிறார். தமிழ்நாட்டில்தான் நிலத்தடிநீர் அதிகபட்சம் பாசனத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது என்பதையும், காவிரி உள்பட அனைத்து நதிகளும் வறண்டுபோனதால்தான் நிலத்தடி நீருக்குத்

தட்டுப்பாடு ஏற்படுகிறது என்பதையும் மத்திய அமைச்சருக்கு நமது எம். பி. க்கள் எடுத்துரைத்திருக்க வேண்டும்.

கங்கை – காவிரித் திட்டத்தை எத்தனை செலவானாலும் நிறைவேற்ற வேண்டும். அப்போதுதான் தமிழகத்தில் நிலத்தடிநீரும் போதுமான அளவு இருக்கும். காவிரி நீருக்காகக் கர்நாடகத்துடன் போராடவும் தேவையிருக்காது.



மேற்கண்ட தலையங்கத்தில் முன்வைக்கப்படும் தர்க்கரீதியான வாதங்களையும் அவற்றின் விளைவாக எழும் முடிவுரைத்தலையும் கூர்ந்து கவனியுங்கள்.

ஆயினும், ஒவ்வொரு தலையங்கமுமே இப்படித்தான், ஒரு தீவிர தர்க்கவாத அடிப்படையிலும் அதன் விளைவான வெளிப்படையான முடிவுரையிலும் அமைய வேண்டும் என்று நினைக்கத் தேவையில்லை. அங்கதச் சுவையுடன் எழுதப்படும் தலையங்கங்களும் ஆர்வத்தைத் தூண்டுவனவாகவும், வயப்படுத்துவனவாகவும் அமையலாம்.

அங்கதச் சுவையைப் பயன்படுத்தி எழுதுவதில் ஒரு கஷ்டமிருக்கிறது. அவ்வாறு எழுதும் கருத்துரையாளருக்குத் தமது தொனியை – கருத்துரையின் முக்கிய மனப்பாங்கு அல்லது உணர்ச்சிநிலை (Emotion) என்பதைக் கட்டுக்குள்ளாக வைக்கவேண்டிய திறமை வேண்டும். அங்கதம், பலவிதமான வடிவங்களில் எழுதப்படக்கூடியது என்பதனால் இந்தச் சிக்கல் மேலும் அதிகப்படும்.

நேரடித் தாக்குதல் முறையிலிருந்து, குறிப்புமுரண் கொண்ட மறைமுக எழுத்துவரை, அங்கதம் பல வகைப்படும். நேரடித் தாக்குதல் எப்போதுமே, தாக்கப்படுபவர்க்குச் சாதகமான மனப்பாங்கிளை உருவாக்கிவிடும். குறிப்புமுரண், தலைகீழாக்கல் உத்திகள் போன்றவற்றைப் பயன்படுத்தினாலோ, வாசகர்கள் தவறாகப் புரிந்துகொள்ளலாம். அல்லது சரிவரப் புரிந்துகொள்ளாமல் போகலாம். “நிறுவனங்கள், மரபுகள், வரன்முறைகள் இவற்றினுடைய தீமைகள், பலவீனங்களை எடுத்துக்காட்டும்

குத்துவாளாகப் பயன்படுவது தலையங்கத்தில் அங்கதம்” என்று கெய்ல் வால்ராப் என்னும் எழுத்தாளர் கூறியிருக்கின்றார். அங்கதத்தைப்போல நையாண்டியும் சிறந்த முறையில் தலையங்கங்களில் பயன்படுத்தலாம்.

தமது சிந்தனையை ஒரு கருத்துரையாளர் எப்படி வெளிப்படுத்துகின்றார் என்பது நடை எனப்படும். நடை, கருத்துரையாளரின் அணுகுமுறை. கருத்தீர்ப்பு முறை ஆகியவற்றையும் பொறுத்தது. பின்வரும் கூறுகள் இணைந்த ஒரு தன்மையைத்தான் நடை என்கிறோம்.

-வார்த்தைகள், தொடர்களின் தேர்ந்தெடுப்பும் ஒருங்கிணைப்பும்

-வாக்கிய அமைப்புகளில் காணப்படும் நானாவிதத் தன்மை(Variety)

-கருத்துரையாளரின் தனித்த சிந்தனைப் போக்கினை வெளிப்படச்செய்யும் உத்தி முறைகள்.

சான்றாகப் பின்வரும் தலையங்கத்தின் நடைப்போக்கினைக் கவனியுங்கள். காந்திஜி இறந்த சமயத்தில் (15-2-48), ‘தமிழன் குரல்’ இதழில் எழுதப்பட்ட தலையங்கம் இது:

## மதவெறியை மாய்ப்போம்

காந்தியடிகளின் பொன்னுடல் செந்தீயில் வெந்து விட்டது. இந்திய மக்களின் - ஏன் மனித வர்க்கத்தின் ஆஸ்தி எனத் திகழ்ந்த ஐயனின் உடல் ‘அஸ்தி’ எனப் பெயர் பெற்றது. அதுவும் பல கூறாக பங்கிடப் பெற்றுக் கடலில், காவேரியில், கங்கையில் கரைக்கப்பட்டுவிட்டது.

கேட்டதைத் தரும் கற்பகத் தருவைக் கதையில் படித்தோம். கருணை பொழியும் காமதேனுவைக் காவியத்தில் பார்த்தோம். ஆனால், அரசியலிலே அற்புதம் செய்யும் கற்பகத் தருவாய், ஹரிஜன மக்களுக்கு அபயம் அளிக்கும் காமதேனுவாய் அண்ணல் காந்தி நம்மிடையே வாழ்ந்து வந்தார். ‘வாழ்கின்றார்’ எனத் தவம் செய்தது இந்தியா. ‘125 ஆண்டுகள் வாழ்ந்தே தீருவேன்’ என்று வாக்குறுதி தந்தார் மகாத்மா. ஆனால், மாபாதகன் ஒருவன் எல்லோரது நம்பிக்கையையும் தகர்த்துத் தவிடுபொடியாக்கிவிட்டான்.

ஏசுவைக் கொன்றதை ஏட்டில்தான் படித்தோம். சாக்ரடீஸ் மடிந்ததைச் சரித்திரத்தில்தான் பார்த்தோம். அந்தோ! ‘காந்தியடிகள் கொல்லப்பட்டார்’, ‘கொளுத்தப்பட்டார்’ என்ற கொடுமை மிக்க செய்திகளை, அவை நிகழ்ந்த மறு கணத்திலேயே நம் காதுகளால் கேட்டோம். அவர் பிரேதத்தை , அது எரிந்து கரிந்த அஸ்தியைக் கண்களால் பார்த்தோம். ஜன சமுத்திரத்தின் மத்தியில் நடமாடிக் கொண்டிருந்த உத்தமரின் உருவத்தை ஒரு பிடி சாம்பலாக்கி ஜல சமுத்திரத்தில் கரைத்து விட்டோம். நம்மைவிடத் துரதிர்ஷ்டசாலிகள் வேறு யாரிருப்பர்! மறக்க முயலுகிறோம்; முடியவில்லை. ஐயனின் திருமேனி கணத்திற்குக் கணம் நம் அகக் கண்முன் தோன்றுகிறது. கதியற்ற ஹரிஜன மக்களுக்கு நிதி தேடிய கைகள்; பாட்டாளி மக்களுக்காகப் பரிந்து பேசிய வாய்; படைக்கஞ்சாப் பகைவனும் பார்த்தவுடனே நடுங்கும் வீரத் திருமார்பு; அறிவு – கருணை – அன்பு – அறம் அத்தனை நல்லியல்புகளும் கைகோர்த்துக் களிக்கூத்தாடும் திருமுகம்; இவற்றை நாம் மறந்தாலும் நம் மனம் மறக்க மாட்டேனென்கிறது.

காந்தியடிகளை மறக்க முடியாது; மறக்கவும் கூடாது. என்றாலும், அவரது மறைவைப் பற்றிய கவலையை மறந்தே ஆகவேண்டும். அவர் நாட்டுக்கு விடுதலை தேடித் தந்தது நாம் வாழ்வதற்கேயொழிய வருந்துவதற்கல்ல. கவலைக்கு எவ்வளவுதான் காரணங்களிருப்பினும் அவற்றால் நாம் கடமையிலிருந்து தவறக் கூடாது.

அடிகளின் கொலைக்குப் பிறகு அரசாங்கம் மத ஸ்தாபனங்களை வேட்டையாட முனைந்துள்ளது. இதை நாம் மனமார வரவேற்கிறோம். என்றாலும் மத வெறியின் நாடி நரம்புகள் எவையென்பதை அறிந்து, அவற்றை அடியோடு அழித்தாலொழிய மதவெறியை மாய்ப்பதோ, மேலும் மேலும் மகாத்மாக்கள் கொலையாகாமல் தடுப்பதோ முடியாத காரியம்.

மகாத்மாவின் கொலைக்குப் பிறகு போலீசார் துப்பறிந்ததில், உலகமே திகைத்துப் போகக்கூடிய அளவுக்குச் சதிச் செயல்கள் உருவாகி வந்தது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு பெரிய அளவில் திட்டமிட்ட சதிச் செயல்கள் பல ஆண்டுகளாக அல்லாவிட்டாலும் பல மாதங்களாக வேனும் நடந்து வந்திருக்க வேண்டும். அப்படி

இருந்தும் மத்திய அரசாங்கத்தாரின் உள் நாட்டிலாகா இதைக் கண்டு பிடிக்கத் தவறியதன் காரணமென்ன? சதிகாரர்களின் செல்வாக்கு உள் நாட்டிலாக்காவிலும் ஊடுருவிச் சென்றிருக்காதென நம்புகிறோம்.

இந்தியா முழுவதற்கும் படை திரட்ட, அதற்குப் பயிற்சிதர, கொலைக் கருவிகளை வாங்கிக் குவித்து வைக்க இந்தச் சதிகாரக் கூட்டத்திற்கு எங்கிருந்து பணம் கிடைத்தது? பணமூட்டைகளின் தொடர்பு இவர்களுக்குத் திட்டமாக இருந்திருக்க வேண்டும். இந்து மகாசபை, ராஷ்ட்ரிய சுயம் சேவக் சங்கம் முதலியவைகள் மீதும் இவற்றிற்கு மறைமுகமாக உதவிசெய்யும் பண மூட்டைகள், ஐந்தாம்படை அதிகாரிகள் ஆகியவர்கள் மீதும் “கடுமையான நடவடிக்கை” என்பதற்குச் சரியான அர்த்தம் என்னவோ, அந்த அளவுக்கு நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். இன்றைய அரசாங்கத்தையே ஸ்தம்பிக்கச் செய்துவிடக்கூடிய அளவுக்குச் சதிகாரர்கள் செல்வாக்குப் பெற்றிருக்கிறார்களோ என்றுங்கூட ஐயப்பட வேண்டியிருக்கிறது. உண்மை நிலை இதுவானாலும் கூட, நேரு அரசாங்கம் நாட்டிலுள்ள முற்போக்குக் கட்சிகளின் துணையைப் பெற்றேனும் வகுப்புவாதச் சதி ஸ்தாபனங்களின் மூலவேரை அறுத்தெறியத் தயங்கக் கூடாது.

இடதுசாரிக் கட்சிகளும் கடந்த காலப் பூசல்களை மறந்து விட்டு, கட்சி நலன்களை ஒதுக்கி வைத்து நேரு அரசாங்கத்திற்கு நிபந்தனையின்றியே துணை புரிய வேண்டும். வகுப்புப் போராட்டத்தை மாய்க்காத வரையில், வர்க்க உணர்ச்சி வளர்ச்சி பெறுவது முடியாத காரியம்.

காங்கிரசின் பொறுப்பும் மகத்தானது. காங்கிரஸ் வலதுசாரித் தலைவர்கள் வகுப்புவாதிகளுக்கு வளைந்து கொடுப்பதும், இடதுசாரிகளைக் கண்ணை மூடிக்கொண்டு எதிர்ப்பதும்தான் தேசீயம் என்று எண்ணிய பழங்காலப் போக்கை விட்டொழித்து, முற்போக்குச் சக்திகளுடன் தொடர்பு கொண்டு வகுப்புவாதத்தை அடியோடு தொலைத்தாக வேண்டும். இன்றைய அவசரப் பிரச்னை, இந்தியாவை வலதுசாரிகள் ஆள்வதா? இடது சாரிகள் ஆள்வதா? என்பதல்ல; மக்கள் சக்தி ஆள்வதா? மதவெறி ஆள்வதா? என்பதேயாகும்.

இந்து மகாசபை, இனி அரசியல் கட்சியாக அல்லாமல் சமூகச் சீர்திருத்த ஸ்தாபனமாக மாறிவிடுமாம்! ‘பாலுக்கும் காவல்; பூனைக்கும் தோழன்’ என்பது போல வகுப்புவாதிகளிடம் தோழமை பூண்டு, அதே நேரத்தில் அவர்களது காவலராக நேரு அரசாங்கத்திலும் இடம் பெற்றுள்ள முகர்ஜி இந்த மாறுதலைக் காண முயற்சிக்கிறாராம். இதை நம்பி ஒரு அரசாங்கம் ஏமாந்துவிடக் கூடாது. சுதந்திர இந்தியாவைச் சுடுகாடாக்கத் திட்டமிட்டுவிட்ட இந்தக் கொடிய ஸ்தாபனத்தைக் குழிதோண்டிப் புதைத்தாக வேண்டும். சமூகம் என்பது சர்வ சமயத்தினரும் அடங்கியதே. எனவே, ஒரு சமயத்தின் பெயரால் மட்டும் சமூக சீர்திருத்தத்திற்குப் பாடுபடுவோம் என்று கூறுவது மனமாற்றமல்ல; மதவெறியாளர்களின் மற்றொரு வேஷமேயாகும். இந்துக்களாகட்டும், முஸ்லீம்களாகட்டும், அல்லது வேறு எந்தச் சமயத்தினராகட்டும் மதத்தின் பெயரால் ஸ்தாபன ரீதியாக வேலை செய்வதை இனி அனுமதிக்கக்கூடாது. அரசாங்கத்தார் மத ஸ்தாபனங்களின் தொண்டர் படைகளைத் தடை செய்தது போலவே அவற்றைத் தோற்றுவித்த தாய் ஸ்தாபனங்களின் மீதும் தடைவிதிக்கத் தயங்கக் கூடாது.

தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் சிலவற்றைத் தெளிவாக்க விரும்புகிறோம். வடநாட்டின் நிலைமை எதுவானாலும், தமிழ்நாட்டில் இதுவரை மதவெறி இருந்ததில்லை. இனியும் இருக்கக் கூடாது. நாம் மதவெறியற்ற மக்களாய் வாழ்ந்து காந்தியடிகளின் பெருமையை வட இந்தியாவிற்கும், உலகத்திற்கும் உணர்த்த வேண்டும். நாம் முதலில் தமிழர்; இரண்டாவதாக இந்தியர். இதைத் தவிர வேறு எந்தச் சாதி, சமயப் பெயர்களையும் ஏற்பது தமிழினத்தைப் பிளவுபடுத்துவது போலாகும். சமயமும் அச்சமய வழிப்பட்ட சடங்குகளும் தனி மனிதனின் விருப்பத்திற்கு விட்டுவிட வேண்டும். இதுதான் பண்டைத் தமிழரின் வாழ்க்கை நெறியாகும். காந்தியடிகள் பிறப்பால் குஜராத்தியாயினும் வாழ்க்கை நெறியால் தமிழராக வாழ்ந்தவர். வள்ளுவர் குறளோடு, வள்ளலார் அருட்பாவோடு காந்தீயத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் எவரும் இந்த உண்மையை ஏற்பது திண்ணம். எனவே, காந்தீய நெறியைக் கடைப்பிடித்து மத வெறியை எதிர்த்துப் போரிடுவோம்.

வள்ளுவர் வள்ளலார் வழிவந்த காந்தியடிகளின் திருநாமம் நீடூழி வாழ்க! (2: 4: 3)

தனித்தனமை கொண்ட நடை என்பது, வயப்படுத்தும் எழுத்துக்கு மிகத் தேவையானது. ஆகவே கருத்துரைப் பகுதி எழுதுவோர் தங்களுக்கென ஒரு தனி நடையை உருவாக்கிக் கொள்வதில் கவனம் செலுத்த வேண்டும். நடை என்பது வெறும் சொற்களை அல்லது அலங்காரத்தைப் பொறுத்தது மட்டும் அல்ல, சொல்லுகின்ற பொருளையும் சார்ந்தது.

## முடிவுரை

ஒரு தலையங்கம், ஒரு குறித்த நோக்குநிலையை முன் வைத்தபிறகு தருகின்ற முடிவுரை, அதன் வளர்ச்சிப் பகுதியில் முன் வைத்த விவாதங்களுக்கு ஏற்றதாகவும், அது வெளியாகும் இதழினை நடத்தும் நிறுவனத்தின் நிலைப்பாட்டை உணர்த்துவதாகவுமே அமையும். அதனால்தான் ‘நான்’ ‘நமது கருத்து’ போன்ற சொற்களையே பயன்படுத்த வேண்டும். தலையங்கம், ஒரு நிறுவனத்தின் கருத்து; தனி மனிதரின் கருத்தல்ல.

தலையங்கம் ஒரு நிலைப்பாட்டிலிருந்து எழுதப்பட்டிருக்க வேண்டும். ஒரு கருத்துரையாளர், எழுதுவதற்கென ஒரு தலைப்பைத் தேர்ந்தெடுக்கிறார் என்றால், அது மக்களுக்கு மிகவும் தேவையான ஒன்று என்று அவர் கருதுகிறார் என்றே பொருள். அதற்கென நியாயத்தை அவர் வழங்க வேண்டும். கருத்துரையில் முன் வைக்கப்பட்ட வாதங்களின் அடிப்படையில் எழுத்து வருவதாக முடிவுரை அமையவேண்டும். ஒரு கருத்துரையில் முடிவு கூறுதல் என்பது ‘முடிவெடுத்தலின்’ (Decision making) ஒரு வகையே. பல்வேறு மாற்று (Alternative) களுக்குள்ளாக ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் வேலை அது. விவாதிக்கப்படும் மாற்றுகளுள் சில, சுவையற்றவையாக இருக்கலாம்; சில, முழு அளவு திருப்தி தராததாயிருக்கலாம்; சில, பின்னால் வேண்டாத விளைவுகளைத் தருவனவாயிருக்கலாம்; சில, எச்சரிக்கையுடன் செயல்படுத்த வேண்டியவையாக இருக்கலாம். மாற்றுகளுள், ஓரளவேனும் நேர் முகத்தன்மை, உடன்பாட்டுத் தன்மை கொண்டவைகளை ஆராய்ந்து,

அவற்றுள் செயல்படுத்த முடியக் கூடியனவற்றைத் தமது ஆலோசனையாக முன் வைத்தல் வேண்டும்.

## தொகுத்து நோக்குதல்

ஒரு தலையங்கத்தை அல்லது கருத்துரையை எழுதி முடித்த பின்னர், சுயபரிசோதனை செய்து கொள்ள வேண்டும். அதற்குப் பின்வரும் பார்வை உதவும்.

### முதன்மைப் பத்தி

வாசகரைத் தொடர்ந்து படிக்கத் தூண்டுகிறதா? சுருக்கமாக இருக்கிறதா? வாசகரை நீங்கள் எவ்விதக் கண்ணோட்டத்திற்கு இட்டுச்செல்லப் போகிறீர்கள் என்பதை வெளிக்காட்டுகிறதா?

### வாக்கிய அமைப்பு

வாக்கியங்கள் நீளமானவையா? குறுகியவையா? எளியவையா? செய்வினையைப் பயன்படுத்துகின்றனவா? அல்லது செயப்பாட்டு வினையில் அமைந்தனவா? இன்னும் நீளத்தைக் குறைக்க இயலுமா? இன்னும் சிக்கலின்றி எளிமையாக்க இயலுமா?

### தொனி

கருத்துரை உணர்ச்சிமயமாக இருக்கிறதா? அறிவார்த்தமானதாகவா? இரக்கமும் பெருந்தகைமையும் கொண்டதா? உரத்த குரலில் அமைந்துள்ளதா? நிச்சயமற்றதாக உள்ளதா நுண்ணிய தேர்வாற்றல்கொண்டதா? தனித்த நடை கொண்டதா?

### விவாதம்

எதிரெதிரான கருத்து நிலைப்பாடுகளை எடுத்துக்காட்டுகிறதா? பிரச்சினையின் ஆழத்தைக் கணக்கில் கொள்கிறதா? அல்லது எளிமைப்படுத்திவிடுகிறதா? செயலுக்குத் தூண்டுவதாயிருப்பின், செயல்பட வேண்டியது யார் எனக் குறிப்பிடுகிறதா? அறிவுரைக்கிறதா? ஆசிரியவுரையில் ‘வேண்டும்’, ‘கூடாது’ ஆகிய சொற்கள் எத்தனை அமைந்திருக்கின்றன? வாதத்தில் இடைவெளிகள்

உள்ளனவா? விடுபட்ட மெய்ம்மைகள் உண்டா? அடிப்படையான தர்க்க நோக்கில், வாதங்கள் அமைகின்றனவா? ஆசிரியவுரை, முடிவுரைக்கிறதா? மெய்ம்மைகளை எப்படிப் பயன்படுத்துகிறது? மெய்ம்மைகள் வாதப்போக்கிற்குத் தடையாக நிற்கின்றனவா?

### அமைப்பு

மாறுநிலைகள் (Transitions) மென்மையாக அமைகின்றனவா? ஒரு தொடக்கம், வளர்ச்சி, முடிவு என்பது தெளிவாக அமைந்திருக்கின்றதா?

சித்திரைக் கட்டுரை, சிறப்புக் கட்டுரை, தலையங்கம் எதுவாயினும் மேற்கண்ட வினாக்களுக்குச் சரிபார்த்துக்கொண்டால் அது தெளிவாகவும் சிறப்பாகவும் அமையும். முடிவுரைக்கும்போது வாசகரை ஏதேனும் ஒரு செயலில் ஈடுபடத் தூண்டுவதாக அமைவது சிறப்பு. சான்றாக, குழந்தைத் தொழிலாளர் பற்றி ஒரு கட்டுரை அமைகின்றது என்றால் இந்த நிலையை மாற்ற மக்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைச் சுட்டிக்காட்டி முடிப்பதுதான் சிறப்பு. பொதுமக்கள் நேரடியாக ஏதேனும் செய்ய முடியாத சட்டம், பொருளாதாரம் போன்ற துறைகளாக இருப்பின், அவ்வத்துறை சார்ந்த அறிஞர்கள் / அதிகாரிகள் எவ்விதம் செயலாற்ற வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டி முடிக்க வேண்டும். மக்கள் / வாசகர்கள் வெறுமனே கருத்துக்களைத் தெரிந்து கொள்வது முதற்படி மட்டுமே. அவர்கள் எந்தத் திசையில் செயலாற்ற வேண்டும் (Call to action)என்பது கருத்தீர்ப்பின் இறுதிப் பகுதியாகும்.

எவ்வாறு செயலாற்ற வேண்டும் என்னும் வேண்டுகோளை முன்னிறுத்தி எழுதப்பட்ட ஒரு தலையங்கத்தைச் சான்றுக்கெனக் காண்போம். இது நவசக்தி இதழில் திரு. வி. க. எழுதியதாகும். (1932 ஏப்ரல் 20).

## கோயிலும் தீண்டாமையும்

கோயில்களில் தீண்டாமையைத் தொலைக்க எங்கணும் பெருமுயற்சி செய்யப்பட்டு வருகிறது. காந்தியடிகள், பண்டித மதன் மோஹன் மாளவியர் முதலியோர் அதுகுறித்து உழைத்து வருகிறார். நாட்டுக்கு

விடுதலை தேடுவோருள் பெரும்பான்மையோர் "நாட்டின் விடுதலைக்குத் தீண்டாமை பெருமுட்டாயிருக்கிறது. அதைத் தொலைத்தே தீர்தல் வேண்டும்" என்ற உண்மையுணர்ந்து கடனாற்றி வருவது நேயர்கட்குத் தெரியும்.

சிற்சில இடங்களில் தீண்டாமை மறைந்து வருவது கேட்டு மகிழ்வெய்துகிறோம். அணித்தே ரத்னகிரிக் கோயிலில் தீண்டாமை ஒழிந்தமை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கத்தக்கது. ஆண்டு அன்பர் சாவர்க்கார் நிகழ்த்தி வரும் திருத்தொண்டு போற்றற்குரியது. அவரைப் போன்ற திருத்தொண்டர் பலர் இப்போது நாட்டுக்குத் தேவை. அன்பர் சாவர்க்காருக்கு நமது நன்றியறிதல் உரியதாக.

இவ்வேளையில் சநாதனிகள் என்ன செய்தல் வேண்டும்? தீண்டாமையை ஒழிக்கும் வழியில் நாட்டுக்கு விடுதலை தேட அவர்கள் கடமைப்படுதல் வேண்டும். ஆனால் அவர்கள் என்ன செய்கிறார்கள்? "நாட்டின் விடுதலையைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. இலட்சக்கணக்கான பேர் சிறைபுகுந்தால் எங்களுக்கென்ன? நாங்கள் தீண்டாமையை வைத்துக்கொண்டேயிருப்போம்" என்று மற்றவர்கள் எண்ணுமாறு நடந்து கொள்கிறார்கள். இடைக்காலத்தில் செல்வாக்கு மிகுதியால் அவர்கள், சமூகத்தில் அமைத்த பொல்லாத கட்டுப்பாடுகளே இப்பொழுது தேச நலனைக் கொல்லா நிற்கின்றன. கொடுமைகளை எத்துணை நாள் சகித்துக்கொண்டிருப்பது?

காலநிலையைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. விடுதலை முழக்கம் எங்கணும் வீறிட்டெழுகிறது. பல்லாயிரந் தேசபக்தர்களின் விடுதலை வேட்கை மேலிட்டன. பலதிற இன்னல்களுக்குள்ளாகி வருந்துகிறார்கள். சநாதனிகளுடைய பிடிவாதம் தேசபக்தர்களின் உழைப்பையும் வீணாக்கும் போல் தோன்றுகிறது.

எத்துணைத் தேசபக்தர்கள் எத்துணைத் தியாகத்துக்குட்படினும் தீண்டாமையுள்ள நாடு முழு விடுதலையடைதல் அரிது என்பது பொது ஜன வாக்கு. தீண்டாமையுள்ள நாட்டின் மீது ஆண்டவனும் கருணை சொரியான்.

நாசிக் சத்தியாகிரகம் இப்பொழுது பேர் பெற்றுத் திகழ்கிறது. ஆங்கே ஏழை மக்கள் கோயிலுட் போக முயல்கிறார்கள். அவர்கள் சநாதனிகளால் தாக்கப்படுகிறார்களாம். தாக்கப்படும் ஏழை மக்கள் உள்ளத்திலேயே மெய்யாண்டவன் கோயில்கொள்வான். அவர்களைத் தாக்குவோரிடத்தில் ஆண்டவன் எப்படியிருப்பான் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

ஒடுக்கப்பட்ட சகோதரர்கள் என்ன கேட்கிறார்கள்? கோயிலினுள் நுழைந்து தெய்வத்தைத் தொழும் உரிமை கேட்கிறார்கள், இதற்கு அடியும் உதையும் வழங்கப்படுகின்றன என்று அறிகிறோம். இப்பொது உரிமைக்கே அடியும் உதையும் வழங்கப்பட்டால், பிறப்புரிமைக்கு என்னென்ன வழங்கப்படும்? அன்பர்களே! உன்னுங்கள்.

நாசிக்கிலுள்ள மஹார் வகுப்பைச் சேர்ந்தவர்கள், கோயிலுக்குள் நுழைய முயன்றார்கள். உடனே கதவுகள் மூடப்பட்டன. நாசிக் கோயிலில் இப்பொழுது திருவிழா நடைபெற்று வருகிறது. தேர்விழாவில் வடமிழுப்பதில் மஹார்கள் கலந்துகொள்ள விரும்பினார்கள். அவ்வேளையில் குழப்பம் நிகழுமென்று ஊகித்து அதிகாரிகள் தேர் விழாவை நிறுத்தவும் முயன்றார்களாம். ஜாதி ஹிந்துக்கட்கும் மஹார்கட்கும் சிற்சில இடங்களில் போர்கள் நடந்தன என்றும் அறிகிறோம். போர் எதற்கு? நாசிக் இராணுவத் தோற்றம் வழங்குவது போல் காணப்படுகிறதாம். வெட்கம்! வெட்கம்!

தீண்டாதார் உரிமைக்கு இடையூறு செய்வதும் அவர்களைத் துன்புறுத்துவதும் நாட்டின் விடுதலை வேட்கைக்கு இடையூறுந் துன்பமுஞ் செய்வதாகும். ஜாதி ஹிந்துக்கள் தாராள புத்தியுடன் நடக்கவேண்டிய காலம் கூடியிருக்கிறது. இதனை அவர்கள் நல்வழியில் பயன்படுத்திக் கொள்வார்களாக. ஹிந்துக்கள் “சாதி சிறந்ததா சமயம் சிறந்ததா என்பதைச் சிந்தித்துப் பார்ப்பார்களா? ஹிந்து நூல்களில் உயரிய உபநிடதங்கள் சாதியையா அறிவுறுத்துகின்றன? நாமரூபமற்ற கடவுளுக்கும் சாதி பேதமும் தீண்டாமையும் கற்பிக்கப்பட்ட நாள் தொட்டே ஹிந்து சமயம் தன்னொளியிழந்து இடர்படுவதாயிற்று. சாதி பேதமற்ற - தீண்டாமையற்ற – தூய வேதாந்த ஹிந்து சமயம் என்று முகிழ்த்து

எழுகிறதோ அன்றே நாட்டில் உண்மை விடுதலை வேட்கையெழும். ஆண்டவனுங் கருணை சொரிவான்.

கோயில்களில் தீண்டாமையைத் தொலைக்க ஆங்காங்குள்ள அன்பர்கள் அறவழியில் முயல்வார்களாக.

# இயல் மூன்று

# தலையங்கம் எழுதுதல்

## கருத்துப் பக்கம்

ஒரு செய்தியிதழில் வெறும் செய்தி மட்டுமே வெளியாவதில்லை. பிற எத்தனையோ விஷயங்களும் - குறிப்பாக இதழின் கருத்துகளும் வெளியாகின்றன. ஒரு நாளிதழில் செய்திகளுக்கு அடுத்தபடியாக மிக முக்கியமான விஷயம், அதன் ஆசிரியவுரை அல்லது தலையங்கம். ஆசிரியவுரை என்பது அப்படி அழைக்கப்பட்டாலும், ஒரு செய்தியாசிரியரின் சொந்தக் கருத்தன்று: செய்தித்தாளின் கருத்தே ஆகும். இதை வெளிப்படுத்தப் பொதுவாக நடுப்பக்கமே பயன்படுத்தப்படுகிறது. ஆகவே அது கருத்துப் பக்கம் (Opinion page) எனப்படுகின்றது.

“தமக்கென ஒரு பக்கம் இதழின் ஆரம்பப் பகுதியிலேயே ஒதுக்கிக் கொள்வது அக்கால இதழாசிரியர்களின் வழக்கமாக இருந்துள்ளது” (சிலம்புச் செல்வரின் தலையங்க இலக்கியம், ப. 51)

கருத்துப்பக்கம் என்னும் பெயர் வர, ஆசிரியர் கருத்து மட்டுமே காரணம் எனலாகாது. தலையங்கத்தோடு, நடுப்பக்கத்தில்தான் பொதுவாக வாசகர் கடிதங்களும் வெளியாவது வழக்கம், பிற செய்திச் சித்திரங்கள், இதழ்க் கட்டுரைகள், கருத்துரைகள் போன்றவைகளும் இந்தப் பக்கத்தில்தான் எழுதப்படுகின்றன. இவை யாவும் சிந்தனையாளர்கள், சுதந்திரமாகச் சிந்திக்கும் எழுத்தாளர்கள் போன்ற பல்வேறு தரப்பினரின் கருத்துக்களேயாகும். ஆகவே தான் ஒரு செய்தித்தாளின் நடுப்பக்கம், கருத்துப் பக்கம் என்னும் பெயரைப் பெறுகிறது.

ம.பொ.சி. இதனை ஆசிரியப்பக்கம் என்றும் கூறி வந்துள்ளார். “இதழாசிரியர் ம.பொ.சி. ‘தமிழ்முரசு’ மாத இதழில் ‘ஆசிரியப் பக்கமாக’ ஒரு பக்கமும் ஒதுக்கிக் கொள்ளவில்லை”. (மு.நூ., ப. 51)

செய்திக் கட்டுரைக்குள் தனிமனித விருப்பு வெறுப்புகள், கருத்துகள் இடம் பெறல் கூடாது என்னும் கண்டிப்பான விதி உண்டு. ஆனால் கருத்துப் பக்கத்திலோ, ஆசிரியரின் கருத்துகள் மட்டுமல்ல, பொது மக்களின் கருத்துகளும் சேர்ந்தே வெளியாகின்றன. இக்கருத்துகள், ஓர் எழுத்தாளருடையவையாகவும், அவர் அறிந்த பொதுமக்களுடையனவாகவும் இருக்கலாம். இம்மாதிரிக் 'கருத்து விஷயங்களில்' தலைமையிடம் பெறுவது – 'தலைமையுரை' என்னும் அர்த்தத்திலேயே முன்பெல்லாம் 'தலையங்கம்' என்னும் சொல் வழங்கப்பட்டது. இப்போதெல்லாம் ஆசிரியவுரை என்ற சொல்லும் பயன்படுத்தப்படுகிறது.

"இருபதாண்டுகட்கும் மேலாக இதழுலகில் பேராட்சி செலுத்திய திரு. வி. கலியாணசுந்தரனாரும் தலையங்கக் கட்டுரைகளை 'ஆசிரியக் கட்டுரை' என்றே குறிப்படுகிறார்" என்கிறார் மா. ரா. இளங்கோவன்.

## தலையங்கம்

தலையங்கம், பொதுமக்களுக்கு வழிகாட்டியாகவும், அவர்கள் கருத்தை எதிரொலிப்பதாகவும் இருக்க வேண்டும்" – டாக்டர் இராதாகிருஷ்ணன்.

"மெய்மைகள், கருத்துகள் இவற்றைச் சுருக்கமாக, சுவையான அமைப்பில், மகிழ்வூட்டும் நோக்கத்திலோ, கருத்தை ஏற்கச்செய்யும் நோக்கத்திலோ, முக்கியமான செய்திகளுக்கு விளக்கமளிக்கும் நோக்கத்திலோ, சாதாரண வாசகர்களுக்கும் அத்தலையங்கத்தின் முக்கியத்துவம் விளங்குமாறு வரையப்படும் ஒன்றே தலையங்கம் ஆகும்" என்பது லைலி ஸ்பென்சர் (Lyli Spencer) என்னும் திறன்மிக்க எழுத்தாளரது வரையறை.

## தலையங்கம் எழுதுவோர்

மக்கள் சிலர் – படித்தவர்களும்கூட – சில செய்தித்தாள்களின் தலையங்கங்களைப் படித்துவிட்டு 'நடு நிலைமை அற்றவை, ஒரு தலைச் சார்பானவை' என்று குறைகூறுவதைப் பார்த்திருக்கலாம். ஆம், தலையங்கங்கள் அப்படியிருப்பதில் தவறில்லை. ஆசிரியவுரைகள், கட்சி கட்டவே - ஒரு சார்பாகக் கருத்துக்களையும்

மதீப்பீடுகளையும் வழங்கவே – ஏற்பட்டவைதான். ஆனால் அதை வெளிப்படையாகத் தோன்றுமாறு செய்யலாகாது.

முன்பே கூறியவாறு, எழுதும் ஆசிரியரது கருத்தையோ அவருக்குச் செய்தி சேகரித்துத் தந்த நிருபர்கள் கருத்துக்களையோ ஆசிரியவுரைகள் பிரதிபலிப்பவை அல்ல. நிறுவனத்தின், நிர்வாகத்தின் கருத்துக்களை முன்வைப்பவை. அந்தந்தச் செய்தி நிறுவனத்தின் கௌரவம், சார்பு இவற்றை ஒட்டியே ஆசிரியர்கள் தலையங்க வாயிலாகக் கருத்துக்களை வெளிப்படுத்துகிறார்கள். எனவே மூத்து முதிர்ந்த ஆசிரியர்களுக்கே தலையங்கம் வரையும் கௌரவம் கிடைக்கிறது.

தலையங்கங்கள், யாரால் எழுதப்பட்டவை எனப் பெயர் சுட்டப்படுவதில்லை. (பிற கருத்துப் படைப்புகளில் பெயர்வரி உண்டு.) மக்கள் பேசிக்கொள்ளும்போது கூட, ‘தினமணி இப்படிச் சொல்கிறது’, ‘இந்த விஷயத்தில் இந்து’வின் கருத்து என்னவென்றால்’ என்று பேசிக்கொள்வதைப் பார்க்கலாம். அரசியல், சமூக, பொருளாதார மற்றும் பிற சிறப்புக் கட்டுரைகளை எழுதும் எழுத்தாளர்களும் தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்துபவர்களே. அக்கட்டுரைகளில் வெளியாகும் கருத்துகள் அவர்களது சொந்தக் கருத்துகள். அவை பெயர்வரியுடன் வெளிப்படும். ஒரு தலையங்கம், பல சமயம் தனிப்பட்ட ஆசிரியர் ஒருவரால் எழுதப்பட்டாலும், ஆசிரியர் குழுவினர் அனைவரின் சம்மதத்தின் பேரிலேயே எழுதப்படுவதாகவே பொருள். இம்மாதிரி ஆசிரியக் குழுக்களில் மூன்றுபேர் – ஐந்துபேர் என இருப்பதுண்டு.

## கருத்தை உருவாக்குதல்

கர்ட்டஸ் மெக்டூகல் (Curtis Mcdougall) என்னும் செய்தியாசிரியர் ஒருமுறை சொன்னார்: “என்ன சொல்கிறோம் என்று நன்கு தெரிந்துகொண்டு பேசு அல்லது சும்மா இரு”. கருத்துரைகள் எழுதும் ஆசிரியர்கள் முதலில் ஏராளமான தகவல்களை – மெய்மைகளைச் சேகரித்தாக வேண்டும். மெய்ம்மைகளைச் சேகரித்த பிறகு, அவற்றின் அடிப்படையில் சிந்தித்து, என்ன சொல்வது என்று முடிவுசெய்யவேண்டும். அதாவது என்ன நிலைப்பாடு எடுப்பது என்பதை முடிவு செய்யவேண்டும். முடிவெடுக்கும் முறைகள்

வித்தியாசப்படுகின்றன. மிகச் சிக்கலான பிரச்சினையாக இருக்கும்போது சில சமயங்களில் ஆசிரியர்குழு எல்லாத் தரப்பு விவாதங்களையும் கேட்டு ஆராய்ந்து பிறகு வாக்கெடுப்பு மூலம் முடிவு செய்வதும் உண்டு.

பொதுவாக, நிர்வாகத்தின் கருத்தையே தலையங்கம் வெளிப்படுத்தினாலும், ஓர் ஆசிரியர் தமது சார்பு அல்லது நம்பிக்கைக்கு மாறான நிலைப்பாட்டை எடுக்குமாறு வலியுறுத்தப்படுவதில்லை. வெளியீட்டாளர்களும் மிக வெளிப்படையாக ‘இப்படித்தான் எழுதவேண்டும்’ என்று ஆதிக்கம் செலுத்துவதில்லை. ஆனால் பெரும்பாலும் இருவர் கருத்துகளும் ஒத்தேயிருக்கும்.

## தலையங்கத்தின் நோக்கம்

தலையங்கங்கள் அப்போதைய ஒரு பிரச்சினை அல்லது மிக முக்கியமான ஒரு பிரச்சினைகுறித்துக்கருத்துக் கூறுபவை. அது அன்றைய பிரச்சினையாகவே இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆசிரியரின் நோக்கம் கருதி, தலையங்கத்தைக் கீழ்க்கண்ட மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்:

1. ஆதரவு உரை அல்லது எதிர்ப்பு உரை

2. தூண்டுதல் உரை அல்லது கருத்தேற்றல் உரை

3. பொழுதுபோக்கு உரை

ஆதரவு உரைக்கு ஒரு எடுத்துக்காட்டாகக் கல்கி இரா. கிருஷ்ணமூர்த்தி எழுதிய கீழ்க்கண்ட தலையங்கத்தைப் பாருங்கள். (கல்கி மலர்–1, இதழ்-7)

## ஆண்டவன் செயல்

“நான் ஜெயிலுக்குப் போவதற்கு முன்னால் ஒரு பிளான் தாயரித்துக் கொடுத்துவிட்டுப் போனேன்; ஜெயிலிலிருந்து வெளியே வந்து பார்த்தால் பிளான் அப்படியே நிறைவேறியிருக்கிறது. நாம் போடும்

எல்லாப் பிளான்களும் இவ்வளவு சுலபமாக நிறைவேறுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்?" என்று இராஜாஜி சொன்னார். பழனியில் நந்தனார் விடுதியைத் திறந்து வைக்கும் போது இவ்விதம் தமது மகிழ்ச்சியை வெளியிட்டார். தமிழ் நாட்டில் எத்தனையோ திவ்விய ஸ்தலங்களும் திருக்கோயில்களும் இருந்த போதிலும், அவற்றுள் இரண்டு கோவில்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை என்று கருதப்படுகின்றன. அவை மதுரை மீனாட்சி அம்மன் கோவிலும், பழனி ஆண்டவர் கோவிலுந்தான். பாருங்கள், மதுரை மீனாட்சி அம்மனுக்கும் பழனி ஆண்டவருக்குந்தானே தங்களுடைய திருக் கோவில்களுக்குள் ஹரிஜன பக்தர்களை அழைத்துக்கொள்ள முடிந்தது? கண் கண்ட சக்தி வாய்ந்த இந்த இரண்டு தெய்வங்களில் இப்போது பழனியாண்டவர் கொஞ்சம் முந்திக் கொண்டுவிட்டார். தம்மைத் தரிசிக்க வரும் ஹரிஜன பக்தர்களுக்கு ஒரு விடுதி அமைக்க வேண்டுமென்று ஆண்டவன் திருவுளங் கொண்டார். ராஜாஜியின் மனதில் புகுந்து அதற்கு ஒரு பிளான் போடச் செய்தார். அவரைக் கொண்டே வடநாட்டுப் பணக்காரர் ஒருவரை (ஸ்ரீ ஜி. டி. பிர்லாவின் சகோதரரான ஜே. கே. பிர்லாவை)ப் பணம் கேட்கச்செய்தார். "பேஷாய்த் தருகிறேன் பத்தாயிரம் ஆனபோதிலும் சரி, அதற்குமேல் கொஞ்சம் ஆனாலும் பாதகமில்லை" என்ற பதிலையும் பெற்றார் ஹரிஜன சேவா சங்கக் காரியதரிசி எல். என். கோபால்சாமிக்கு எல்லையற்ற திறமையைக் கொடுத்து, பழனிவாசிகளின் ஒத்துழைப்பையும் வாங்கிக் கொடுத்தார். ராஜாஜி சிறையிலிருந்து வெளியானதும் திறப்பு விழாவிற்குத் தயாராயிருக்கும்படி கட்டிட வேலையை துரிதமாக நடத்துவித்தார். அவ்விதமே இராஜாஜி விடுதலையாகி வந்து திறப்பு விழாவும் சிறப்பாக நடந்தது. எல்லாம் பழனி ஆண்டவன் செயல்தான் என்பதில் சந்தேகமில்லை. இல்லாவிடில் தமிழ்நாட்டில் ஒரு பொதுக் காரியம் தொடங்கிப் போட்ட பிளான்படி குறித்த காலத்திற்குள் முடிந்தது என்பது சாதாரணமனித யத்தனத்தில் நடக்கக் கூடிய காரியமா?

தூண்டுதல் உரைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விவேகபாநு இதழில் (1908 ஜனவரி) வெளிவந்த இந்தத் தலைங்கத்தைப் பார்க்க:-

**விவசாயச் சங்கங்கள்**

இதுகாறும் நம் நாட்டு விவசாய விருத்தியைப் பற்றி நாம் எவ்வளவு கவனித்தோமோ அதனினும் பல பங்கு கவனித்தல் இன்றியமையாததாகிவிட்டது. வர வரத் தேசம் ஜனத்தொகையில் அதிகரித்துக் கொண்டு வருகின்றது. கொள்ளை நோய், வாந்தி பேதி முதலிய கொடிய வியாதிகள் நம் நாட்டிற் குடிகொண்டு அவற்றால் ஜனச்சேதம் அதிகம் ஏற்பட்டாலும் ஜனாபிவிருத்தியாகிறது என்பதிற் சிறிதுமையமில்லை. ஜனங்கள் விருத்தியாகவேண்டுமன்றோ? முன்னிலும் நம் நாட்டில் அநேக புதுப் பாசனங்கள் ஏற்பட்டுச் சாகுபடியும் நாளுக்குநாள் அதிகரித்தே வருகின்றது. இவ்வாறெல்லாம் இருந்தும் முன்னிலும் அகவிலை குறைந்திருப்பானேன்? ஜனங்களின் துர்அதிர்ஷ்டத்தாலா அல்லது அவர்களது முயற்சி குறைவாலா எக்காரணத்தால் இம்மாதிரியிருக்க நேரிட்டிருக்கின்றது என்ற விஷயத்தைச் சிறிது ஆராய்வோம். 100க்கு 70 பேர் வரை விவசாயத்தில் சம்மந்தப்பட்டிருக்கிறார்கள் என்பது பிரசித்தம். அப்படிப்பட்ட நாட்டின் விவசாய நிலைமை எவ்வாறு இருந்து வருகின்றது என்று சீர்தூக்கிப் பார்ப்போமானால் சற்றுக் குறைவான ஸ்திதியில் இருப்பதாகவே தோன்றுகின்றது. இதனை விருத்திபண்ணும் பொருட்டு நம் இராஜதானியின் ஒவ்வொரு ஜில்லாவிலும் விவசாய அபிவிருத்தி சங்கம் ஒன்று ஏற்பட்டு அதற்குக் கிளைச் சபைகளும் ஏற்பட்டுவருகின்றன. சென்னையில் பிரதான சங்கமிருந்துகொண்டு ஏனைச் சங்கங்களைத் தொழிற்படுத்திவருகின்றது. ஆயினும் இச்சங்கங்கள் செய்யும் வேலை மிகவும் சொற்பமென்றே கூறல்வேண்டும்.

சென்ற இரண்டு வருஷ காலமாய் ஆங்காங்குக் கட்சி சாலைகள் ஏற்பட்டுச் சிறிது நன்மை பயக்கின்றன. இச்சங்கங்களின் முயற்சி தேசத்தின் பரிமாணத்தைப் பற்றிச் சிந்திக்குங்கால் சிறிதும் போதாதென்றே சொல்லவேண்டும். நாம் எல்லாச் சீர்திருத்தங்களுக்கும் சர்க்கார் உதவி ஒன்றையே தேடக்கூடாது. அவர்கள் உதவிமிகவும் சொற்பம். ஆகையால் அதனைப் பெறுவதுடன் நாமும் பெரு முயற்சி செய்தல்வேண்டும். அமெரிக்கர் ஜப்பானியர் செய்துவரும் தொழில்களை நன்கு கவனித்தால் நாம் செய்யும் முயற்சி மிகச் சொற்பமே. ஆகையால் இதுவிஷயத்தில் மிக்க ஊக்கம் காட்டி உழைக்க வேண்டும். நம் நாடு கிருஷித்தொழிலில் ஆதிகாலத்தில் மிகச் சிரேஷ்டமாயிருந்ததாயினும் தற்காலம் ஏனைய நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்குங்கால்

கஷீணதசையடைந்திருக்கின்றது என்பதிற் சிறிதும் ஐயமில்லை. எகிப்து, அமெரிக்கா, ஜப்பான் முதலிய இடங்களில் கிருஷித்தொழில் மிகவும் விருத்தியாயிருப்பதால் அம்முறைகளை நாம் நன்கு கவனித்து அவைகளில் நம் நாட்டுக்கு ஏற்றவைகளைத் தழுவிக்கொண்டு கையாளல் வேண்டும். அத்தேசங்களில் கிருஷி சாஸ்திரம் நாளுக்குநாள் விருத்தியாகிக்கொண்டு வருகின்றது. நாம் பூர்வீக நிலைமையிலே இருந்தால் எவ்வாறு சீருஞ் சிறப்பும் அடையளாம்? "பூமி திருத்தியுண்" "சீரைத்தேடின் ஏரைத்தேடு" "தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது", "மேழிச்செல்வம் கோழைபடாது", "நெற்பயிர் விளை", "உழுதுண்டு வாழ்வார்க் கொப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர் பணிக்கு" முதலிய நீதிவாக்கியங்கள் இரண்டாயிர வருஷங்களுக்கு முன் எழுதப்பட்டவை. அக்காலம் முதலே நாம் இம்முக்கிய விஷயத்தில் கண்ணுங்கருத்துமாயிருந்தும் போதுமான கவலையெடுத்துச் சீர்திருத்தம் செய்யவில்லை. முன் உபயோகித்த கலப்பையே உபயோகிக்கிறோம். முன் உபயோகித்த விவசாயக் கருவிகளையே உபயோகிக்கிறோம். இப்பொழுதுதான் சிலர் அந்நியநாட்டாரைப் பார்த்துப் புதுக் கருவிகளில் சிலவற்றை உபயோகிக்கிறார்கள். இவ்விஷயங்களை நாம் நன்கு கவனியாவிடில் கிருஷி விஷயம் விருத்தியடைய இடமில்லை. எருச்சேர்க்கும் விஷயத்திலும், கன்றுகாலிகளைப் போஷிக்கும் விஷயத்திலும், கிணறுகள் முதலியன வெட்டிப்பாசனம் விருத்திபண்ணும் விஷயத்திலும், நம் ஆகாரத்துக்கும் வேண்டிய தானியங்களை விருத்தி பண்ணும் விஷயத்திலும், நம் தேசத்துக்கு க்ஷேமகரமான, பருத்தி, கரும்பு, கடலை முதலிய சாகுபடி விஷயங்களிலும் நாம் மிக்க கவனம் செலுத்துதல் இன்றியமையாதது. இவை விஷயத்தில் விவசாய சங்கத்தார்களின் கடமைகள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றைப் பற்றி மற்றோர் சமயம் நீள நினைந்து எழுதுவோம்.

'பொழுதுபோக்கு உரை' என்பது வெறுமனே பொழுதுபோக்குவதற்காக எழுதப்படுவது அன்று; எடுத்துக்கொள்ளப்படும் விஷயம் அவ்வளவு தீவிரமில்லாதது என்பதே இதன் பொருள். சான்றுக்கு தினமணி 31-12-96 தலையங்கம் ஒன்று:

## 'ஆச்சரியமான' சுற்றறிக்கை

தேசிய அளவில் முக்கியத்துவம் வாய்ந்த நாட்கள் இரண்டு. ஒன்று, ஜனவரி 26 குடியரசு நாள், இன்னொன்று, ஆகஸ்டு 15 சுதந்திர நாள். இவற்றைக் கொண்டாடுவதில், அதிகாரிகள் நடந்து கொள்ளவேண்டிய முறை குறித்து மத்திய உள்துறை அமைச்சகம் ஒரு சுற்றறிக்கையை விடுத்துள்ளது. இந்த சுற்றறிக்கை, இவ்விழாக்களில் கலந்து கொள்ளும் அதிகாரிகள் எத்தகைய உடைகளை அணிய வேண்டுமென கூறுகிறது.

இவ்விழாவுக்கு அதிகாரிகள், சாவதானமாக மட்டுமின்றி, அவரவர் மனம் போனபடியெல்லாம் உடை அணிந்து வரும் வழக்கம் அதிகரித்திருக்கிறது. எனவே, விழாவின் கண்ணியத்தைக் கருதி, அதிகாரிகள் எத்தகைய உடைகளை அணிந்து வர வேண்டுமென இச்சுற்றறிக்கை விளக்குகிறது.

இத்தகைய அறிக்கை வருவது இதுதான் முதல் தடவை அல்ல. 1954-ல் இருந்து இது வந்து கொண்டிருக்கிறது. எனினும், பல அதிகாரிகள் தத்தம் விருப்பப்படி உடையணிந்து வரும் வழக்கத்தைக் கைவிட்டப்பாடில்லை.

சுதந்திரம் வந்த பிறகு, மாநில அதிகாரிகள் உள்பட பல்வேறு அதிகாரிகளும் அவரவர் விருப்பப்படி உடையணிந்து வரும் பழக்கம் தலைதூக்கியது. காமராஜரின் ஆட்சியில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று. முதல்வர் அலுவலகத்தில் ஓர் அதிகாரி அவரைச் சந்திக்க வந்தார். ருத்திராட்சக் கரை போட்ட கதர் வேட்டி, கதர் ஜிப்பாவுடன். அவர் மதுரையைச் சேர்ந்தவர். அவருடைய தந்தை, காமராஜருக்கு நண்பர், பழைய காங்கிரஸ்காரர். காமராஜர் அந்த அரிகாரியை பார்வையால் அளந்த பிறகு என்ன கூறினார் தெரியுமா? “நீங்கள் இங்கே அதிகாரி, மற்ற அதிகாரிகள் எந்த உடுப்பு அணிகிறார்களோ அதில்தான் வரவேண்டும். கட்சிக்காரனைப் போல் வரக்கூடாது” என்று உத்தரவே போட்டுவிட்டார்.

அதிலும், தேசிய விழாவில் கலந்துகொள்ளும்பொழுது அதன் கண்ணியத்தைக் காப்பாற்ற, அதிகாரிகளுக்குரிய உடையுடன் வருவதே முறை. அந்த உடைகள் என்னென்ன என்பதைச் சுற்றறிக்கை விளக்குகிறது. ஆனால், அது பெண் அதிகாரிகள் விஷயத்தில் சற்றுக் கண்டிப்புடன் கூறுகிறது. “பளபளப்பான ஆடை கூடாது. பார்ப்பவர்

மனத்தை வக்கிரப்படுத்தக்கூடிய உடை வேண்டாம். ஜாக்கெட்டுகளைப் பொறுத்த அளவில், கைகள் நீளமாக இருப்பது அவசியம்” இதைவிட ஆச்சரியம் என்னவெனில், இச்சுற்றறிக்கை அனுப்ப வேண்டிய நிலைக்கு அமைச்சகத்தை அதிகாரிகள் உள்ளாக்கியிருப்பது தான்.

‘தூண்டுதல் உரை’கள் மக்களை ஒரு பிரச்சினை குறித்துச் சிந்திக்கவோ அல்லது செயலாற்றவோ தூண்டுபவை. பல சமயங்களில் அவை பிரச்சினைகளை விளக்கித் தீர்வுகளும் உரைப்பனவாக இருக்கும். ஏதேனும் ஒரு நிகழ்ச்சி, செயல் அல்லது பிரச்சினை மீது அவை ஒழுக்க அறவியல் தீர்ப்புகளையும் வழங்கும்.

தலையங்க ஆசிரியரது பணிகள்

வில்லியம் எம். பிங்கர்ட்டன் (William M. Pinkerton) என்னும் அமெரிக்க இதழாளர் பின்வரும் பணிகளைக் குறிப்பிடுகிறார்

## 1.செய்திகளை விளக்குதல்

ஒரு பள்ளிக்கூட ஆசிரியர் பாடங்களை விளக்குவதுபோல, ஒரு தலையங்க ஆசிரியரும் எப்படி ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி நேர்ந்தது அல்லது ஒரு புதிய அரசியல் அல்லது பொருளாதார வாழ்க்கையைப் பாதிக்கும் என்பவற்றையெல்லாம் விளக்க வேண்டும்.

## 2.பின்னணியை உரைத்தல்

எந்த நிகழ்ச்சியையும் அதற்குரிய வரலாற்றுச் சூழலில் வைத்துப் பார்க்க வேண்டும். முன்பு என்ன நடந்துள்ளது என்பதோடு தொடர்புபடுத்தி இன்றைய நிகழ்ச்சியை விளக்கவேண்டும். இவ்வாறு நிகழ்ச்சிகளை வரலாற்றுப் பார்வையில் வைப்பதன் மூலமே பொதுவிஷயங்களின் தொடர்ச்சியை எடுத்துக்காட்ட முடியும். உதாரணத்திற்கு 23-7-1917 லோகோபகாரி இதழில் வெளிவந்த ஒரு தலையங்கத்தினைக் காண்போம்.

## சுதேசியம்

இப்போது எங்கும் சுதேசியப் பேச்சே பொங்கி வழிகின்றது. சுதேச உணர்ச்சி தேசாபிமானத்தைப் பொறுத்ததாக இருக்கின்றது. சுதேச உணர்ச்சியைப் பரவச் செய்வது ராஜாத்துவேஷமாகமாட்டாது. சுதேசியமாவது சுதேசியத்திலுற்பத்தியாகும் பொருளையே வாங்கி, அதன் வாயிலாக சுதேசக் கைத்தொழிலை விருத்தி செய்வதும், ஜனங்களுடைய வறுமையை நீக்குவதுமாம். சுதேசத்தில் உற்பத்தியாகும் பொருள்களையே சிறிததிகப்பொருள் கொடுத்தேனும் நாம் வாங்கி உபயோகப்படுத்தி வருவோமாயின், நமது செல்வம் நமது தேசத்திலேயே பரவி நம்மவர்க்கு க்ஷேமத்தை உண்டாக்கும். சுதேசியக் கட்சியை மேற்கொள்ளுவதினால் நாம் அந்நிய தேசத்தவர்களையும் வெறுக்கின்றோமென்று கொள்ளுதல் கூடாது. ஒருவன் நியாயவழியைப் பின்பற்றுபவனென்றால், அவன் அந்நியாய வழியைப் பற்றிச் செல்ல விருப்பமில்லாதவனென்றே பெறப்படும். ஒருவனை மெய்யனென்றால் அவன் பொய்யை விரும்பாதவன்னென்று பெறப்படும்; அங்ஙனமே, சுதேசியம் என்றால் விதேசியத்தில் விருப்பமில்லாமையென்று பெறப்படுமேயன்றி, விதேசியத்தில் துவேஷபாவமென்று பெறப்படமாட்டாது. அதனால் நம்மனோருள் ஒவ்வொருவரும் மனத்தினாலும், வாக்கினாலும், காயத்தினாலும், சுதேசிகளாக இருப்பதற்கே முயற்சி செய்தல் வேண்டும். இவ்வாறிருப்பதற்கு நாம் சிறிது சுயநல மறுப்புள்ளவர்களாக இருத்தல்வேண்டும். ஒவ்வொருவரும் சுயநன்மையையே நாடி உழைப்பவர்களாயிருப்பார்களாயின், நமது ஜனசமூகமும், நமது தேசமும் மேல் நிலைமைக்கு வருவதில்லையாம். தற்காலத்தில் நாம் ஜனசமூக நன்மையை நாடாது சுயநலத்தையே நாடி வாழ்ந்து வருவதினால்தான் நமது தேசம் பொருளாதாரமின்றிய தேசமாகிவிட்டது. பொருளுடையவர் தம்பொருளைப் பரோபகாரவழிகளிற் செலவு செய்வதில்லை: தொழில் வியாபார விருத்திகளை நாடியும் பொருளைச் செலவு செய்வதில்லை. இதற்குக் காரணம் நமது தேசத்தில் சுதேசியவுணர்ச்சி சிறிதுமில்லாதிருப்பதேயாம். சுதேசியவுணர்ச்சியை யொவ்வொருவரும் மேற்கொள்ளுதல் வேண்டுமென்றிப்போது எங்கும் கிளர்ச்சி பரவிவருவதற்குக் காரணம் நமது தேசம் மேல்நிலையையடைதல் வேண்டுமென்னும் நன்னோக்கமேயாம். நமது தேசத்தில் கல்வி, கைத்தொழில், வியாபாரம் பரவி வருதல் வேண்டுமென்னும் நோக்கத்துடன் உழைத்து வருவதே சுதேசியத்தை

மேற்கொள்வதாம்; நமது தேசாசாரங்களைப் பின்பற்றி வருவதும் சுதேசியமாம். இந்துக்கள் சுதேசியக் கட்சியை மேற்கொள்ளுவது ராஜாத்துவேஷக் கட்சியாமென்று குறுகிய நோக்கமுள்ள ஆங்கிலோ இந்தியர் நினைத்து, பெரும்புரளி செய்யப்பார்க்கின்றனர்; அவர்களுடைய ஆரவாரத்தினால் அதிகாரிவர்க்கத்தினருட் சிலர், ராஜத்துவேஷக்கட்சி சுதேசியமென்னும் போர்வையில் மறைந்து நிற்கின்றதென்று தவறான அபிப்பிராயங்கொள்ள முற்படுகின்றனர். இந்தச் சுதேசியவுணர்ச்சி புதிதாக உண்டானதன்று: அந்நிபெசன்ட் அம்மையார் முதலியோரைப் பந்தோபஸ்தில் வைத்ததனாலுண்டான கிளர்ச்சியென்று அதிகாரிகள் நினைத்தல் கூடாது; லார்ட் கர்சன் காலத்தில், வங்காளப் பிரிவினையின் காரணமாக உண்டானதென்றும் கருதுதல் கூடாது. லார்ட் கர்சன் காலத்திற்கு முன்னரே சுதேசியவுணர்ச்சி இந்தியாவில் தோன்றிப் பரவி வருகின்றது. இக்கட்சி சிலகாலம் கிளர்ச்சி பெற்றும், சில காலம் மங்கியுமிருக்கின்றது. இவ்வாறு மாறுபட்டு வருவது ஜனசமூகத்தின் மாறுபாட்டைப் பொறுத்திருக்கின்றது. யுத்தங்காரணமாக இந்தியா இப்போது சிறிது நல்விழிப் படைத்திருக்கின்றது; தன்னைச் சுற்றியிருக்கும் தேசங்கள் மேல்நிலைமையையடைந்திருப்பதையும், தான் எல்லா விதத்தினாலும் அவற்றிற்குத் தாழ்வடைந்திருப்பதனையும் உணர்ந்து, அத்தேசங்களுக்குச் சமத்துவமாவதற்குரிய வழிகளைப் பின்பற்ற முற்பட்டிருக்கின்றது. அதனாலிந்தச் சுதேசியக் கட்சி மேன்மேலும் வன்மை பெற்று வரும். இக்கட்சி வன்மை பெற்று வரவர நமது தேசம் பொருளாதார மிகுதியுடையதாகும். பொருளாதாரமுடைய தேசமே கல்வி – கைத்தொழில் - வியாபார முதலியவற்றில் மேல்நிலைமையடைதல் கூடும். இந்தியா மேல்நிலைமையடையுமாயின், அது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் மாட்சிமைக்கு அடிப்படையாகவிருக்கும்.

1917 இல் எழுதப்பட்ட இத்தலையங்கத்தில் செய்திகளை விளக்குதல் (இதில் ‘சுதேசியம்’ என்பதன் தன்மைகளை விளக்குதல்), பின்னணியை உரைத்தல் (சுதேசியம் எவ்விதம் எழுந்தது என்ற சுருக்கமான தகவல்), எதிர்கால முன்னறிவிப்பு (நமது தேசம் மேல்நிலையடைதல், பிரிட்டிஷ் ஆட்சியின் மாட்சிமை உயர்தல்), ஒழுக்கத் தீர்ப்புகளை வழங்குதல் (சுயநலமின்றி வாழ வேண்டும், சுதேசியத்தைப் பின்பற்ற வேண்டும்) ஆகிய தன்மைகளைச் சிறப்பாகவே காண முடிகி;றது.

## 3.எதிர்கால முன்னறிவிப்பு

அன்றைய நிகழ்ச்சிகளை அலசிய பிறகு அவற்றின் முக்கியத்துவம் என்ன என்பதைக் கண்டறிவது எளிதாகிவிடுகிறது. இவை எப்படி இனிவரும் நிகழ்ச்சிகளைப் பாதிக்கும் என முன்னறிந்து கூறுவது இயலும்.

## 4.ஒழுக்கத்தீர்ப்புகளை வழங்குதல்

வரன்முறையாகவே, செய்தித்தாள் ஆசிரியர், நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகள் மீது அறிவியல் கருத்துகள் உரைப்பது மரபு. இவை மூலம் அவர் பொது மனச்சாட்சியை உருவாக்குகிறார். (பாபர் மசூதி இடிக்கப்பட்ட போது இப்படிப் பொது மனச்சாட்சி ¬'நிகழ்ந்தது தவறு' என்னும் கருத்து – உருவாக்கப்பட்டது நினைவிருக்கலாம்.) சமூக நெறிப்படி எது சரி, எது தவறு என்ற ஓர் ஆசிரியர் மதிப்பிட்டே ஆகவேண்டும். அந்த அடிப்படையில் நல்லவற்றைப் பாராட்டி, தீயவற்றுக்கு எதிராகப் போராடவும் வேண்டும்.

இவை மிக உன்னதமான நோக்கங்கள். ஆனால் இவை முழுமையாகச் சரிவரச் செய்யப்படுவதில்லை. வாஷிங்டன் போஸ்ட் (Washington Post) என்னும் செய்தியிதழின் ஆசிரியர் ஆலன் பார்த் (Allan Barth) சொன்னார்: "சமூகத்துக்கு எடுத்துச்சொல்லத் தங்களிடம் விஷயம் இருக்கிறது என்று கருதியவர்களால்தான் முன்பெல்லாம் பெரும்பாலான பத்திரிகைகள் உருவாக்கப்பட்டன; ஆனால் இன்றோ வியாபாரம் செய்யத் தங்களிடம் கொஞ்சம் இருக்கிறது என நம்புபவர்களால் பத்திரிகைகள் எடுத்துச் செல்லப்படுகின்றன."

1949 இல் அமெரிக்க நாட்டில் தலையங்க ஆசிரியர்கள், எழுத்தாளர்களின் கூட்டம் நடந்தபோது முன்வைக்கப்பட்ட அடிப்படைக் கோட்பாடுகள் பின் வருமாறு:

"இதழ்த்துறையோ, குறிப்பாக அதில் தலையங்கம் எழுதும் பணியோ, இவை வெறும் பணம் சம்பாதிப்பதை நோக்கமாகக் கொண்டவையல்ல. பொதுமக்கள் நலத்திற்கும் சேவைக்கும் ஏற்பட்ட பணிகள் இவை. தலையங்கம் எழுதுவோரது முக்கியப் பணி, ஒரு குடியரசு நாடு நலம் விளைவிக்கும் முறையில் மக்களுக்குத்

தகவல்கள் அளிப்பதும், நேரிய மதிப்பீடுகளை அவர்களே செய்துகொள்ள உதவுவதும் ஆகும். ஆகவே பின்வரும் கொள்கைகளைப் பின்பற்றுவது தலையங்க எழுத்தாளர்களுக்கான நேர்மையின் அடிப்படையில் அவசியம்:

1. தலையங்க எழுத்தாளர் மெய்ம்மைகளை நேர்மையாகவும் முழுமையாகவும் முன்வைக்க வேண்டும்.

2. கூறப்பட்ட மெய்ம்மைகளிலிருந்து வெளிப்படும் பொதுநோக்கிலான முடிவுகளையே வருவிக்க வேண்டும்.

3. தனிப்பட்ட அக்கறைகளால் ஒருபோதும் அவர்கள் தூண்டப்படலாகாது. ஊழலிலிருந்து அவர்கள் நிச்சயம் விடுபட்டிருக்க வேண்டும்.

4. தவறு செய்வது (தமக்கும்) இயல்பே என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும். ஆகவே தம்முடன் மாறுபடும் கருத்துகள் கொண்டவர்களின் குரலுக்கும் ஓர் இடம் தர வேண்டும்.

5. அவ்வப்போது பெறப்பட்ட தகவல்களின் அடிப்படையில் தமது முடிவுகளைப் பரிசீலனை செய்துகொண்டே வரவேண்டும்.

6. ஜனநாயகக் கோட்பாட்டில் உறுதியான பிடிப்பும் மகிழ்நோக்கும் கொண்ட முன்னேற்றம் சார்ந்த வாழ்க்கைத் தத்துவமும் உள்ளவராக இருக்க வேண்டும்.

7. தம் தொழில் நேர்மையினைக் காப்பாற்றும் பொறுப்பில் செயல்படும் தமது நண்பர்களுக்கும் ஆதரவளிப்பவராக இருக்க வேண்டும். ('மிமியோகிராஃப் இதழ் 22' அக்டோபர், 1949.)

## மெய்ம்மைகளைத் தேடுதல்

தலையங்கம் எழுதுவோர் ஏராளமான மெய்ம்மைகளைத்-தகவல்களைச் சேகரித்தாக வேண்டும் என்று முன்பே கூறப்பட்டது. அதற்கும் முதலில் செய்ய வேண்டியது, தான் என்ன பொருளைப் பற்றி எழுதவேண்டும் எனத் தீர்மானிப்பது. சில சமயங்களில் 'இன்ன விஷயத்தைப் பற்றித்தான் எழுதவேண்டும்' என்று மேலிருந்து

உத்தரவும் கிடைக்கலாம். எப்படியோ, தானே தீர்மானித்ததோ அல்லது பிறர் தீர்மானித்துத் தனக்கு அளித்ததோ, தலையங்கம் எந்த விஷயத்தைப் பற்றியது என்பதுதான் முதல் தேர்வு. அதன் பிறகு, எடுத்துக்கொண்ட நிகழ்வு அல்லது பிரச்சினை அல்லது கேள்வியைப் பற்றிய தகவல்களை எல்லாத் திசைகளிலிருந்தும் தேடித் தொகுத்தல். மெய்ம்மைகளையும் தகவல்களையும் தோண்டிப் துருவி எடுத்தல் மிகக் கடினமானதுதான்; ஆனாலும் எல்லா ஆய்வுகளிலும் போலவே இங்கும் (கருத்துவயமாக்கலிலும்) அது மிகவும் பலனைத் தரக்கூடியது.

வாஷிங்டன் போஸ்ட் இதழின் தலையங்க எழுத்தாளர் ரோசன்ஃபீல்டு (Rosenfield) சொன்னார்: "ஒரு தலையங்கத்திற்கான தரவுகள் பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கும்போது அல்லது இன்னொன்றை எழுத முனைந்து கொண்டிருக்கும்போது – நான் தயாரிப்புச் செய்யாத நேரம் என்று ஒன்று கிடையாது. நான் படிக்கும் ஒவ்வொரு விஷயமும், யாருடனும் எதைப் பற்றியும் பேசுகின்ற உரையாடலும், பஸ்ஸில் பிரயாணம் செய்யும்போதும் மனத்தில் தோன்றுகின்ற எவ்வித எண்ணமும் - நான் ஏற்கனவே சேர்த்து வைத்துள்ள தகவல் களஞ்சியத்துக்குச் சேர்ப்பதாகவோ, அல்லது எழுதுவதற்காக நான் தயாரித்து வைத்துள்ள பார்வைச் சட்டகத்திற்கு உதவுவதாகவோதான் அமைகின்றன."

ஆனாலும் தலையங்க எழுத்தாளர் பணி மிகவும் கடினமானது; காரணம், அவருக்குக் கிடைக்கக்கூடிய கால அவகாசம் குறைவு. அதற்குள் தேவையான தகவல்களைத் தேடித் துருவித் தொகுத்தாக வேண்டும். ஆகவே இன்னும் போதிய எண்ணிக்கை கொண்ட ஆசிரியவுரை எழுத்தாளர்கள் குழு அமையவேண்டும் என்று பலர் சுட்டிக்காட்டுகின்றனர். ஆனாலும் இதுவும் சுற்றைப் பொறுத்துத் தீர்மானிக்கப்படக்கூடியதாகவே உள்ளது. தகவல்கள் சேகரிப்பதற்கும், அவற்றைப் பற்றிச் சிந்திப்பதற்கும் நிறைய அவகாசம் தேவை என்பது உண்மை. அவை ஒரு தலையங்க எழுத்தாளருக்குக் கிடைப்பதில்லை என்பதும் உண்மை.

தகவல் சேகரிப்பு இன்னொரு கோணத்திலிருந்தும் முக்கியமானது. தலையங்கங்களைப் படிக்கின்ற நல்ல வாசகர்கள், ஒரு ஆசிரியரின் கருத்து எதன் சார்பாக இருக்கிறது என்பதைப் பற்றி அதிகம்

கவலைப்படுவதில்லை. அந்தக் கருத்துரைக்கு அடிப்படையான காரணங்களாக அவர்கள் எவற்றை முன்வைக்கிறார்கள் என்பதே வாசகர்களின் அக்கறை. ஆகவே ஒரு தலையங்க எழுத்தாளரின் முடிவுகள் கருத்தேற்றம் செய்யக் கூடியவையாக அமையவேண்டுமானால், அவற்றின் அடிப்படை மெய்ம்மைகளும், அவற்றிற்கான காரணங்களும் செம்மையாக அமையவேண்டும்.

பல வாசகர்கள், தொடர்ந்து தாங்கள் படிக்கும் செய்திக்கதைகளின் அடிப்படை மெய்ம்மைகளையும் தங்கள் நினைவில் இருத்திக் கொள்வதில்லை என்பது உளவியலாளர்களால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆகவே இவற்றைத் திரும்பத்திரும்ப நினைவுறுத்துவதும் தலையங்க எழுத்தாளரின் கடமையாக உள்ளது. மறந்துவிடும் தன்மைகொண்ட வாசகர் கூட்டத்திற்கு ஒரு பிரச்சினையின் அடிப்படை மெய்ம்மைகளைச் சுட்டிக்காட்ட வேண்டியது ஆசிரியர் கடமை.

செய்திமூலத்தின் நம்பகத்தன்மையை இங்கே நினைவிற்கொள்ள வேண்டும். ஒரு தலையங்க ஆசிரியரது நம்பகத்தன்மை, கருத்துவயமாக்கல் நோக்கிலிருந்து காணும்போது மிக முக்கியமானது. ஒரு சிறு தகவலைத் தவறாகத் தந்துவிடுதலோ, சரியான அடிப்படைகளின்றி ஒரு கருத்தை ஏற்க வாசகரைத் தூண்டுவதோ, வாசகர்க்கு ஆசிரியர் மீதும் பத்திரிகை மீதும் உள்ள நம்பிக்கையைக் குலைத்துவிடக்கூடும்.

## செய்தித்தாள்களே செய்திமூலங்கள்

தகவல் சேகரிப்பில் முதலில் உதவக்கூடியவை ஒரு ஆசிரியர் பணியாற்றக்கூடிய பத்திரிகை நிறுவனத்தின் சொந்தப் பத்திரிகைத் தொகுப்புகளே, ‘மார்க்’ (Morgue) எனப்படும் பழம்பத்திரிகைச் சேமிப்பு அறைகளில் தேவையான தகவல்களை ஒருவர் பெற இயலும். எனினும் அதைவிட முக்கியமாக, தாமே அத்தியாவசியத் தகவல்கள் கொண்ட செய்திகளை வெட்டிக், கோப்பில் சேகரித்து வைத்திருப்பது இன்றியமையாதது.

பல பெரிய செய்தித்தாள் நிறுவனங்களில் நூலகங்கள் உண்டு. இன்றைய அறிவியல் வளர்ச்சியின் விளைவாகப் பழைய

பத்திரிகைகளை அப்படியே மைக்ரோஃபில்ம் எடுத்துச் சேகரித்து வைப்பதும் சாத்தியமாகிறது. இவற்றின் வாயிலாகவும், முழுஅளவு தகவல் அடிப்படைத் தொகுப்பு கொண்ட கம்ப்யூட்டர்கள் மூலமாகவும் வேண்டிய செய்திகளை எப்போதும் கைக்கொள்ள முடியும்.

## பொதுப்பார்வை நூல்கள்

ஒரு எழுத்தாளருக்கு அகராதிகளின் தேவை மிகுதி. ஆங்கில அகராதிகளும், தமிழ் அகராதிகளும் தமிழ் இதழாளர்களுக்கு மிகவும் அவசியம். ஆக்ஸ்போர்டு அகராதி, போன்ற ஆங்கில அகராதிகளும், கழக தமிழ் அகராதி, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, வின்சுலோவின் அகராதி போன்ற தமிழ் அகராதிகளும் மிகவும் இனிறியமையாதவை. எனினும் ஆங்கிலமொழிச் செம்மை கையாளப்படுமளவு, தமிழ் மொழிச் செம்மையிலும், அகராதிப் பயன்பாட்டிலும் தமிழ் இதழாளர்கள் கவனம் செலுத்துவதில்லை என்பது வருந்தத்தக்கது. அதே சமயத்தில் அகராதிக் கலை நுட்பங்களை நன்கு அறிந்தவர்களால் தமிழில் பலவிதப் பயன்பாட்டு அகராதிகள் இன்னும் தயாரிக்கப்படவில்லை என்பதும் தெளிவு. பொது அகராதிகளே அன்றி இப்போது ஒவ்வொரு குறிப்பிட்ட துறைக்கும் (சட்டம், தகவல்தொடர்பு, இயற்பியல், வேதியியல், பொறியியலின் பல்வேறு துறைகள்…, மருத்துவம், இப்படி) தனித்தனி அகராதிகள் வெளியிடப்பட்டுள்ளன. இவற்றிலுள்ள தகவல்கள் எந்த எழுத்தாளருக்கும் பயன்படுபவையாகும்.

‘அல்மனாக்’ (Almanac) என்னும் தகவல் புத்தகங்கள் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளன. மேற்கொள் நூல்கள் - புகழ்பெற்ற அறிஞர்களின் கருத்துக் களஞ்சியங்கள் பலவும் ஆங்கிலத்தில் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. (உ.ம்: பார்ட்லெட்டின் ‘Familiar Quotations’ என்னும் நூல்). இவைப்போலத் தமிழில் அதிகம் கிடையாது. தமிழில் எம். ஆர். அடைக்கலச்சாமி யின் ‘தமிழா! இந்தா உன் சொத்து’ போன்ற நூல்கள் இம்மாதிரியானவை. இதே போல ‘யார் – எவர்’ (Who’s Who) என்னும் தகவல்களைத் தருகின்ற வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பு நூல்களும் மிகவும் பயன் உள்ளவை.

மொழியைப் பயன்படுத்துவது எவ்வாறு எனத் தெரிவிக்கும் ஆங்கிலப் பயன்பாடு சம்பந்தமான நூல்களும் ஆங்கிலத்தில் நிறைய உள்ளன. தமிழ்மொழிப் பயன்பாடு சம்பந்தமான நூல்கள் மிகக் குறைவு. உள்ள சிலவும் குறையுடையனவாகவே உள்ளன. தமிழ்ப்பண்டிதர்களின் பழமை மனப்பான்மையும், நவீன தமிழ்ப் பயன்பாட்டுக்கேற்ற நல்ல இலக்கண நூல்கள் உருவாகாமையும் இதற்கு அடிப்படைக் காரணங்கள். ஆகவே பல பத்திரிகை எழுத்தாளர்கள் தாங்கள் எழுதுவதே நல்ல தமிழ் என்று தாங்களாகவே நினைத்துக்கொண்டு தவறாகவும் எழுதுகின்றனர்.

ஆண்டுப் புத்தகங்கள் (Year Books) எனப்படும் தகவல் தொகுப்பு நூல்கள் பல நிறுவனங்களிலிருந்தும் பத்திரிகைகளிலிருந்தும் வெளியிடப்படுகின்றன. தமிழிலும் அண்மைக்காலத்தில் இப்படிப்பட்ட நூல்கள் வெளிவருவது மகிழ்ச்சிக்குரிய செய்தி.

மலையாள மனோரமா நிறுவனம் வெளியிடும் ‘மனோரமா இயர்புக்’ தினமலர் நிறுவனம் வெளியிடும் ‘தினமலர் இயர்புக்’ போன்ற முயற்சிகள் பாராட்டத்தக்கவை. மேலைநாடுகளில் இம்மாதிரி தகவல் குறிப்புப் புத்தகங்களே அன்றி, பல்வேறு இதழ்களில் வெளிவந்த தலையங்கங்களைத் தொகுத்து வைத்திருந்து தரும் ஆசிரியத் தொகுப்புகள் போன்ற நூல்களும் உண்டு.

இவை தவிர, டைஜஸ்டுகள் (Digests) எனப்படும் பலவித கட்டுரைகள் கொண்ட பத்திரிகைகள் அல்லது தொகுப்புகள், அப்ஸ்ட்ராக்ட் (Abstract) என்று சொல்லப்படும் முக்கியக் கட்டுரைச் சுருக்கங்களைத் தாங்கிவரும் அறிவியல் - சமூகவியல் துறை தொடர்பான இதழ்கள் போன்றவையும் பயன்படும். தமிழில் இதுவரை ‘டைஜஸ்ட்’ எனப்படும் தன்மை கொண்ட பத்திரிகைகள் என வெளிவந்தவை ஏ.கே. செட்டியாருடைய ‘குமரி மலர்’ தி. ஜ. ரங்கநாதன் ஆசிரியராக இருந்த ‘மஞ்சரி’ போன்ற இதழ்களே ஆகும். இப்படிப்பட்ட நல்ல இதழ்கள் இன்று ஏனோ வெளிவருவதில்லை. ஆய்வுச் சுருக்கங்களை அல்லது கட்டுரைச் சுருக்கங்களை வழங்கும் ‘அப்ஸட்ராக்ட்’ எனப்படும் பார்வைப் பத்திரிகைகள் எவையும் தமிழில் இல்லை.

## சிறப்புப் பார்வை நூல்கள்

இவையேயன்றி, அரசாங்க ஆவணங்கள், நீதித்துறை சம்பந்தமான குறிப்புகள், சட்டத்துறைப் பார்வை நூல்கள், தீர்ப்புத் தொகுப்புகள், அரசாங்க சட்டமன்ற நடவடிக்கைகள் அடங்கிய புத்தகங்கள் போன்றவை சிறப்புப் பார்வை நூல்களாகும். இவற்றை அவ்வத்துறை சார்ந்த ஆவணக்காப்பகங்கள், நூலகங்கள், அதிகாரிகள், வல்லுநர்கள் போன்றோரிடமிருந்தே பெற்றுப் பயன்படுத்த வேண்டும்.

## யாரை / எதை நம்புவது?

பெரும்பாலும் ஒரு தலையங்க எழுத்தாளர் தேடுகின்ற விஷயங்கள் எந்த ஒரு மூலத்திலிருந்தேனும் கிடைத்துவிடும். ஆயினும் தங்களைத் தூண்டுகிற விஷயங்கள் எவை, அவற்றிற்கான செய்தி மூலங்கள் எவை, இத்தகவல்களை எப்படிச் சீரமைக்கிறார்கள், அவற்றில் அடிப்படையான தகவல்கள் எவை, அவ்வளவாக அவசியமற்றவை எவை, எந்த வகையான தகவல்கள் சந்தேகத்துக்கிடமானவை, எவை மிக இன்றியமையாதவை என்பதையெல்லாம் தலையங்க எழுத்தாளர்கள், ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

மேற்கூறிய தகவல் மூலங்களையெல்லாம் நன்கு பயன்படுத்துகின்ற ஒரு செய்தியாசிரியராகிய லைலி ஸ்பென்சர் ஒருமுறை சொன்னார்: “இவற்றிலிருந்து தகவல்களை நமக்குத் தேவையான விஷயத்துக்கெனத் தேடியெடுப்பது, தீயணைப்பானிலிருந்து குடிநீரைப் பெறுவது போன்றது.” ஒரு செய்தியிதழ் ஆசிரியரைப் தேடி வராத செய்திகளோ தகவல்களோ கிடையாது. என்றாலும், “தகவல்களில் அவர்கள் மேலும் மேலும் மூழ்கிக் கொண்டிருக்கிறார்கள்; ஆனால் தேவையான தகவல்களைத் தக்க சமயத்தில் பெற முடியாமையால் திணறுகிறார்கள்.”

மேலும், மேற்கண்ட தரமான அகராதிகள் போன்றவற்றிலிருந்து பெறப்படும் தகவல்களும் சில சமயங்களில் துல்லியமற்றவையாக அமைந்துவிடுகின்றன. வாய்மொழியாகப் பெறப்படும் தகவல்களை நம்புவது என்பதே கூடாது!

## கடைசியாக ஒரு வார்த்தை:

“ஒரு தலையங்க ஆசிரியர் எத்தகைய தகவற்களஞ்சியங்களை, புத்தகங்களை வைத்திருக்க வேண்டும் என்று இன்னொருவர் அறிவுரைப்பது பொருத்தமன்று. ஒருவர் தமது தோட்டத்தில் என்ன பூச்செடிகள் வைக்க வேண்டும் என்று, இன்னொருவர் அறிவுரை கூறுவது போன்றது இது. அந்த ஆசிரியருடைய பின்னணி என்ன, அவரது ஆர்வங்கள் என்ன, அவர் எந்த எந்த விஷயங்களைப் பற்றி எழுத முயல்பவர் என்று எத்தனையோ தன்மைகளைப் பொறுத்தது, அவர் எத்தகைய தகவல் புத்தகங்களைத் தேடுவார் என்பது. பயன்படுத்தி நன்கு அறிந்த தகவல் புத்தகங்களே மிகப் பயனுள்ள புத்தகங்களுமாகும்.”

எனினும் தகவல் அறியும் முறைகளை நான்காகச் சுருக்கிக் கூறலாம்:

1. தானே நேராக நோக்குதல் வாயிலாக; (From direct observation)

2. தனது நினைவாற்றல் வாயிலாக (எவ்வளவுதான் நம்புதற்கு இயலாததாயினும், சில சமயங்களில் அவசியம் தேவைப்படுவது இது);

3. தகவல்கள், புத்தகங்கள், அறிக்கைகள் போன்றவற்றிலிருந்து;

4. தம்மளவிலே உண்மையான கூற்றுகளிலிருந்து; (From self-evident truths or axioms;)

## கல்வியின் பயன்

தலையங்கத்தை எழுதுவதற்கு முன்பான ஆயத்த நிலைக்கு முறைப்படியான கல்வி, மிகவும் பயனள்ள ஒன்றாக அமைகிறது. விஷயங்களைத் தெளிவாகக் காண்பதற்கும், சாராம்சமான பகுதிகளையும் அவ்வளவாகப் பயனற்ற பகுதிகளையும் வேறுபடுத்திக் காண்பதற்கும். தொகுத்த விவரங்களை ஒரு பார்வைச் சட்டகத்தினுள் பொருத்தி நோக்குவதற்கும், ஆழ்ந்து சிந்தித்துப் பொருத்தமான முடிவுகளுக்கு வருவதற்கும் ஒருவரது கல்விப்பரப்பு பயன்படுகிறது. மேலும் முறையான படிப்பு என்பது, பலவகையான தகவல்களை நாம் அறிவதற்கும், உற்று நோக்குவதற்கும், மனப்பாடம் செய்வதற்கும் சொல்லிக் கொடுத்திருக்கிறது.

## ஆயத்தநிலை – மெய்ம்மைகளைப் பகுத்துச் சிந்தித்தல்

தேவையான தகவல்களைத் தொகுத்தால் மட்டும் தலையங்கம் வந்து விடுமா என்ன? அரிசி வாங்கியவுடனே சோறாகி விடுமா? சேகரித்த தகவல்களைத் தொகுத்து, பல்வேறு வகைகளாகப் பகுத்து, தர்க்க முறைப்படி சிந்திக்க வேண்டும்.

எவ்வளவுதான் நன்கு படித்தறிந்த, சிந்திக்கும் ஆற்றலுள்ள தலையங்க ஆசிரியரானாலும், 'எந்தச் சிக்கலைப் பற்றி சிந்திக்கிறோம், என்பது முதலில் தெளிவாக வேண்டும். என்ன விஷயத்தை நாம் பேச இருக்கிறோம் என்பது தெளிவாகப் புலப்பட வேண்டும்; அதன் 'குவியம்' என்ன என்பது வரையறுக்கப்பட வேண்டும்; தற்காலிகமான ஒரு கருதுகோள் உருவாக்கப்படவேண்டும்; பிறகு எடுத்துக் கொண்ட விஷயத்தை எல்லாக் கோணங்களிலிருந்தும் ஆராய வேண்டும். முதல் படியையே சரிவர கடக்கவில்லையென்றால் பிறகு வரும் படிகள் இயலாமலே போய்விடும். என்ன விஷயம் அல்லது எந்தச் சிக்கல் அல்லது என்ன முரண்பாட்டைப் பற்றி நாம் கருத்துரைக்கப் போகிறோம் என்பதைத் தெளிவுபடுத்திக் கொள்வதுதான் முதற்படி. இதை நன்கு செய்ய, எந்த விஷயத்தைப் பற்றிப் பேசப்போகிறோம் என்பதை ஒரு கேள்வியாக உருப்படுத்திக் கொள்ள வேண்டும்.

பல சமயங்களில் அலுவல் மிகுந்த ஒரு தலையங்க எழுத்தாளர், ஒரு பிரச்சினையை மட்டுமே எடுத்து ஆராயக்கூடிய வசதியான நிலையிலிருப்பதில்லை. மாறாகப் பல்வேறு சிந்தனைகள், பல்வேறு பிரச்சினைகளுக்குள் மாட்டித் தவிப்பவராக இருப்பார். இருந்தாலும், அவர் நன்கு ஆயத்தம் அல்லது தயாரிப்புச் செய்பவராக இருக்கவேண்டும். ஆயத்தம் செய்வது, முறைப்படியான கல்வி போன்றே. விமரிசன ரீதியான சிந்தனைக்கும் ஆழ்ந்து சிந்தித்தலுக்கும் இட்டுச் செல்கிறது. இதனால் நல்ல தலையங்கங்கள் உருவாகின்றன.

## நம்பகத் தன்மையும் கருத்துவசப்படுத்தலும் (Credibility and Persuasion)

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அரிஸ்டாட்டில் எழுதினார்: "நம்பகத்தன்மை என்பது ஒரு கருத்தைச் சொல்வோருடைய

குணநலத்தைப் பொறுத்தது. நாம் நல்லவர்களை முழுதும் நம்புகிறோம்; பிறரை விட அதிகமாக நம்புகிறோம்.”

நல்ல குணநலம், நல்ல அறிவாற்றல், வாசகர்களின் நன்மை பற்றிய அக்கறை ஆகிய மூன்றும் தான் ஒழுக்கவியல் கருத்துரைத்தலின் அடிப்படைகள் என்றார் அவர், ஆசிரியரோ, மத அல்லது கொள்கைப் பிரசாரகரோ. ஒரு சாதனத்தின் கருத்துரையாளரோ எவராயினும் அவரது நம்பகத்தன்மையைப் பொறுத்தே மக்களிடம் கருத்து ஏற்படுகிறது என்பது தற்கால ஆய்வு. யேல் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த தொடர்பியல் ஆராய்ச்சியாளர்கள் இத்துறையில் பல ஆய்வுகள் நடத்தி, அதிக நம்பகத்தன்மை அதிகக் கருத் தேற்றத்தை உருவாக்குகிறது என்பதைக் கண்டறிந்தனர்.

அமெரிக்க மக்களைப் பொறுத்தவரை, அவர்களது தலைவரான ஆப்பன்-ஹைமர் நம்பகத்தன்மை மிகுந்தவர்; ரஷ்யாவிலிலுந்து வெளிவந்த ‘ப்ராவ்தா’ இதழ் அவ்வளவாக நம்புதற்குரியது அன்று. ஒரு குறிப்பிட்ட வாசகர்களிடம் ஆப்பன்ஹைமர் கூறியதாகவும், இன்னொரு குழு வாசகர்களிடம் ப்ராவ்தா கூறியதாகவும் ஒரே கருத்தைச் சொன்னபோது, ஆப்பன்ஹைமர் குழுவினர் அதை அப்படியே நம்பினார்கள்; பிராவ்தா சொன்னதாகக் கூறப்பட்ட குழுவினர் அச்செய்தியை நம்ப மறுத்தார்கள்.

மேலும் யேல் குழுவின் ஆராய்ச்சிப்படி, அதிக நம்பகத்தன்மையுள்ள செய்தியாசிரியர்கள், வாசகர்களின் மனப்பாங்குகளிலும் அதிக மாற்றத்தை ஏற்படுத்தினர்; குறைந்த நம்பகத்தன்மையுள்ளவர்களாகக் கருதப்பட்டவர்கள், வாசகர்களிடம் அவ்வளவாகக் கருத்தேற்றலையோ மனப்பான்மை மாற்றத்தையோ ஏற்படுத்த இயலவில்லை.

**நம்பகத்தன்மை ஏற்படுவதற்கான காரணிகளைப் பின்வருமாறு கூறலாம்:**

1. ஒரு கருத்தைச் சொல்பவர் அத்துறையில் வல்லுநராக, அத்துறையில் மிகத் துல்லியமான கருத்துகளை வழங்கக்கூடியவராக இருத்தல்;

2. ஒரு கருத்தைச் சொல்பவர், அதைக் கேட்கும் வாசகர்களுக்கு நெருக்கமானவராகவோ, அவர்களது நம்பிக்கைக்குப் பாத்திரமானவராகவோ, உணர்வுப்பூர்வமானவராகவோ, உணர்வுப்பூர்வமாக வாசகர்களுடன் ஒன்றுபவராகவோ இருத்தல்;

3. ஒரு கருத்தைச் சொல்பவர், அக்கருத்தை ஏற்றால் வாசகர்களுக்கு நன்மை ஏற்படுத்தக் கூடியவராகவோ, அன்றி வாசகர்கள் அவரது கருத்தை ஏற்காவிட்டால் தண்டிக்கக்கூடியவராகவோ அமையும் தன்மை.

மேற்கண்ட கருத்துகள் ஒரு தலையங்க ஆசிரியரை எவ்விதம் பாதிக்கும்? ஒரு தலையங்க ஆசிரியரை, சாதாரண மக்களைவிட நன்கு விஷயமறிந்தவர் என்ற முறையிலே, (மேற்கண்ட முதல் கருத்தின் அடிப்படையில்) வாசகர்கள் அதிகமாக நம்புவார்கள். பெரும்பாலான வாசகர்களின் மனப்பாங்கு (உதாரணமாக மத்திய தர வகுப்பைச் சார்ந்து சிந்தித்தல்) செய்தியாசிரியருக்கும் இருக்குமானால், அவரது கருத்துகள் ஏற்புப்பெறும். மூன்றாவது கருத்து அடிப்படையில் ஒரு தலையங்க ஆசிரியர் செய்யக்கூடியது எதுவுமில்லை. ஏனென்றால் தமது கருத்துகளை ஏற்பதற்காக வாசகர்களுக்குப் பரிசு வழங்குவதோ, ஏற்காமைக்காக வாசகர்களைத் தண்டிப்பதோ ஒரு தலையங்க ஆசிரியரால் முடியாத செயல்.

நம்பகத்தன்மை சார்ந்தே கருத்தேற்பு மிகுதியாக நிகழ்கிறது என்பது உண்மையே. ஆனாலும், அது ஒரு தனித்த இயல்பன்று. பல தன்மைகள் ஒருங்கு சேருவதன் விளைவே கருத்தேற்பு ஆகும். மேலும் சமூகத்தில் ஒருவர்மீது நம்பகத்தன்மை எந்த அளவு இருக்கிறது என்பதை அளந்து அறிவதும் கடினமானது. மேலும் அது அவ்வப்போது மாறக்கூடிய தன்மையும் படைத்தது. ஏதேனும் ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில், தாம் நம்பும் ஒரு ஆசிரியர் தவறான கருத்துகளை முன் வைப்பதாக ஒரு வாசகர் உணர நேர்ந்தால், பின்னர் அவர் சொல்லும் எந்தக் கருத்தையும் (அது சரியானாலும்) வாசகர் நம்பமாட்டார்.

## கவரும் தன்மையும் நம்பகத் தன்மையும்

## (attractiveness and credibility)

நம்பகத் தன்மையோடு சம்பந்தப்பட்ட இன்னொரு விஷயம் கவரும் தன்மை. கவரும் தன்மை என்பது பிறர் தன்னை விரும்பும் தன்மை (Likeability), பிறருடன் தான் ஒத்த தன்மை (Similarity) இரண்டும் சேர்ந்தது எனக் கருதலாம். நமது நாட்டில் பெரும் தலைவர்கள் - மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு, இந்திராகாந்தி போன்றோர் கவரும் தன்மை கொண்டவர்களாக இருந்துள்ளனர். அண்மையில் மறைந்த இளவரசி டயானாவும், அன்னை தெரசா அவர்களும் பெருமளவு (வெவ்வேறு துறைகளில் என்றாலும்) கவரும் தன்மை பெற்றவர்கள். தமிழ்நாட்டிலும் எம்.ஜி.ஆர்., கலைஞர் கருணாநிதி போன்றோர் கவர்ச்சி மிக்க (Charismatic) தலைவர்கள் இவர்களது செய்திகளைக் கேட்பவர்கள், ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மையை தங்களுள் உருவாக்கிக் கொண்டே கேட்கிறார்கள். இவர்களைப் போன்றோர் முன் வைக்கும் எந்தச் சிந்தனையையும், எந்த நிலைப்பாட்டையும் பெருமளவு வாசகர்கள் ஏற்றுக்கொள்ளவும், அவர்களோடு தங்களையும் ஐக்கியப்படுத்திக் கொள்ளவும் தயாராக இருக்கிறார்கள்.

இதே போல, ஒரு ‘கவர்ச்சிமிக்க’ தலையங்க எழுத்தாளர் என்பவர், தமது வாசகர்களால் மிகவும் விரும்பிப் படிக்கப்படுபவர் என்று சொல்லலாம். இப்படிப்பட்ட ‘கவர்ச்சிமிக்க’ ஆசிரியவுரை எழுதும் எழுத்தாளர்கள் முன்பு நிறையவே இருந்திருக்கிறார்கள்: சான்றாக. தேசபக்தன் ஆசிரியர் திரு.வி.க., தமிழ்நாடு ஆசிரியர் வரதராசுலு நாயுடு, தினமணி ஆசிரியர்கள் டி.எஸ். சொக்கலிங்கம், ஏ.என்.சிவராமன் போன்றோர். இவர்கள் அனைவரையும்விட மிகத் திறன் பெற்ற பத்திரிகையாளர்-எழுத்தாளர் மகாகவி சுப்பிரமணிய பாரதியார். இவர்கள் அனைவரும் தாங்கள் எழுதுகின்ற விஷயத்தை மக்கள் எளிதாக ஏற்றுக் கொள்ள வைத்தார்கள்.

ஆனால், மக்கள் ஒரு குறிப்பிட்ட பத்திரிகையாளரை ஏன் விரும்புகிறார்கள் என்பதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. வாசகர்களுடன் ஒத்த நோக்கு உடையவர்களாகக் கருதப்படும் ஆசிரியர்கள், கவர்ச்சி மிகுதியுடையவர்களாகக் கருதப்படும் ஆசிரியர்கள், கவர்ச்சி மிகுதியுடையவர்களாகக் கருதப்படுகிறார்கள்; ஆசிரியர்களது சிந்தனைகள், எண்ணங்கள், வாழ்வு முறை போன்ற எவையும் வாசகர்களின் போக்கினின்றும் வேறுபடுவனவாக இருப்பின், அவர்களை மக்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

இங்குச் சொல்லப்படும் ஒத்த தன்மை என்பது பல காரணிகளால் அமையலாம்.

ஒரே மாதிரி பிறப்பு வளர்ப்பு கொண்டவராக இருத்தல்.

ஒரே வித மனப்பாங்கு கொண்டவராக இருத்தல்.

ஒரே மாதிரி சிந்தனை கொண்டவராக இருத்தல்.

ஒரே மாதிரி அனுபவம் கொண்டவராக இருத்தல்.

போன்றவை இவற்றுள் முக்கியமானவை.

கருத்தேற்பு பற்றிய அண்மைக்கால ஆய்வுகள், ஒரே இனத்தன்மை, ஒரே மாதிரி சமூக நடத்தை ஆகியவற்றைக் கொண்ட நண்பர்குழாம் ஆகியோர், தங்களை ஒத்தவர்களைச் செல்வாக்கிற்கு உட்படுத்துகிறார்கள் என்று சொல்கின்றன.

## நம்பகத்தன்மையை உருவாக்கும் வழிகள்

நம்பகத்தன்மை, கருத்தேற்கவைப்பதில் மிகப் பெரும்பங்கு வகிப்பது உண்மை; அவ்வாறாயின் வெகுஜனச்சாதனங்களும் அவை சார்ந்த ஆசிரியர்களும் தங்கள் மீது வாசகர் வைத்திருக்கும் நம்பகத்தன்மையை எவ்விதம் அதிகரித்துக் கொள்வது?

சில ஆலோசனைகளை இங்கே முன் வைக்கலாம்:

### 1.எழுத்து சார்ந்த அனுபவத்தை வளர்த்துக்கொள்வது மிக அவசியம்

இங்கே அனுபவம் என்று குறிப்பிடுவது பொதுவான வாழ்க்கை அனுபவங்கள் மட்டுமல்ல, கருத்தெழுதும் கட்டுரையாளர்களோடு கலந்துரையாடல், பத்திரிகையாளர்கள் பங்கேற்கும் பட்டறைகள், கருத்தரங்குகள் போன்றவற்றில் கலந்துகொள்ளுதல் ஆகியவை நல்ல அனுபவப் பகிர்வுகளே. கூடியவரை வாசகர்களையும் செய்தியிதழ்கள் நடத்தும் கருத்தரங்குகளில் கலந்துகொள்ளவைத்து, ஆசிரியவுரை எழுதும் ஆசிரியர்களின் சிறந்த தயாரிப்பு, அவர்களது

பரந்த கல்வியறிவு ஆகியவை பற்றி வாசகர் அறிந்துகொள்ளுமாறு செய்வது நல்லது.

## 2.நானாவிதத்தன்மை மிகவும் அவசியம்

ஆசிரியவுரை எழுதுவதற்கெனப் பல்வேறு ஆசிரியர்களைப் பணிக்கு அமர்த்திக்கொள்ள முடியுமானால் நானாவிதத்தன்மை (Diversity) தானாகவே அமையும். அவ்வாறன்றி, ஒரே ஒரு ஆசிரியவுரை மட்டுமே பணிக்கெனக் கொள்ள இயலுமானால், (எழுத்தாளர் குழுக்களாகச் சேர்ந்து எழுதும்) 'சின்டிகேடட்' பத்திகள், பிற கட்டுரைகள், கருத்துக் கட்டுரைகள் ஆகியவற்றை எழுதப் பல்வேறு நோக்குகளுள்ள எழுத்தாளர்களைப் பயன்படுத்திக் கொள்வது மிக அவசியம், மேலும் தலையங்கம் எழுதும் அந்த ஆசிரியரும், தமது தலையங்கத்திற்குத் தினசரி வெவ்வேறான விஷயங்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

## 3.சுயேச்சைத்தன்மை மிகவும் அவசியம்

அதாவது தலையங்கம் எழுதும் எழுத்தாளர்கள் மீது, அரசியல் சார்ந்த, வணிகம் சார்ந்த அழுத்தங்கள் எவையும் ஏற்படாமல் பார்த்துக்கொள்வது அவசியம்.

## 4.கூடியவரை பொதுநோக்குடன் எழுதுவது அவசியம்

கருத்தேற்கச் செய்கின்ற நோக்குடைய ஒரு தலையங்க எழுத்தாளர் தமது மெய்ம்மைகளையும் தரவுகளையும் நேர்மையாகவும், முழுமையாகவும் வாசகர்முன் வைக்கப்படவேண்டும். அறிந்தே வாசகர்களைத் தவறான திசைக்கு இட்டுச் செல்வதும், ஒரு சூழலைத் தவறாகப் புரிந்துகொள்ளவைப்பதும், தவறானவாறு ஒரு மனிதரைச் சித்தரிப்பதும் கூடாது.

## 5.முரணின்றி எழுதுவது அவசியம்

ஒரு ஆசிரியர், ஒரு குறித்த கருத்துருவ நிலைப்பாட்டைக் கொண்டவராக இருப்பின், அதே அளவுகோலை அரசாங்கத்தின் எல்லா நிலைகளிலும் எழும் பிரச்சினைகளுக்குப் பயன்படுத்தவேண்டும். தேசிய பிரச்சினைகளுக்குப்

பயன்படுத்தவேண்டும். தேசிய விஷயமாயினும், மாநில அரசியலாயினும், உள்ளூர் அரசியலாயினும் ஒரேவித நோக்கு வேண்டும். இல்லாவிட்டால் வாசகர்கள் ஆசிரியர்களை நம்புவதற்கு உரியவர்களாகக் கொள்ளமாட்டார்கள்.

**6.நியாயத்தன்மை மிகவும் அவசியம்**

இதற்கு அர்த்தம், ஒரு பிரச்சினையின் இரு பக்கங்களும் மதிப்பளித்து, உடன்பாட்டு-எதிர்மறை அணுகு முறையைப் பயன்படுத்தி மதிப்பிடுவது என்பதாகும். அல்லது, பிரச்சினை மிகச் சிக்கலானதாயின், அதன் பல்வேறு அம்சங்களையும் விட்டுவிடாமல் கவனித்து ஆராய்வதும், எளிமைப்படுத்திவிடாமையும் தேவை. மேலும் எந்த ஒரு பிரச்சினைக்கும் வாசகர்கள் பதிலளிக்க, தங்கள் கருத்துகளைச் சொல்ல, வாய்ப்பளிப்பதும் நியாயத்தன்மையாகும்.

**7.நேர்மை மிகவும் அவசியம்**

எந்த ஒரு குழுவும், எந்தக் கருத்தின் சார்பாளர்களும் உங்கள் பணியில் குறுக்கிடாத தன்மைதான் இது. யாரோ சிலரின் கருத்துகளை அப்படியே ‘வாங்கிச் சொல்லும்’ பழக்கம் கூடாது; அவ்வாறு செய்வது, காலப்போக்கில் செய்தியிதழின் நம்பகத்தன்மையைக் குலைத்துவிடும். பொதுமக்களின் நலன் மீது அமைவதே பத்திரிகைச் சுதந்திரம்: சிறுசிறு சார்புக் குழுக்களின் / ஆதாயவிரும்பிகளின் நலன்மீது கட்டப்படுவதல்ல அது.

**8.மனிதநேயம் மிகவும் அவசியம்**

வாசகர்கள் அல்லது இல்லத்தரசிகளின் ஆசைகள், அபிலாஷைகள், விருப்பங்கள், சிந்தனைகள், பயங்கள், பிரச்சினைகள், தளர்ச்சிகள் யாவற்றையும் கணக்கில்கொண்டு, அவர்களுள் ஒருவராகச் சிந்தனை செய்து, எழுத வேண்டும். உங்கள் தலையங்கத்தில். அவர்களுக்குத் தேவையானது இருக்கிறது என்று காட்டுங்கள்-உங்கள் மீதான நம்பகத்தன்மை மிகவும் பெருகும்.

**9.ஏற்புடைமை மிகவும் அவசியம்**

உள்ளூர்ப் பிரச்சினைகளில் தக்க நிலைப்பாடு எடுத்து விவாதிப்பது, விவாதத்துக்குள்ளான பிரச்சினைகளின் பல்வேறு கோணங்களையும் அலசி ஆராய்தல் போன்றவை இதற்குத் தேவை. மக்களுக்கு அன்றைக்கு எது மிகவும் தேவையோ அந்தப் பிரச்சினையை எடுத்து ஆராயவேண்டும். மேலும் சில சமயங்களில் இதன் தொடர்ச்சியாக நிகழவேண்டிய செயல்கள் என்ன என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டும்.

## 10.கருத்துப்பணியை மேலும் மேலும் வெளிப்படையாக்குவது மிக அவசியம்

அரசாங்கங்களே, மக்களிடம், திட்டங்களை வெளிப்படையாக விவாதித்து, ஏற்கச் செய்கின்ற காலம் இது. ஆகவே ஆசிரியவுரைப் பகுதியை ஒரு திறந்தவெளி அரங்கமாக மாற்றவும். வாசகர்கள் கருத்துகளை மதித்து, அதிகமாக வரவேற்று, வெளியிட வேண்டும். வாசகர்கள் அதிகம் பங்கேற்கக்கூடிய வாய்ப்பு நம்பகத்தன்மையை மிகுதிப்படுத்துகிறது.

## 11.தன்னை வெளிப்படுத்திக்கொள்வதும் அவசியம்

கருத்தேற்புப் பகுதியான தலையங்கத்தை எழுதும் ஆசிரியர் தம் பெயரை வரையக்கூடாது. (தலையங்கத்திற்குப் பெயர்வரிகூடாது) என்ற காலங்காலமான மரபு கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஆனால் மறைந்துறையும் தன்மை, நம்பகத்தன்மைக்கு எதிரானது. வானொலியில் கருத்துரை வழங்குபவர்களைப்போல, பத்திரிகைகளில் தலையங்கம் எழுதும் ஆசிரியர்களும் ஏன் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளக்கூடாது?

## 12.தொழிலியல் தன்மையை வளர்த்துக் கொள்வது மிக அவசியம்

வேறுபட்ட திசைகளில் தம்மை ஈர்க்கும் ஆர்வங்கள், தொழிலியல் தன்மையை (Professionalism)க் குறைக்கும் ஈடுபாடுகள் முதலியவற்றை விலக்க வேண்டும். தொழில் திறனை வளர்த்துக் கொள்வது அவசியம்.

மேற்கண்ட பண்புகளை வளர்த்துக் கொள்வது நம்பகத்தன்மையை வளர்க்கும்: நம்பகத்தன்மை, கருத்தை ஏற்கும் திறனை வாசகரிடம்

அதிகரிக்கும். இவை தவிர இன்னும் பல்வேறு குணங்களும் தேவை என்று வற்புறுத்துபவர்கள் உண்டு. சிந்தனை முதிர்ச்சி, பாசாங்கின்மை, விமரிசனத்திற்கு தைரியமாகவும் நேர்மையாகவும் ஈடு கொடுக்கும் தன்மை, கண்ணியம், தன்னம்பிக்கை, சிறுமையின்மை, தவறுகளை ஒப்புக் கொள்ளும் மனப்பான்மை மதிப்பளித்தல், பிறர் வேண்டுமென்றே தூண்டினாலும் கோபப்படாதிருத்தல், வெளிப்படைத் தன்மை, ஆடம்பரமற்ற மேன்மை, துடிதுடிப்பு, உற்சாகம், நகைச்சுவை மனப்பான்மை போன்ற எத்தனையோ குணங்கள் சேர்ந்துதான் நம்பகத்தன்மையை உருவமைக்கின்றன என்போர் உண்டு.

## ஒரு தரப்பு / இரு தரப்பு கருத்தீர்ப்பு வாதங்கள்

## (One sided Vs. Two sided Appeals)

ஒரு பொதுப் பிரச்சினையை ஆராய முனையும் தலையங்க எழுத்தாளர், அதன் ஒரு தரப்பினை மட்டும் மக்களுக்கு எடுத்துச் சொல்லலாமா? அதாவது, தாம் எந்தப் பக்கத்தை ஆதரிக்கின்றாரோ, அந்தத் தரப்பின் வாதங்களை மட்டும் மனத்தில் பதியுமாறு மக்களுக்கு எடுத்துச் சொல்லலாமா? அன்றி, இரு தரப்பு வாதங்களையும், எதிர்த்தரப்பின் முக்கியக் கருத்துகளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமா? எந்தக் கருத்துரையாளனும், ஒரு பிரச்சினையின் இரு தரப்புகளையும் வாசகர் முன் வைக்க வேண்டும் என்றே இதுபற்றிச் செய்யப்பட்டு வரும் ஆய்வுகள் சொல்கின்றன. பிரச்சினையில் தாம் ஒரு சார்பாக இருக்க வேண்டி வரலாம்தான்; ஆனால் எதிர்த்தரப்புக்கு ஆதரவான கருத்துகளை எடுத்துரைத்துப் பிறகு அவற்றை மறுப்பதே சிறந்தது; எதிர்க்கருத்துக்களைப் புறக்கணிப்பது நல்லதன்று என்ற கருத்து நிலவுகிறது. மேலும் இக்கால வாசகர்கள் நல்ல விழிப்புணர்வு பெற்றவர்களாக உள்ளனர்: ஆகவே ஓர் ஆசிரியர் வேண்டுமென்ற ஒரு தரப்பினைப் புறக்கணிக்கிறார் என்ற எண்ணம் வாசகர்களுக்கு வரலாகாது. வாசகர்கள் நன்கு படித்தறிந்தவர்கள், விழிப்புணர்வு மிக்கவர்கள் என்றாலோ, தலையங்க ஆசிரியர் முன் வைக்கப்போகும் கருத்துகளுக்கு எதிர்மறையாகச் சிந்திக்கக் கூடியவர்கள் என்றாலோ, எச்சரிக்கை தேவை. பொதுவாக இருதரப்பு வாதங்களையும் முன்

வைத்து, அதில் தாம் ஏற்கும் தரப்புக் கருத்துகளை முன்மொழிந்து எதிர்த்தரப்பு வாதங்களை மறுக்கக் கூடிய கருத்துகளையும் முன் வைப்பதுதான் நல்லது.

ஒரு சார்பான வாதத்தைவிட, முன் இருதரப்புவாதங்களையும் முன் வைக்கும் 'இருதரப்பு முன்மொழிவு' தான் நம்பகத்தன்மையை வாசகர்களுக்கு ஏற்படுத்தும். இன்னும் தமது வாதங்களுக்கான சான்றாதாரங்களை நன்கு மேலதிகமாகத் தொகுப்பதற்கும் இருதரப்பு மொழிவு வசதி செய்கிறது. இரு தரப்பு வாதங்களையும் ஆராய்ந்து கொண்டிருக்கும் வாசகருக்கு, எந்தச் சார்பாக தலையங்க ஆசிரியர் விவாதிக்கிறாரோ அதை நன்கு ஏற்றுக்கொள்ளும் மனநிலையையும் இந்தச் செய்கை உண்டாக்குகிறது. மேலும், நிலையான மன மாற்றத்தினை வாசகரிடம் உருவாக்குவதற்கும் இதுவே சிறப்பான முறை.

ஒருதரப்பு வாதங்களை மட்டுமே கேட்டு, தங்கள் கருத்தை உருவாக்கிக் கொண்டே வாசகர்கள், தங்களுக்கு ஏற்புடைய சிறு குழுக்களிலிருந்தும் அவற்றிற்கு எதிரான வாதங்கள் வரும்போது, எதிர் நிலைக்கு எளிதில் மாறிவிடுவார்கள்.

ஆயினும், பிரச்சினைகளைப் பற்றி நன்கு ஆழமாக அறியாத வாசகர்களுக்கு, ஒருதரப்பு முன்மொழிவே ஏற்றது என்பது உளவியலாளர் கொள்கை. ஒரு குறிப்பிட்ட பிரச்சினை பற்றி வாசகர்கள் அதிகம் அறியாதவர்களாயின், அவர்களுக்கு அதை விளக்கிச்சொல்லி, அவர்கள் ஏற்கவேண்டிய கருத்துகளை மட்டுமே வலியுறுத்துவது நல்லது.

இரண்டு தரப்புகளில் எது சரியானது என்பதே கருத்தேற்கவைப்பதில் மிக முக்கியமான அம்சம் அல்ல. எந்தத் தரப்பை ஆசிரியர் ஆதரித்தாலும் அல்லது எதிர்த்தாலும், அதற்காக என்ன காரணங்களை முன் வைக்கிறார் என்பதே ஒரு குறிப்பிட்ட நேரத்தில் முக்கியமானது. ஆகவே, பொதுவாக, இருதரப்பு வாதமே ஏற்கத்தக்க ஒன்றாக விளங்குகிறது.

## பயமுறுத்தும் கருத்தீர்ப்பு மொழிவுகள்

## (Fear Arousing Appeals)

பயமுறுத்துகின்ற வாதங்களினால் வாசகர் மனப்பான்மையில் என்ன மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை மட்டுமே நீண்டகாலம் ஆராய்ந்துள்ளனர். பல்சுத்தம், சிகரெட் பிடித்தல், டெடனஸ் தடுப்பு ஊசி மருந்துகள், பாதுகாப்பாக வாகனம் ஓட்டும் முறைகள், அணுப்போர், மக்கள் தொகைப் பெருக்கம், தொழு நோய், புற்றுநோய், குடற்புழுக்கள், க்ஷயரோகம், கிரகணத்தின்போது சூரியனைக் கருப்புக் கண்ணாடி மூலம் பார்த்தல், எய்ட்ஸ் போன்ற பல விஷயங்களில் பயமுறுத்தும் வேண்டுகோள்கள் அல்லது விளம்பரங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இம்மாதிரிப் பலவற்றை ஆராய்ந்ததிலிருந்து பொதுவாகப் பெறப்பட்ட முடிவுகள் பின்வருமாறு:

1. முன்பெல்லாம், மிகவும் அதிகமாக பயமுறுத்துவது, அதற்கு எதிரான தன்மையை மனத்தில் தூண்டி, பயத்தைக் குறைத்து, விரும்பும் விளைவை ஏற்படுத்துவதில்லை என்று கருதப்பட்டது. இப்போது இந்த முடிவு தவறு என்று சொல்கின்றனர். அதாவது, மிகுதியாக பயமுறுத்தும் விளம்பரங்களையும் கையாளலாம் என்பது அர்த்தம்.

2. அதிகமான அளவு பயமுறுத்தினாலும், குறைந்த அளவே பயமுறுத்தல் இருந்தாலும், அந்த பயத்தை எதிர்கொள்வதற்கான ஆலோசனைகள் தரப்படுமாயின் அவை பயமுறுத்தும் மொழிவுகளின் ஆற்றலைப் பெருக்குகின்றன என்று கண்டறியப்பட்டுள்ளது.

3. வாசகர்கள் அல்லது இரசிகர்களின் தன்மதிப்பு, பயத்துக்குத் தாம் ஆட்படக்கூடிய தன்மை போன்ற பல காரணிகளால் பயமுறுத்தும் முன்வைப்புகளுக்கு அவர்கள் தரும் எதிர் வினைகள் பெருமளவு வேறுபடுகின்றன என்றும் ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர்.

4. செய்திதருவோர் நம்பிக்கைக்குரியவர்களாக வாசகர்களால் கருதப்படும்போது, அதிக அளவு பயமுறுத்தும் மொழிவுகள், மிகவும் விளைவேற்படுத்துவனவாகக் கருதப்படுகின்றன.

பயமுறுத்தும் மொழிவுகள் நல்ல விளைவைத் தருகின்றன என்பதில் சந்தேகம் எதுவுமில்லை. குறிப்பாக உடல் சம்பந்தப்பட்ட பாதிப்புகளைப் பற்றியனவாக இருக்கும்போது, அவற்றின் விளைவு அதிகம். ஆனால் பயமுறுத்தும் மொழிவுகள் எப்போதும் அந்த பயத்தைத் துடைக்கும் அல்லது குறைக்கும் வழிமுறைகளையும் கூடவே முன்வைக்க வேண்டும். அவ்வாறு பயத்தைப் போக்குகின்ற அல்லது குறைக்கின்ற வழிமுறைகளைச் சொல்லாத பயமுறுத்தும் வேண்டுகோள்களை வாசகர்கள் புறக்கணிக்கக்கூடும்; அவை பொய் சொல்கின்றன என்றோர் முக்கியத்துவமற்றவை என்றோ கருதக்கூடும். உயர் அளவு பயமுறுத்தும் முன்வைப்புகள் மிக விளைவுள்ளவையாக இருக்கவேண்டுமாயின், குறிப்பான பரிந்துரைகள்-எந்த எந்தச் சமயங்களில் வாசகர்கள் எவ்விதம் செயல்படவேண்டும்-எப்படிச் செயல்பட்டால் அந்தக் குறிப்பிட்ட ஆபத்துகளிலிருந்து தப்பிக்க முடியும் என்பனவற்றைச் சொல்ல வேண்டும், ஆயினும் இன்னொரு ஆய்வு, அதிக அளவு பயமுறுத்துதல் ஒன்றே, அது அந்தப் பயத்திலிருந்து மீள்வதற்கான வழிமுறைகளைச் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் தேவையான விளைவைப் பலசமயங்களில் ஏற்படுத்துகிறது-என்று கருத்துரைக்கிறது.

ஆயினும் பயமுறுத்தல்களை அடிப்படையாகக் கொண்டு ஒரு விளைவை உருவாக்க விரும்பும் தலையங்க எழுத்தாளர்கள் மிகவும் எச்சரிக்கையாகவே இருக்க வேண்டும்-காரணம், பயத்துக்கு ஆட்படுதல், தேவையான விளைவை ஏற்படுத்துதல் இவற்றுக்கிடையிலான தொடர்பு மிகவும் சிக்கலானது என்கின்றனர் உளவியலாளர்கள். மேலும், பல சமயங்களில் புகைபிடித்தல் போன்ற விஷயங்களில், பயமுறுத்தலுக்குப் பொருந்தும் அளவு ‘கெடுதி விளைவிக்கும் தன்மை’ உள்ளதா என்பதும் வாசகருக்குப் புலப்படுவதில்லை.

## நகைச்சுவையின் விளைவு

பேச்சுக்கலையைப் பயிலுவதன் ஓர் அம்சமாக நகைச்சுவை கருதப்படுகிறது. அரசியல்வாதிகளும் மேடைப் பேச்சாளர்களும், பட்டிமன்றவாதிகளும் நகைச்சுவையாகப் பேசுதல் அவர்களது ஆற்றலின் ஓர் அம்சமாகக் கருதப்படுகிறது. விளம்பரங்கள் கூட

அவ்வப்போது நகைச்சுவையுணர்வுள்ள சம்பவங்களைக் கையாளுகின்றன. ஆனால், நல்ல விளைவு ஏற்படுத்தும் தலையங்கங்கள் எழுதுவதில் நகைச்சுவையுணர்வுக்கு இடமில்லை என்றே தோன்றுகிறது. இது பற்றி ஆராய்ந்த ஈ.பி. ஒயிட் என்பார் சொல்கிறார். “தலையங்க எழுத்தில் நகைச்சுவைக்கு ஆழ்ந்த விளைவு உண்டாக்கும் திறன் இல்லை.”

அங்கதமாக எழுதுவது (Satire) பற்றியும் ஆராயப்பட்டிருக்கிறது. அங்கதச் சுவையோடு எழுதுவதன் ஒரு முக்கிய விளைவு நகைச்சுவை என்பதில் ஐயமில்லை; அதனால் சொல்லும் செய்தியில் வாசகர்க்கு ஆர்வம் உண்டாகிறது என்பதிலும் ஐயமில்லை. ஆனால் அதன் துணை விளைவுதான் சரிவருவதில்லை. காரணம், அங்கதம். அதன் முரண்தன்மை காரணமாக, மறைமுகமாகச் செய்தி சொல்லும் தன்மையது. இவ்வாறு மறைமுகமாகச் செய்தியுணர்த்தும் தன்மை, பல சமயங்களில் செய்திகள் தவறாகப் புரிந்து கொள்ளப்படக் காரணமாகிவிடுகிறது. ஆகவே வாசகத் தன்மையில் ஏற்படும் இலாபம், செய்தி தவறாகப் புரிந்து கொள்ளப்படுவதில் ஏற்படும் இழப்பில் அடிப்பட்டுப் போய்விடுகிறது.

மேலும் நகைச்சுவையோடு செய்திகளைச் சொல்லுதல் என்பது சில சமயங்களில் சொல்பவருடைய ஒழுக்க அடிப்படையை உயர்த்திக் காட்டுகிறது; சில சமயங்களில் தாழ்த்தியும் விடுகிறது. எந்தச் சமயங்களில் எவ்வாறு நிகழும் என்பது எளிதில் உணர்ந்து அறியக்கூடியதல்ல. மேலும் தீவிரமான (Serious) பிரச்சினைகளைப் பற்றி ஆராயும்போது நகைச்சுவையைப் பயன்படுத்துவது கீழ்த்தரமான இரசனைக் குரியதாகவும், சொல்வோனது ஆழமற்ற தன்மையைக் குறிப்பதாகவும் அமைகிறது. தலையங்க எழுத்தாளனது நம்பகத்தன்மையைக் குறைக்கிறது.

எனினும் குறைந்த அளவில் அங்கதத்தன்மையைப் பயன்படுத்துவது, வாசகர்களுக்கு எதிர்க்கருத்தேற்றம் ஏற்படாமல் செய்யும் ஆற்றல்மிக்க கருவியாக அமைகிறது என்று சொல்கின்றனர். ஒரு பத்தி எழுத்தாளர் பயன்படுத்தும் அளவு, தலையங்க எழுத்தாளர் ஒரு போதும் நகைச்சுவையினைக் கையாள முடியாது – கையாள முயலவும் கூடாது. ஆயினும் எச்சரிக்கையோடு, சந்தர்ப்பத்தைப் பொறுத்து, அளவோடு நகைச்சுவையைக் கையாளலாம்.

## தெளிவாக முடிவுரைத்தல்

நல்ல கருத்தேற்பினை ஒரு தலையங்க எழுத்தாளர் உருவாக்க வேண்டுமாயின் அவர் தாமே தொகுத்துத் தெளிவான முடிவுரைக்க வேண்டும் என்று ஆய்வுகள் சொல்லுகின்றன. வாசகர்கள் தாமே முடிவுக்கு வருமாறு அமையும் 'திறந்த முடிவுள்ள' ஆசிரியவுரைகள் எழுதப்பட்டால், அவற்றின் விளைவு போதிய அளவு இருப்பதில்லை. ஒரு பிரச்சினையை ஆராயத் தொடங்கும் போது திறந்த மனத்தோடு ஆராய்வது வரவேற்புக்குரியது. ஆனால் முடிவுரைக்கும்போது 'இதுதான் சரியான முடிவு' என வாசகர் நன்கு உணரும் வண்ணம் சொல்லவேண்டும்.

முடிவெடுக்கும் செயல்முறையில் வாசகர்களுக்கும் இடமளிப்பது குறித்துச் சர்ச்சைகள் நிகழ்ந்திருக்கின்றன. விவாதத்தை வளர்த்துச் செல்லும்போதே, வாசகர்கள் குறித்த ஒரு முடிவுக்கு வருமாறு அவர்களைத் தூண்டுவது மிகவும் பயனுள்ளது என்று படுகிறது. ஆனால் முடிவு எவ்விதத் தன்மை வாய்ந்தது என்பதைப் பொறுத்தே இவை அமையும். வெளிப்படையாக நன்கு தெரியவரும் ஒரு முடிவினைச் சொல்லாமலே விடுவது உத்தமமானது. ஆயினும் எல்லாத் தலையங்கங்களுக்குமே வெளிப்படையான முடிவளிப்பது சாத்தியமாகாது. அது தேவையுமில்லை. மேலும், தமது வாதங்களின் நியாயத்தன்மையில் நம்பிக்கையுள்ள, ஒரு குறித்த செயல்விளைவை வாசகர்களோ அல்லது பிறரோ ஏற்கத்தூண்டுவதில் நம்பிக்கையுள்ள, அதற்காக விளைவுகளைச் சந்திக்கத் தயாராக இருக்கின்ற ஓர் ஆசிரியர், வெளிப்படையாகவே தமது முடிவுகளை வரையறுத்துச் சொல்வது நல்லது.

இவ்வாறு வெளிப்படையாக முடிவுரைத்தல் மட்டும் போதாது; முடிவுரைக்கும் போது அளவுக்கு அதிகமான அடைமொழிகளை, நிபந்தனைச் சொற்களைப் பயன்படுத்துவதும் கூடாது. அவ்வாறு பயன்படுத்தும் போது வாசகரின் குழப்பம் மிகுதியாகிறது. ஆகவே கூடியவரை, அடைமொழிகளின்றி வெளிப்படையாக வலியுறுத்துவது என்பதே நல்ல முடிவுரைத்தலின் தன்மையாகும்.

# இயல் நான்கு

## கட்டுரைகள், பத்திகள், ஆசிரியருக்குக் கடிதங்கள் (Articles, Columns & Letters to The Editor)

தலையங்கம் எழுதுதல், மதிப்புரைகள் வரைதல் ஆசிரியருக்குக் கடிதங்கள் வரைதல், சிறப்புக் கட்டுரைகள் வரைதல் போன்றவற்றிற்குள் ஏராளமான வேறுபாடுகள் உண்டு. இவை வெவ்வேறு தரங்களில் உள்ள வெவ்வேறு அறிவாற்றல் - படைப்பாற்றல்கள் கொண்ட நபர்களால் எழுதப்படுபவை. என்றாலும், இவையனைத்தும் கருத்துரைப்பவை என்ற பொதுத்தன்மையும் உண்டு. ஒரு காலத்தில், கருத்துரைத்தல் என்பதே பத்திரிகையில் கூடாது; மிகப் பொதுமையும் சார்பின்மையும் கொண்ட எழுத்து மட்டுமே வேண்டும் என்று நினைத்த இதழாளர்கள் உண்டு. உதாரணமாக, அச்சுச் சாதனத்தின் பொறுப்புகள் பற்றிப் பேசும் போது சார்லஸ் ஆரண்டேல் என்ற இதழாளர் சொன்னார்: ‘செய்திகளை விளக்குதலும் அறிவித்தலும்’ ஆகிய இவற்றின் பகுதியாகவே கருத்துரைத்தலும் நிகழ்கிறது என்பதையும், சமூகப் பொறுப்புணர்ச்சி இதழ்களுக்கு வேண்டும் என்தையும் அறியாத அந்தக் காலத்தில், செய்தித்தாள்கள் மிக நன்றாக இருந்தன.

இப்போது நிலைமை மாறிவிட்டது. வாசகர்கள் பங்கேற்பு வேண்டும் என்பதற்காகவே, இப்போதெல்லாம் இதழாளர்கள், தனித்த கருத்துணர்த்தும் தன்மை வாய்ந்த நடை, ஆர்வமூட்டும் உரையாடல், பின்னணிகளை வகுத்துக்காட்டுதல் போன்றவற்றைக் கையாளுகின்றனர். கட்டுரைகளில் கருத்துரைத்தல் நடைமுறைக்கு வந்திருக்கிறது: ஆனால் அதே சமயம், அதிகக் கருத்து மாறுபாடுகளும், அதிக விமரிசனங்களும் இவை குறித்து எழுந்தும் உள்ளன.

கருத்துகளைத் தெரிவிக்கும் சிறப்புக்கட்டுரை எழுதுதல் (Article Writing) இப்போது பல நிரூபர்களைக் கவர்ந்து இழுக்கிறது. வெறும் செய்திக் கட்டுரைகள் மதிப்பிழந்து போய்விட்டன.

## கருத்துரை (Opinion) எழுதுதலின் அடிப்படைகள்

எவ்விதக் கருத்துரைப் பகுதியானாலும் சரி, அவற்றுக்குள் சில ஒற்றுமைகள் உண்டு.

**1. ஒரு கருத்துரைப் பகுதிக்கெனத் தனி ஃபார்முலா (வரையறுத்த வடிவம், உத்திகள் முதலியன) எதுவும் கிடையாது.**

தலையங்கம் எழுதுவதற்கோ, சிறப்புக் கட்டுரை எழுதுவதற்கோ, விமரிசன மதிப்புரை எழுதுவதற்கோ இளம் எழுத்தாளர்கள் ஃபார்முலாக்களைத் தேடி அலையவேண்டாம்.

**2. எவ்வித விமரிசனக் கருத்தாயினும் அதற்கு ஆதாரங்கள் வேண்டும்.**

எந்த ஒரு விவாதத்திலும், தமது கூற்றை ஒருவர் நிரூபிக்க, தக்க சான்றுகளைத் தரவேண்டும் என்பதை யாவரும் அறிவர். வெறும் அபிப்பிராயம் மட்டும் போதாது-அதுவே கருத்துரையாகாது. ‘ஏன் அந்த அபிப்பிராயம் தேவை’ என்பதற்கான காரணங்களைத் தந்து விளக்கவேண்டும். தக்க உதாரணங்களையும் தரவேண்டும்.

**3. கருத்துக் கட்டுரைகள் படிக்க நல்லதொரு அனுபவமாக அமைய வேண்டும்.**

இளம் எழுத்தாளர்கள், சாதாரணமாக, ஓர் அறிக்கை வடிவத்தில் தாங்கள் திரட்டிய மெய்ம்மைகளைத் தொகுத்துத் தந்துவிடுவார்கள். படிக்க, அவற்றை நல்ல அனுபவமாக்குவதில் அவர்கள் வெற்றி பெறுவதில்லை. மேலும் அவர்கள் செய்யக்கூடிய ஒரு சாதாரணத் தவறு என்னவென்றால், ஒரு கருத்துரையில் தாங்கள் ஆதரிக்கும் விஷயத்திற்குக் காரணமானவர்களைப் பொன்னானவர்கள் என்று ஆதரித்தும், தாங்கள் எதிர்க்கும் விஷயத்திற்குக் காரணமானவர்களை முழுக் கொடியவர்கள் என்று வருணித்தும், தீவிர எல்லைகளில் சென்று எழுதுவார்கள்.

விமரிசனம், கருத்துரைத்தலின் இறுதிவரிகளில் மட்டுமே வரலாகாது. எங்கே கட்டுரை தொடங்குகிறதோ, அங்கேயே விமரிசனமும்

தொடங்கிவிட வேண்டும். அந்தக் கட்டுரை முழுவதுமே அது ஊடுருவியிருக்க வேண்டும்.

### 4. விமரிசனம் என்பது வெறும் குறைகாணல் அல்ல

ஒருவரைப் பாராட்டிக்கொண்டே அவரது குறைகளையும் சுட்டிக்காட்ட இயலும். ஒரே கட்டுரைப் பகுதிக்குள் நிறைகாணல் (பாராட்டு), குறைகாணல் ஆகிய இரண்டுமே அடங்கியிருக்கலாம். மனிதர்கள் யாவரும் நிறைகள், குறைகள் ஆகிய இரண்டுமே கொண்டவர்களாக இருப்பதுபோலவே, அவர்களது படைப்பிலும் நிறைகள் குறைகள் இரண்டுமே கலந்துதான் காணப்படுகின்றன. வெறும் குப்பைகள் என்றோ, கோபுரங்கள் என்றோ முடிவுக்கு வருவது உண்மைக்குப் புறம்பானது.

### 5. கருத்துரைப்பு என்பது, ஒரு முழுக்கட்டுரையின் தன்மைகளைக் கொண்டு அமைய வேண்டும்

முதல் வாக்கியம் தொடங்கி, இறுதி வாக்கியம் வரை ஓர் ஒருமைப்பாடு இருப்பதனை வாசகர்கள் உணர முடியவேண்டும். கட்டுரையினைச் சரிவர அமைப்பதன் வாயிலாகவே இந்த விளைவை உருவாக்க முடியும். “எதனை வேண்டுமானாலும் சொல்; ஆனால் அதனைத் திருத்தமாகச் சொல்” என்பதுதான் கருத்துரையாளர்களின் ஆப்தவாக்கியம். திரும்பத் திரும்ப எழுதுவது, எழுதியதை மீண்டும் திருப்பிப் பார்ப்பது, திருத்திச் சரிபார்ப்பது, மீண்டும் திருத்துவது என்ற தொடர்செயல்கள் விளைவாகவே நல்ல ஒருமைப்பாடு என்பது கட்டுரையில் அமைய இயலும்.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

சில சமயங்களில், சிறப்புக் கட்டுரையாளர்கள் எழுதும் கருத்துரைப் பகுதிகள் அல்லது கட்டுரைகளில் வரும் கருத்துகள், வாசகர்கள் பங்கேற்கும் விவாத மேடைகள் ஆகிவிடுகின்றன. ஆசிரியருக்குக் கடிதம் என்பது ஒரு விவாத மேடையே. செய்தித்தாள்களில் மிக அதிகமாக விரும்பிப் படிக்கப்படும் பகுதிகளில் ‘ஆசிரியருக்குக் கடிதங்கள்’ பகுதியும் ஒன்று.

பல எழுத்தாளர்கள், தங்கள் எழுத்துலக வாழ்க்கையை ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் எழுதுவதன் வாயிலாகவே தொடங்கியிருக்கிறார்கள். ஆசிரியருக்குக் கடிதம் எழுதும் வாசகர், தொழில் ரீதியான எழுத்தாளர் அல்லர்; அவர் ஒரு வாசகர் மட்டுமே. அதனால் தமது பார்வைகளை மற்ற வாசகர்களுடன் பரிமாறிக் கொள்வதே அவரது நோக்கம். ஆகவே அவரது கடிதம் சரியான வடிவத்திலோ, திட்ட வட்டமாகச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் விதத்திலோ அமைந்திருக்காமல் இருக்கலாம். அவரது கடிதத்தைச் செம்மைப்படுத்த வேண்டியிருக்கலாம்; சுருக்க வேண்டியிருக்கலாம்; அமைப்பை மாற்ற வேண்டியிருக்கலாம். இவற்றையெல்லாம் அந்தச் செய்தித்தாளின் ஆசிரியரோ, அல்லது இந்தப் பகுதியைக் கவனித்துக் கொள்ளும் துணையாசிரியரோ செய்வார்கள்.

ஆசிரியருக்குக் கடிதங்கள் எழுதுபவர் கவனிக்க வேண்டியது, தமது பார்வைகளை, விமரிசனங்களை, அனுபவங்களை, அவர் நேரான-எளிய-ஆற்றொழுக்கான நடையில் சொல்கிறாரா என்பதுதான். தமக்கு அரிய கலையாற்றல்கள், எழுத்தாற்றல்கள் இருப்பதாக அவர் கருதவோ, நிரூபிக்கக் கஷ்டப்படவோ தேவையில்லை.

### மாதிரிக்கு ஒரு கடிதம்

இக்கடிதம், 22-10-1991 தினமணி வாசகர் மன்றத்திலிருந்து எடுக்கப்பட்டது.

## காந்திஜி திரும்பி வந்தால்

பாரதம் அடிமைப் பட்டிருந்தபொழுது மக்களிடம் காணப்பட்ட தேசபக்தியும் சமூக – சகோதரத்துவ உணர்வும், மனிதனை மதிக்கும் மாண்பும் இன்று எங்கே என்று தேட வேண்டிய அவலநில ஏற்பட்டுள்ளது. நாட்டில் ஆட்சியாளர்களால் ஒழுக்கக் கேட்டாலும், சுயநலத்தாலும் அரசு நிர்வாகம் தறிகெட்டு, எல்லாத்துறைகளிலும் கடமையுணர்வு இன்மையும், லஞ்ச லாவண்யமும் மலிந்து விட்டன. நாட்டில் ஏழை மக்களைச் சுரண்டி அரசியல்வாதிகள் கொழுத்து வாழும் போலிசமத்துவ ஜனநாயகமே நடந்து வருகிறது. ஏழை மக்களுக்காகத் திட்டங்கள் தீட்டுவதைவிட அந்தத் திட்டங்களால் தங்களுக்கு எவ்வளவு லாபம் என்று கணக்குப் பார்க்கும் அரசியல்

வியாபாரிகளே இன்று அதிகமாக உள்ளனர். நாட்டின் விடுதலைக்குப் பிறகு, சுயராஜ்ஜியத்தால் ஏழைமக்கள் வாழ்க்கை வளம் பெறுவார்கள், நலமடைவார்கள் என்ற அண்ணலின் ஆசைக்கனவுகளும் விடுதலை வேட்கையின் லட்சிய உணர்வுகளும் சிதறடிக்கப்பட்டுவிட்டன. எங்கு காணிலும் ஊழல், நிர்வாகச் சீர்கேடு, பொருளாதாரச் சீர்குலைவு, சாதிச் சண்டை, பிரிவினைவாதம், ஆள்கடத்தல், கொலை, கொள்ளை போன்ற பிணிகளால் நாடு நலிந்துவிட்டது. கட்டுரையாளர் குறிப்பிட்டுள்ளது போல, மீண்டும் ஒரு முறை சமுதாயப் புரட்சி ஏற்பட்டாலன்றி, அண்ணலின் கனவுகள் நனவாக வாய்ப்பில்லை, பாரதமக்களிடம் தேசபக்தியும், ஒற்றுமை உணர்வும், தன்னலமற்ற சேவை மனப்பான்மையும், ஒழுக்கநெறியும் வளர்க்கப்பட வேண்டுமென்றால், மீண்டும் ஒரு மகாத்மா தோன்ற வேண்டும். அதற்காக நல்லோர்களும், ஏழை பாமர மக்களும் பிரார்த்தனை செய்கிறார்கள்.

**ஜயந்தி விஸ்வநாதன் ,**

**குமாரசுவாமிப்பேட்டை.**

மிகத் தெளிவான எளிய நடையில் இக்கடிதம் எழுதப்பட்டுள்ளது; நிச்சயமாகத் துணையாசிரியர் ஒருவரின் செம்மையாக்கத்திற்கும் இது உட்பட்டிருக்கும். தலைப்பும் அவரே தந்ததாகவும் இருக்கலாம்; அல்லது கடிதம் எழுதும் வாசகி குறிப்பிட்டுள்ள கட்டுரையாளரின் தலைப்பாகவும் இது இருக்கலாம். எனினும் இக்கடிதத்திலுள்ள ஒரு சில குறைகளைச் சுட்டிக்காட்டுவது அவசியம்.

1. 'லஞ்சலாவண்யம்' போன்ற தேய்ந்த தொடர்களும் மரபுச் சொற்களும் இக்கடிதத்தில் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன. குறிப்பாக 'லஞ்சலாவண்யம் போன்ற தொடர்கள், அரசியல்வாதிகளின் மேடைப் பேச்சில் அர்த்தமற்று உருவானவை. 'லாவண்யம்' என்றால் அழகு என்று பொருள். (அதனால்தான், பெண்கள் 'லாவண்யா' என்று பெயர் வைத்துக்கொள்கின்றனர்.) முதன் முதலில் இந்தத்தொடரை உருவாக்கியவர் லஞ்சத்தை அங்கதச்சுவையோடு 'லஞ்ச லாவண்யம்' என்று கூறியிருக்கலாம். இப்போது அது ஒரு முரண் தொடர் என்பதே உணரப்படாமல் லஞ்ச அழகு மலிந்து விட்டது என்று கையாளப்படும்போது, மொழியைத்

திறனறிந்து பயன்படுத்துதல் அற்றுப்போகிறது, இம்மாதிரி விஷயங்களில் பத்திரிகையாசிரியர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

2. ‘ஏழைமக்களுக்காகத் திட்டங்கள் தீட்டுவதைவிட அந்தத் திட்டங்களால் எவ்வளவு லாபம் என்று கணக்குப் பார்க்கும் அரசியல் வியாபாரிகளே அதிகமாக உள்ளனர், என்பது போன்ற தொடர்களும் மாற்றப்பட வேண்டியவை. ஏனென்றால் திட்டம் தீட்டாமலே எப்படி எவ்வளவு லாபம் என்று கணக்குப் பார்க்க முடியும்? ஆகவே ‘ஏழை மக்களுக்காகத் திட்டங்கள் தீட்டிவிட்டு, (‘தீட்டுவதைவிட’ என்பது தவறு) அந்தத் திட்டங்களால் எவ்வளவு லாபம் என்று கணக்குப் பார்க்கும்…’ என்று இந்தத் தொடர் அமைவது சிறப்பாகும்.

3. இக்கடிதத்தின் தலைப்பு கடிதத்தின் கருத்துக்குப் பொருத்தமின்றி உள்ளது. ‘காந்திஜி திரும்பிவந்தால்…’ என்று தலைப்புத் தரும்போது, அவர் திரும்பிவந்தால் என்னென்ன நிகழும் என்பதையே நாம் எதிர்பார்க்கிறோம். இந்தக் கடிதமோ அவர் போன்ற சுயநலமற்ற தலைவர் இன்மையால் ஏற்படும் விளைவுகளையே அதிகமாகப் பேசுகிறது. அவர் திரும்பி வர வேண்டும் என்ற எதிர்பார்ப்பையும் வெளிப்படுத்துகிறது. ஆகவே ‘காந்திஜி திரும்பிவந்தால்…’ என்னும் தலைப்பைவிட ‘காந்திஜி திரும்பி வருவாரா?’ என்னும் தலைப்பே பொருத்தமாகும். ‘காந்திஜி திரும்பி வந்தால்…’ என்னும் தலைப்புடைய ஆசிரியவுரைக்கோ, தனிக் கட்டுரைக்கோ இது தலைப்பாகக் கையாளப்பட்டிருப்பினும் கூட, கடிதம் அதே தலைப்பைத்தான் ஆள வேண்டும் என்ற நிர்பந்தமில்லை.

ஒரு சிறு கருத்துரைப் பகுதியைவிட எவ்விதம் மொழித்திறன் நோக்கிலும் கருத்தேற்பு நோக்கிலும் ஆராய முடியும் என்பதை எடுத்துக்காட்டுவதற்காகத்தான் இங்கு இப்பகுதி ஆராயப்பட்டதே அன்றி, குறை காண்பதற்காக அன்று.

ஆசிரியருக்குக் கடிதங்கள் பொதுவாக 100 அல்லது 180 சொற்களுக்கு மேற்படாமல் இருப்பது என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். முன்னர் எழுதப்பட்ட ஏதேனும் ஒரு தலையங்கத்தையோ அல்லது சிறப்புக் கட்டுரையையோ அல்லது வாசகர் கடிதத்தையோ சுட்டி அதிலிருந்து எழும் விவாதத்தை முன் வைப்பது சிறந்தது. எப்படி

விவாதம் வளர்க்கப்படுகிறது என்பதும், என்ன தீர்வுகள் அல்லது முடிவுகள் சொல்லப்படுகின்றன என்பதும் முக்கியம்

## சிறப்புக் கட்டுரைகள் (Articles)

ஒரு கட்டுரை (பத்தி அல்லது Column), சிறப்புக் கட்டுரை, தலையங்கம் மூன்றிற்கும் பெரும் அளவிலான வேறுபாடுகள் இல்லை என்று அமெரிக்காவின் மிகச் சிறந்த இதழாளர்களுள் ஒருவரான வால்ட் லிப்மன் (Walt Lipman) கருதுகின்றார். ‘அமெரிக்க இதழ்களின் ஆசிரியர்கள் சங்கச் செய்திமடலில், அவர் இப்படி எழுதினார். “ஒருவேளை, செய்தித்தாள் தொழிலில், நான் தலையங்கம் எழுதுபவனாக நுழைந்த காரணத்தாலோ என்னவோ, ஒரு சிறப்புக் கட்டுரையாளரைப் பெயர் போட்டு (அதாவது பெயர் வரியுடன் கூடிய) தலையங்கம் எழுதுபவராகத்தான் நான் மதிப்பிடுகிறேன். இரண்டு வேலைகளும் சற்றே வித்தியாசமானவைதான் என்றாலும், நெருங்கிய உறவுடையவை.

பல சிறப்புக் கட்டுரைகளில் இடம்பெறும் ‘நான்’ என்ற பிரதிப்பெயர்க்குப் பதிலாக ‘நாம்’ என்று போட்டுவிட்டு, பெயர் வரியையும் எடுத்துவிட்டால், அவை தலையங்கமாகவே மாறிவிடும் என்றும் இதழாளர்கள் கருதுகின்றார்கள்.

## சிறப்புக் கட்டுரைகளின் வகைகள்

1. ஆசிரியவுரை போன்ற கட்டுரைகள் அல்லது பொதுஅரசியல் கட்டுரைகள்.

2. நகைச்சுவைக் கட்டுரைகள்

3. குறுஞ்சம்பவங்கள், பத்திகள், ஊர் வம்புப்பத்திகள்

4. அறிவுரைப் பத்திகள், விவாத மேடைகள்.

5. சிறப்புச் செய்திகள் கட்டுரைகள்

6. சமூக விஷயப்பத்திகள்

7. விளையாட்டுப் பத்திகள்

சிறப்புக் கட்டுரைகள், பத்திகள் (Columns) எழுதுவதுதான் எழுத்துத்துறையில், இதழியலில் உச்சபட்சச் சுதந்திரம் அளிக்கப்பட்ட எழுத்துச் செயல். வேறு எவ்விதச் செய்தி கட்டுரையாலும் முடியாத மாதிரியான விஷயங்களை இவற்றில் பேச முடியும்; பிற செய்திக் கட்டுரைகளின் அமைப்புக்கு ஏற்காத விஷயங்களையெல்லாம் சிறப்புக் கட்டுரையாளன் சொல்ல முடியும். தன் சொந்தக் கருத்துக்களைத் தயக்கமின்றி ஒரு சிறப்புக் கட்டுரையாளர் கூறமுடியும்: அவற்றை இலக்கியச் சிறப்பு வாய்ந்த நடையிலும் சொல்ல முடியும். சிறப்புக் கட்டுரையாளர்களும் பத்தியாளர்களும் தீர்ப்புக் கூறலாம்: பரிந்துரைகளை முன் வைக்கலாம். தங்களைப் பற்றியேயும் பேசிக்கொள்ளலாம். மற்ற இதழ்க் கட்டுரை வகைகளில் மறுக்கப்பட்ட விஷயங்கள் என்ன என்னவோ அவற்றையெல்லாம் இவர்கள் எடுத்தாளலாம். விரும்பும் விதத்தில் மொழியைப் பயன்படுத்தலாம். மரபுக்கு மாறான அவர்களது முகவரியாகிவிடுகிறது. நடையை வைத்தே பல இதழாளர்களை அறிந்துகொள்ள முடியும். (இதற்கு, ஆங்கில இதழ்களில் மிகச் சிறந்த உதாரணம் - குஷ்வந்சிங்.

சிறப்புக் கட்டுரைகள், பிற இதழ்க் கட்டுரைகள், கருத்துச் சித்திரக் கட்டுரைகள் (Features) போன்றே அமையலாம். மரபாக ‘செய்தி’ என எவற்றை நாம் வழங்குகின்றோமோ அவற்றை எழுதும் முறையில் அமையும் வகைகள் அல்ல இவை. பத்திகளின் விஷயம், தத்துவத்திலிருந்து தன் சொந்த விருப்பு வெறுப்புகள் ஈராக எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

நல்ல பத்தியாளர்களுக்கு ‘விசிறி’கள் பலர் உருவாகிவிடுகின்றனர். குறிப்பாக விளையாட்டுப் பத்திகள், சமூகப் பத்திகள் எழுதுவோர்க்கும் ஆர்வமிக்க வாசகர்கள் உண்டு.

## கருத்துச் சித்திரம் (Feature)

உங்களுக்கெனத் தனித்த சிறப்பார்வம் ஏதேனும் இருந்தால்-

அது உங்கள் ஓய்வு நேரங்களையெல்லாம் கொள்ளை கொள்ளும் அளவுக்கு வலிமை வாய்ந்ததாகவும் இருந்தால்-

அந்தக் குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிப் பிறரைவிட உங்களால் செய்திகள் அதிகம் சொல்ல முடியும் என்றால்-

கருத்துச் சித்திரக் கட்டுரை எழுதத் தகுதியான நபர் நீங்களேதான்; நீங்கள் ஒருவர் மட்டுமேதான்.

சரியான தலைப்பைத் தேர்ந்தெடுப்பதுதான் முதல் வேலை. இதற்கு மிக மிகப் பொறுமை வேண்டும். உங்களுடைய பொறுமையின் அளவைத் தீர்மானித்துக் கொள்ளவும், உங்கள் எழுத்தாற்றலை அளவிட்டுக் கொள்ளவும், நீங்கள் ஒரு உள்ளூர்ப் பத்திரிகையைத் தேர்ந்தெடுத்து அதற்கு எழுத முயற்சி செய்யலாம். உங்கள் கட்டுரை பெருமளவிலான வாசகர்களைக் கவர்ந்தது என்றால், நீங்கள் இன்னும் பெரும் பத்திரிகைகளுக்கு எழுதத் தகுதியானவர் என்று பொருள்.

## பத்தியாளர் (Columnist)

தனக்கெனத் தனித்த நடையை உருவாக்கிக் கொள்பவரே வெற்றிபெறும் பத்தியாளர் என்று உறுதியாகச் சொல்லலாம். ஒரு நல்ல நடையை உருவாக்கிக் கொள்ள முன்பே கருத்துகள் கூறப்பட்டன. ஆயினும், தேவை கருதி, இங்கும் சில ‘வேண்டும்’ விஷயங்களைச் சொல்லலாம்.

1. சாதாரணமானது என்று பிறர் நினைப்பனவற்றைப் புதியதொரு கண்ணோட்டத்தில் காண முயற்சி செய்யவேண்டும்.

2. நகைச்சுவையைப் பயன்படுத்த வேண்டும்.

3. உங்கள் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளைத் தெரிவிக்க வேண்டும்.

4. தன்னுணர்ச்சி மிக்க நடையைக் கையாள வேண்டும்.

5. படைப்பாற்றலோடு எழுத வேண்டும். அதாவது, வார்த்தைகள், அவற்றின் அர்த்தம் ஆகியவற்றோடு சோதனை செய்ய வேண்டும்.

வாக்கிய அமைப்புகள், பத்தியமைப்புகள் இவற்றுடன் விளையாடுக படிமங்களை (சொற்சித்திரங்களை) உருவாக்க வேண்டும். வருணனை செய்ய வேண்டும்.

6. நாடகப் பாங்குடன் எழுத வேண்டும்.

7. கதை சொல்லலில் (சிறுகதை எழுதுவதில்) கையாளப்படும் உத்திகளை இங்கும் பயன்படுத்தவேண்டும்.

8. சொல்லாற்றலை மிகுதிப்படுத்திக்கொள்ள வேண்டும்.

9. மற்றவர்கள் கூறுவனவற்றை உற்றுக் கவனிக்க வேண்டும்.

10. மற்றவர்களுக்காக (வாசகர்களுக்கென) எழுதுகிறோம் என்ற உணர்வு வேண்டும்.

தேர்ந்தெடுக்கும் தலைப்பு உங்களுடையதாயினும், உங்கள் கடமை, மற்றவர்கள் ஆர்வத்தைத் தூண்டுமாறு-அவர்கள் மகிழுமாறு எழுதுவதே ஆகும்.

மாதிரிக்கு ஒரு சிறப்புக் கட்டுரை (Article)

## முயன்றால் முடியும்

“பெற்றோர்களுக்கு வேலைகொடு, குழந்தைகளுக்கு கல்விகொடு” என்ற கோஷம் சில தினங்களுக்குமுன் தமிழகத்தின் பல ஊர்களில் ஒலித்தது. கோஷத்தை எழுப்பிய 159 பேர்களில் குழந்தைத் தொழிலாளர்களும் இடம் பெற்றிருந்தனர். ‘பாரத்யாத்ரா’ என்ற பெயரில் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர் வரை யாத்திரை மேற்கொள்ள இளம் பிரச்சாரக் குழுவின் நோக்கம். அவர்கள் எழுப்பிய கோஷங்களில் தெளிவாய் வெளிப்பட்டது.

குழந்தைகள் நலன் காக்கப்படவேண்டும்; அவர்களைப் பின்னிப் பிணைத்திருக்கும் அடிமைச் சங்கிலிகள் தகர்த்தெறியப்பட வேண்டும்; யாத்திரையை வழிநடத்திச் சென்ற குழுத் தலைவர் கைலாஷ் சத்தியார்த்தியின் வார்த்தைகளில்; “குழந்தைத்

தொழிலாளர்கள் என்பது ஒரு உலகளாவிய பிரச்சினை என்றாலும் தகுந்த முயற்சி எடுத்தால் இதை முற்றிலும் ஒழிக்க முடியும்".

மொரதாபாத் கம்பளித் தொழிற்சாலைகளிலும் வெண்கலப் பட்டறைகளிலும், சிவகாசி பட்டாசு மற்றும் தீக்குச்சித் தொழிற்சாலைகளிலும், அலிகார் பூட்டுக் கம்பெனிகளிலும் குழந்தைத் தொழிலாளர்கள் காலங்காலமாய் வேலைக்கு அமர்த்தப்பட்டு வருகின்றனர். பெரும் நகரங்களில் சிறுவர் பட்டாளம் உணவு விடுதிகளில் நுழைக்கப்பட்டு வருகின்றனர்.

குழந்தைகளைக் கூலிவேலைக்கு அமர்த்துவது தகாதது; சட்டத்தின் முன் குற்றமாகும்; சமூக ரீதியில் மிகக் கொடுமையானது- என்பதெல்லாம் எத்தனைபேருக்குத் தெரியும்?

குழந்தைகளை வேலைக்கு அனுப்பும் பெற்றோர்கள் வறுமையில் வாடுபவர்கள். வறுமையின் கோரத்தால் பலர் தம் குழந்தைகளை அடகு வைத்துக் கொத்தடிமைகளாக மாற்றிவிடுகின்றனர். அவர்களுடைய மனநிலையில் தாம் செய்வது சரியே. இவர்களிடமிருந்து குழந்தைகளைப் பிரிப்பது அவ்வளவு சுலபமல்ல.

ஒரு சில ஆலைகளில் வேலைச்சூழல் கடினமானது மட்டுமல்ல; மிகக் கொடுமையானதும் கூட. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்ற தத்துவத்தை இறுகப் பிடித்துக்கொண்டு, சிறு வயதிலிருந்தே வேலைக்குச் சென்று பழகினால்தான் பெரியவர்களானபின் குறிப்பிட்ட தொழில்களில் ஈடுபட முடியும். உடம்பும் ஒத்துப்போகும் என்றெல்லாம் வாதிட ஒரு கூட்டம் செயல்படுகிறது.

மற்றொரு வாதம், பரம்பரைத் தொழில். உதாரணத்திற்கு, வளையல் பட்டறைகளில் பணி செய்ய, சின்ன வயதிலிருந்து பழகினால்தான் கொதிக்கும் கண்ணாடிப் பொருளின் சூட்டிற்கு ஈடு கொடுக்கமுடியும்; படிக்கத்தான் ஆர்வம் இல்லை; வேலையாவது கற்றுக் கொள்ளட்டுமே என்ற போக்கு இன்னும் பல இடங்களில் வேரூன்றியுள்ளது.

விழிப்புணர்வு வந்துவிட்டால், குழந்தைகளுக்கு விடிவுகாலம் வந்துவிடும் என்று அடித்துச் சொல்வதற்கில்லை. சம்பாதிக்கப் பழகிப்போனதும், கூடுதல் குடும்ப வருமானம் வருவதும், குழந்தை

உழைப்பை உறுதிப்படுத்துவதாக இருக்கிறதே தவிர, அதை நிராகரிக்கவில்லை.

குழந்தை உழைப்பாளர்களின் தொடர் நிலைக்கு ஏழ்மை ஒரு காரணம் மட்டுமே. பழமை வாய்ந்த தொழில் நுட்பத்தைப் பயன்படுத்துவதும் ஒரு முக்கியக் காரணம் ஆகும். குறைந்த மூலதனம், நிறைந்த லாபம். ஆகவே முதலீட்டாளர்களுக்கு இதில் மாற்றம் கொண்டு வருவதில் ஆர்வம் இல்லை, அக்கறையும் இல்லை.

சட்டத்தைப் பொறுத்தமட்டில், தெளிவாகவே உள்ளது. குழந்தை உழைப்பு சட்ட விரோதமானது. பிரச்சினையே, சட்டத்தை எப்படி நிலை நாட்டுவது என்பதுதான்.

குழைந்தை உழைப்பு தொடரத்தொடர, தொழிலாளர் துறை அலுவலர்களுக்குக் குழந்தை உழைப்பாளர்களின் பணித்தளங்கள், கொள்ளை லஞ்சம் கொடுக்கும் வற்றாத ஊருணிகள். அவர்களுக்கு மட்டுமல்ல-தொழில் நடத்துபவர்களுக்கும் கூடத்தான்.

கூலியும் குறைவு; தொழிற்சங்கம், சச்சரவுகள் கிடையாது. சட்டப்படி தொழிலாளர்களுக்குச் செய்து கொடுக்கவேண்டிய சலுகைகளிலிருந்தும் விடுதலை. இப்படியிருக்கையில் இவர்கள் பிடி தளர்வது எப்படி?

ஓட்டுமொத்தத்தில், குழந்தை உழைப்பை நிறுத்துவதற்கு ஒரே வழி, வயது வந்தவர்களுக்கு வேலையும் பச்சிளங்குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வியும் கொடுப்பதே என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. இது அரசியல் பிரச்சினை. அரசியல் சாதனம் வழிகாட்டும் நெறியில் குறிப்பிட்டுள்ளதற்குச் சட்டவடிவம் கொடுத்தால், குழந்தை உழைப்பு கடந்தகால வரலாறாக மாறிவிடும். கடல் போன்ற பிரச்சினைக்கு ‘பாரத் யாத்ரா’ ஒன்று மட்டும் போதாது.

-பேராசிரியர் விக்டர் லூயிஸ்,

சென்றவாரம் இதழ், ஏப்ரல் 17-30, 1994

பெரும்பாலான பத்திகள் சம்பவங்களால் ஆனவை, பழங்காலத்தில் இவை ‘ஆசிரியப் பத்திகள் (Editorial Columns) என்றே

அமைக்கப்பட்டன. ஊர்வம்புப் பத்தி (Gossip Column) சற்றே புதிய விஷயம்: இந்தியன் எக்ஸ்பிரஸ், இந்து போன்ற ஆங்கிலப் பத்திரிகைகளிலும், தினமலர், தினமணி போன்ற சிலதமிழ் இதழ்களிலும் இவற்றைக் காணலாம். ஆங்கில இதழ்களில் ஷோபனா டே, விக்ரம் சேத் போன்ற எழுத்தாளர்கள் இப்படி எழுதிப் பிரபலமானவர்கள். ஆனால் ஒரு வித்தியாசம். சம்பவப்பத்திகள், அல்லது குறுங்கதைப் பத்திகள் போன்றவை, மக்களைப் பற்றிய முழுக்கதைகள், ஊர்வம்புப் பத்திகளிலோ, யாரேனும் ஒரு பிரபல மனிதரைப் பற்றி அல்லது ஒரு விஷயத்தைப் பற்றி ஒரு சில வாக்கியங்களே இருக்கும். (குமுதத்தில் ‘லைட்ஆன்’ பகுதியில் வருவதுமாதிரி)

‘பத்திகள்’ என்பதற்காக விளக்கத்தினை ஜான் எம். ஹென்றி என்பவர், தமது ‘பத்திகள் எழுதுவது எப்படி’? என்னும் நூலில் பின்வருமாறு தருகிறார். “புத்திசாலித்தனமான நகைச்சுவைக் குறுங்கதை போன்றது; மிகச் சுருக்கமான ஆசிரிய வெளிப்பாடு; பெரும்பாலும் நகைச்சுவை கொண்டது; சில சமயம் உணர்ச்சி வெளிப்பாடும், சிலசமயம் எள்ளலும்கூட இருக்கலாம்; வழக்கமான இரண்டு மூன்று பாராக்கள் மட்டுமே எழுதப்படும்; ஏதோ ஒரு நுணுக்கமான அல்லது ஆச்சரியத்தை அளிக்கும் அபிப்பிராயத்தோடு முடியும்.”

முன்பெல்லாம் தலையங்க ஆசிரியர்களே இப்படிப்பட்ட பத்திகளையும் எழுதி வந்தார்கள். இப்போது சிறப்புக் கட்டுரையாளர்கள் அந்தப் பணியை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள்.

## விளையாட்டுப் பத்தி (Sports Column)

மற்றப் பத்தியாளர்க்கு இல்லாத ஒரு சிக்கல் விளையாட்டுப் பத்தி எழுதுபவருக்கு உண்டு. ‘பொது நிலைப்பட்ட (Objective) வெளிப்பாடு’ என்னும் கட்டுப்பாடின்றி, தங்கள் சொந்த உணர்வுகளைப் பிற கட்டுரையாளர்கள் பயன்படுத்தலாம். அவர்கள் தகவல்கள் அளிக்கலாம்: மகிழ்வூட்டலாம், தாஜா செய்யலாம்- சட்டத்திற்கும் நல்ல ரசனைக்கும் உட்பட்டு எதை வேண்டுமானாலும் எழுதலாம். முழுச் சுதந்திரம் அவர்களுக்கு உண்டு. ஆனால் விளையாட்டுத் துறை எழுத்தாளருக்கு முழுச் சுதந்திரம் கிடையாது. அவர் நடந்த விளையாட்டு நிகழ்ச்சிகளை அப்படியேதான்

அறிவித்தாக வேண்டும். விளையாட்டுப் பத்திகளில் மிக ஆழமான தனிமனித வெளிப்பாடு ஏற்பட முடிந்தால் மிகச் சிறப்புடையதாகும். பின்வரும் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டே விளையாட்டுப் பத்தியாளர் எழுதவேண்டும்.

1. மரபுவழியாக, நீண்டகாலமாகத் தொடர்ந்து வரும் விளையாட்டுப் பகைமைகளில் ஈடுபடாத, தெளிந்த சாயாத மனத்தை வெளிப்படுத்த வேண்டும்.

2. விளையாட்டு வீரர்கள், அவர்களது பயிற்சியாளர்கள், அலுவலர்கள் ஆகியோரைப் பற்றி அவதூறுக்குள்ளாக்கும் விதத்தில் எழுதக் கூடாது, சமநிலை வேண்டும்.

3. ஓர் அறிக்கை எழுதுவது போலவே மெய்ம்மைகளைத் தவறாது உணர்த்துதல் வேண்டும்.

4. விளையாட்டு வீரத் தன்மையை வளர்க்கவும், லஞ்சம் ஊழல் போன்ற களைகளைக் களையவும் போராட வேண்டும்.

5. தர வித்தியாசமும் தீர்ப்புக்காணும் ஆற்றலும் கொண்டவராக இருக்க வேண்டும். பிரபலமாவதற்காக எதை வேண்டுமானாலும் எழுதிவிடக் கூடாது.

## கருத்துச் சித்திரங்கள் (Features)

‘கருத்துச் சித்திரங்கள்’ வரையறுக்க எளியவை அல்ல. “இச்சொல் (கருத்துச் சித்திரம்) பலவற்றையும் குறிக்கும். பத்திரிகைகளில் நேரடியான செய்திக் கட்டுரைகளும் உண்டு. இவற்றிற்கு எதிராக, தலையங்கங்கள். மதிப்புரைகள், சிறப்புக்கட்டுரைகள் ஆகியவையும் உண்டு. இவை கருத்துரைப்பவை. செய்திக் கட்டுரைகளையும் கருத்துரைப் பகுதிகளையும் தவிர அனைத்தையும் கருத்துச் சித்திரங்கள் என்றே சொல்ல வேண்டும்” என்பது ஓர் இதழாசிரியர் கருத்து.

டெனிவர் போஸ்ட் என்னும் இதழின் ஆசிரியர் மெக் கின்னி கூறினார்; “யார்-எதற்காக-எப்படி என்னும் கேள்விகளுக்கு விடையாக அமையும் நேரடிச் செய்திக் கட்டுரைகளின்

எல்லைக்கப்பால் நின்று மக்களைப் பாதிக்கின்ற ஒரு கட்டுரையினை, கருத்துச் சித்திரக் கட்டுரை எனலாம்."

கற்பனையை உண்மையோடு இணைத்து, அதைச் சிறப்புற வெளிப்படுத்துவதற்காகப் பயன்படுத்தும் விதத்திலேயே இவ்வித இதழ்க் கட்டுரைக்கான நியாயம், பலம், அடையாளம் அனைத்தும் உள்ளன.

ஓர் சித்திரக் கட்டுரையாளர் மெய்ம்மைகளையே பயன்படுத்த வேண்டும். ஆனால் வெறுமனே மெய்ம்மைகளை வெளிப்படுத்துவது மட்டுமே அவரது நோக்கமல்ல. ஆகவே அவர் பிறவகை எழுத்துப்பாணிகளோடு இவ்வித இதழ்க் கட்டுரைகளை ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகளை நன்கறிந்து கொள்ள வேண்டும்.

ஒரு சிறுகதைக்கும் கருத்துச் சித்திரத்திற்கும் அமைப்பில் பெரும் வேற்றுமைகள் இல்லை. சித்திரக் கட்டுரை (Feature) மெய்ம்மைகளை வெளிப்படுத்துவது; கற்பனையானதல்ல என்பதே அடிப்படையான வித்தியாசம். ஆனால் சிறுகதையின் கதைசொல்லும் உத்திகளை சித்திரக் கட்டுரையாளர் நன்கு கையாளலாம். "உங்கள் கட்டுரையைப் படித்தேன்; ஒரு சிறுகதை மாதிரியே சுவையாக இருந்தது" என்று எவரேனும் கூறினால் கட்டுரையாளர் பெருமகிழ்ச்சியடையலாம்.

தலையங்கங்கள், மதிப்புரைகள், சிறப்புக் கட்டுரைகள் போன்ற கருத்துரைப் பகுதிகளிலிருந்து சித்திரக் கட்டுரை, கருத்துரைக்கும் விதத்தில் வேறுபடுகிறது. ஒரு சித்திரக் கட்டுரையாளர் நியாயமான தர்க்க ரீதியான முறையில் ஆராய்ந்து, முடிவை அடையவேண்டும். ஆனால் அவர் பிரச்சாரத்தில் ஈடுபடக்கூடாது. தலையங்கம் போன்று வெளிப்படையாகக் கருத்துரைக்கக் கூடாது. கட்டுரையாசிரியரின் நோக்கம், ஒரு பிரச்சினைக்கு ஒளியூட்டிக் காட்டுவதே தவிர 'இந்த வழியினை மேற்கொள்' என்று தூண்டுவதல்ல. ஒரு சித்திரக் கட்டுரையாளர் தகவல்கள் அளிக்கலாம், மகிழ்வூட்டலாம்; ஆனால் சார்பு எடுக்கத் தூண்டக் கூடாது.

வரன்முறையான செய்திக் கட்டுரையிலிருந்தும் கருத்துச் சித்திரக் கட்டுரை சில விதங்களில் மாறுபடுகிறது. கருத்துச் சித்திரங்களுக்கெனக் குறித்த வடிவம் என ஒன்று கிடையாது.

தொடக்கம் போலவே நடுப் பகுதியும் முடிவும் படிக்கச் சுவையானவையாக இருக்க வேண்டும். செய்தி எழுதுதலின் முக்கிய இயல்புகளை இதழ்க் கட்டுரையாளர் மறந்துவிடக் கூடாது. முக்கியமாக எளிமை. செய்திக் கட்டுரையில் இருப்பது போல இறுக்கமாகத் தகவல்களைத் தருகின்ற முறை கருத்துச் சித்திரங்களில் பயன்படாது. கட்டுரையாளர், ஒரு குறிப்பிட்ட 'விஷயத்தை' – கருப்பொருளை மையமாக வைத்தே, எளிமையுடன் எழுத வேண்டும். ஒருமைப்பாட்டுடன் கூடிய நல்ல கட்டுரையினை உருவாக்க வேண்டும்.

செய்திக் கட்டுரைகளின் (News Stories) முக்கிய இயல்பு கால அடிப்படை. இதைப் போலக் கருத்துச் சித்திரங்களும் காலத்தை ஒட்டியபடியாகச் சில சமயங்களில் அமையலாம். ஆனால் வாசக ஆர்வத்தினைத் தூண்ட கட்டுரையாளர் காலத்தை மட்டுமே நம்பியிருக்க வேண்டிய அவசியமில்லை. அண்மையில் நடந்த சில சம்பவங்களிலிருந்து சில மெய்ம்மைகளைத் தேர்வு செய்து எழுதுவது இதழ்க் கட்டுரைக்குப் போதாது. மாறாக, வாழ்க்கையிலிருந்தே அவர் தமக்கு வேண்டிய கருப்பொருளைத் தேர்வுசெய்து, அதற்கு வண்ணமும் வடிவும் தந்து. பின்னணியை அமைத்து, விளக்கங்கள் தந்து எழுத வேண்டும். மக்களையும் நிகழ்ச்சிகளையும் புதியதொரு கோணத்தில் கற்பனைத் திறனோடு கண்டு, அந்த அனுபவத்தைக் கூரிய விளக்கமான தொடர்களால் அமைத்து உணர்த்த வேண்டும்.

இதேபோல செய்திக்கட்டுரைகளின் முதன்மைப் பத்தி (Lead) அமைப்பிலிருந்து கருத்துச் சித்திரக் கட்டுரைகளின் 'லீட்' அமைப்பு முற்றிலும் மாறுபடும். சித்திரக் கட்டுரைகளின் 'லீட்' கவர்ச்சியாக, அதே சமயம் ஒரு குறித்த கருத்தைப் பற்றியதாக, ஆர அமர அதை அறிமுகப்படுத்திச் செல்வதாக அமையலாம். ஆனால் செய்திக் கட்டுரையின் 'லீட்', முக்கியமான தகவல்கள் அனைத்தையும் தந்து அமைய வேண்டும். சித்திரக் கட்டுரையின் 'லீட்' பகுதிக்கு ஒரு சான்று:

மெத்தனப்போக்கு எவ்வளவுதூரம் போக முடியும்? ஜே.என். மிஸ்ரா, துளசிங்கர் சௌதுரி, கே. கம்ரட், உதய் பிஜாய், மோகன் பதிதா, என்.சி. மஹாபாத்ர, சிலோஸ் லக்ரா, இவர்களுடைய உடன்

பணியாளர்கள் ஐவர் ஆகியோர் கூடி இக்கேள்விக்கான விடையைக் காண முற்பட்டனர். 'நீண்ட நாளைக்கு அல்ல' என்ற பதிலும் அவர்களுக்குக் கிடைத்தது. அவர்களுடைய உரிமைக் குரல்களை ஒருபோதும் அடக்கமுடியாது.

-ஆரோக்கியத்திற்குச் சவால்விடும்

ஒரிசாவின் சிமெண்ட் தொழிற்சாலை,

இந்தியன் எக்ஸ்பிரஸ், 27-4-94.

சித்திரக் கட்டுரைகள், மென்மையானச் செய்திகள் (Soft News) என்னும் வரிசையில் சேர்க்கப்படுகின்றன. வரன்முறையான செய்திகளை மிக நன்றாகச் சேகரித்து அளித்துவந்த ஓர் எழுத்தாளருக்குக் கிடைக்கும் பரிசாக, வெகுமதியாக, சித்திரக் கட்டுரை வரைதல் நோக்கப்படுகிறது. நேரடிச் செய்திக் கட்டுரை எழுதுவதைவிட அதிகமான ஆற்றல்கள் சித்திரக் கட்டுரை எழுதுபவருக்கு அவசியம்.

சிறப்புக் கட்டுரை (ARTICLE) போலவே சித்திரக் கட்டுரைக்கும் (FEATURE) குறித்த வடிவம் எதுவுமில்லை. ஒரு கருத்துச் சித்திரம், செய்தி அளிக்கலாம்; துப்புத் துலக்கலாம்; பிரச்சினையை ஆழமாக அலசலாம்; நகைச்சுவை பயக்கலாம். சித்திரக் கட்டுரைக்கான கருப் பொருள், இடங்களாகவோ (ஒரு சமூகம், ஒரு பண்ணை, ஒரு கிராமம், ஒரு வணிக நிறுவனம்), துறைகளாகவோ (கல்வி, அறிவியல், பொருளாதாரம், சமயம், தத்துவம்…), நிகழ்ச்சிகளாகவோ (அணிவகுப்புகள், இசைக் கச்சேரிகள், குழும நிகழ்வுகள்…), மனிதர்களாகவோ (தெரிந்தவர்கள் தெரியாதவர்கள் யார் வேண்டுமானாலும்), விலங்குகளாகவோ, (அரியவையோ, சாதாரணமானவையோ…) எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். சித்திரக் கட்டுரைகளின் கருப்பொருளுக்கு எல்லையேயில்லை.

ஓர் இடத்தைப் பற்றிய சித்திரக் கட்டுரைக்கு உதாரணமாக இதனைக் காண்க: முதல் 'உலகம் சுற்றிய தமிழன்' ஆன திரு. ஏ.கே. செட்டியார் 'சக்தி' இதழில் ஐம்பதாண்டுகளுக்கு முன்னால் எழுதிய சித்திரக் கட்டுரை இது.

## திருவண்ணாமலை

‘அண்ணாமலைக்கு அரோகரா’ என்ற சத்தத்தைக் கேட்டாலும் ‘அன்னக் காவடி தர்மம் தாயே’ என்ற சத்தத்தைக் கேட்டாலும் நீங்கள் திருவண்ணாமலையில் இருப்பதாக எண்ணிக் கொள்ளலாம்.

விழுப்புரம்-காட்பாடி ரயில்வே லயனில் திருவண்ணாமலை பெரிய ஸ்டேஷன். ஸ்டேஷன் மட்டும் பெரிதல்ல ஊரும் பெரிது; ஊருக்குள்ளிருக்கும் கோயிலும் பெரிது. பல வருடங்களாக இவ்வூர் ஒரு நகராட்சியாக இருந்து வருகிறது. நகரசபைத் தேர்தல்கள் வரும்போது வாக்காளர்களுக்கு நல்ல வருமானம் கிடைக்கும். இவ்வூரில் தனிப்பட்ட மனிதர்கள் தர்மத்துக்காகச் செலவு செய்த தொகைதான் பல மடங்கு அதிகமாக இருக்கும்.

சென்ற வருஷம் நான் இவ்வூருக்குச் சென்றிருந்த போது எனக்கு ஒரு தேநீர் விருந்து அழைப்புக் கிடைத்தது. நகரசபையார், நகரிலுள்ள ஒரு வீதியில் தங்கள் செலவில் ஒரு தண்ணீர்க் குழாய் அமைத்தார்கள். இந்தத் தண்ணீர்க்குழாய்க்குத் திறப்பு விழா நடத்துவதற்காக அந்த வார்டைச் சேர்ந்த நகரசபை அங்கத்தினர், தமது சொந்தச் செலவில் அளித்த தேநீர் விருந்து அது.

கூட்டம் சுமார் 50 பேர்கள். மலர் மாலைகள் எல்லாம் முறையாக அணிவிக்கப்பட்ட பிறகு, நகர சபைத் தலைவர், குழாயைத் திருகி, தண்ணீரை மூன்று முறை பருகி, பிறகு தலையிலும் தெளித்துக் கொண்டார். இந்த வைபவத்துக்கு மேளதாளம் கூட இருந்ததாக எனக்கு ஞாபகம். திருவண்ணாமலை நகரத்தின் வேகமான முன்னேற்றத்தை இந்த தண்ணீர்க் குழாய் திறப்பு வைபவத்திலிருந்தே அறியலாம்.

திருவண்ணாமலைக்குப் பெருமையளிப்பது தண்ணீர்க்குழாய் அல்ல; அவ்வூரிலுள்ள பெரிய கோயில்தான். திருவண்ணாமலைத் திருக்கோயில், தமிழ்நாட்டிலுள்ள மிகப் பெரிய கோயில்களுள் ஒன்று. இந்தக் கோயிலைக் கட்டிய பெருமை, வரலாற்றின்படி, வல்லாளமகாராஜனைச் சேர்ந்தது. லட்சக்கணக்காகப் பொருள் செலவிட்டுக் கோயிலை நல்ல நிலையில் வைத்திருக்கும் பெருமை நாட்டுக்கோட்டை நகரத்தார்களைச் சேர்ந்தது.

அழகான மலை, உயரம் சுமார் 2000 அடிக்கு மேல் இருக்கலாம். சுற்றி வந்தால் சுமார் எட்டு மைல்களாகும். இந்த எட்டு மைல் தூரத்தில் 365 குளங்கள் இருக்கின்றனவாம் ஒவ்வொரு குளமும் ஒவ்வொரு தீர்த்தம். மலைக்குப் பின் புறத்தில் அடியண்ணாமலை என்னும் ஊரில் அழகான கோயில் ஒன்று இருக்கிறது. மலையைப் பிரதட்சணமாக வரும்போது பின் புறத்திலிருந்தும், மற்றப் புறங்களிலிருந்தும் மலையைப் பார்க்கலாம். ஒவ்வொரு புறத்திலிருந்து ஒவ்வொரு விதமான அழகான மலைத்தோற்றம்.

இந்த மலையைச் சுற்றிவரும் முக்கியமான விசேஷங்கள் இரண்டு. முதலாவது யமபாதைக் கதவு பருமனில்லாத சாதாரண மனிதர்கள் நுழையும் படியாக ஒரு சிறு மண்டபமிருக்கிறது, மண்டபத்தின் ஒரு புறத்தில் நுழைந்து மறுபுறத்தில் வந்து விட்டால், நரகலோகத்திற்குப் போகாமல் தப்பித்துக் கொள்ளலாம் என்பது பாமர மக்களின் நம்பிக்கை. பருமனுள்ள மனிதர்கள் இந்த மண்டபத்துக்குள் நுழைந்து, வெளியே வருவதற்குப்படுகின்ற வேதனையைப் பார்க்கும்போது, நரக வேதனை என்று சொல்வது கூடத் தேவலை, என்று நமக்குத் தோன்றுகிறது.

இரண்டாவது விசேஷம் மிக முக்கியமானது. குறிப்பிட்ட ஓர் இடத்தில் நின்று கொண்டு “உண்ணாமலைத் தாயே” என்று கூப்பிட்டால் “ஏன்?” என்று, பதில் குரல் கேட்குமாம். “பாலும் சோறும் தருகிறாயா?” என்றால், “தருகிறேன்” என்று பதில் கிடைக்குமாம். இந்த அதிர்ஷ்டம் எல்லோருக்கும் கிட்டாதாம். முற்றிய பக்தர்களுக்கு மட்டும்தானாம்.

மலையைச் சுற்றி வந்தால் கடைசியில் கால் வலியோடு புறப்பட்ட இடத்துக்கே வந்து சேர்கிறோம். கோயிலுக்கு முன்னே, நாற்றம் நிறைந்த ‘சர்க்கரைத்தீர்த்தம்’ இருக்கிறது. பிறகு பதினாறுகால் மண்டபம்தான்.

கோயில்; மிகப்பெரியது. நான்கு வாயில்களிலும் நான்கு கோபுரங்கள். ராஜகோபுரம், மதுரைக் கோபுரத்தை விடப் பெரியதென்று கூறுகிறார்கள். பின்புறமிருந்து பேய்க் கோபுரம். மற்ற இரு புறங்களிலும் இருப்பவை திருமஞ்சனக் கோபுரம். அம்மணி அம்மாள் கோபுரம். இவைகளைத் தவிர வல்லாள மகாராஜா

கோபுரம், கிளிக்கோபுரம் முதலிய பல கோபுரங்கள் இருக்கின்றன. கிளிக்கோபுரத்திலிருந்துதான் அருணகிரிநாதர் திருப் புகழைப்பாடியதாகச் சொல்கிறார்கள்.

கோயிலுக்கு மூன்று பெரிய பிரகாரங்கள் உண்டு. கோயிலை ஒரு முறை சுற்றி வந்தால் சுமார் ஒரு மைல் ஆகும். கோயிலுக்குள்ளே சிவகங்கை, பிரமதீர்த்தம் என்ற இரண்டு அழகிய குளங்கள் இருக்கின்றன. ஆயிரக்கால் மண்டபம், சித்திர வேலைப்பாடு நிறைந்த கல்யாண மண்டபம், தங்க வெள்ளி வாகனாதிகள் அவசியம் பார்க்கத்தக்கவை. கோயிலுக்குள்ளே ஒரு புத்தக சாலையும் பல நந்தவனங்களும் இருக்கின்றன. விக்கிரகங்கள் ஆயிரத்துக்கு மேல் இருக்கும். ஸ்ரீஅபீதகுசாம்பாள் சமேத அருணாசலேஸ்வரருக்கு ஆண்டில் எல்லா மாதங்களிலும் உற்சவங்கள் நடைபெறும். கார்த்திகை மாதம் நடக்கும் தீபோற்சவம் தான் எல்லாவற்றிலும் சிறந்தது. கார்த்திகை உற்சவத்தில், மலையின் உச்சியில் தீபம் ஏற்றுவார்கள். பலநாள் வரையில் இது எரிந்து கொண்டேயிருக்கும். கார்த்திகை உற்சவத்திற்கு லட்சக்கணக்கான மக்கள் வருவார்கள். இந்த மனிதச் சந்தையைத் தவிர, பெரிய மாட்டுச் சந்தையொன்றும் நடைபெறும். உற்சவகாலத்தில நடக்கும் பெரிய வியாபாரங்கள் இரண்டு: ஒன்று காப்பி ஹோட்டல்; இரண்டாவது கத்தரிக்கோல் வேலை.

திருவண்ணாமலையில் நூற்றுக்கணக்கான மடங்களும் ஏராளமான சத்திரங்களும் இருக்கின்றன. பூணூல் அணிந்திருப்பவர்கள் முதல், கழுத்தில் லிங்கம் கட்டியிருப்பவர்கள் வரை, எல்லா ஜாதியாருக்கும் வகுப்பாருக்கும் இங்கே மடங்கள் உண்டு. சத்திரங்களில் பெரும்பாலும் சோம்பேறிப் பிராமணாக்களுக்குத்தான் அன்னமளிக்கிறார்கள். திருவண்ணாமலையிலேயே மிகப் பெரிய கட்டிடங்கள் ஓயாமாரி மடமும் அன்னசத்திரமும்தான். இவ்வூரில் காப்பி கிளப்புகளும் பிச்சைக்காரர்களும் மிக அதிகம். ஒரு சினிமாக் கொட்டகையும், இரண்டு போலீஸ் ஸ்டேஷன்களும், மூன்று கோர்ட்டுகளும். நான்கு கட்சிகளும் இருக்கின்றன.

ரமணாகிரமத்தைப் பற்றி சொல்லாவிட்டால் திருவண்ணாமலைப் பிரயாணம் முற்றுப் பெறாது. ரமண மகரிஷி சிறு பிராயத்திலேயே திருவண்ணாமலைக்கு வந்தார். சில வருடங்கள் மலையில் ஒரு

ஆசிரமத்தில் வசித்தார். இப்போது, திருவண்ணாமலைக்கு ஒன்றரை மைல் தூரத்தில் தனி ஆசிரமத்தில் வசிக்கிறார். அவருடைய ஆசிரமத்தைச் சுற்றி கட்டிடங்கள் அமைத்துக்கோண்டு ஏராளமான பக்தர்கள் வசிக்கிறார்கள். இந்தப் பக்தர்களிலே இந்தியர்களும் ஐரோப்பியர்களும், அமெரிக்கர்களும் இருக்கிறார்கள். ரமணமகரிஷியின் பெயர் அமெரிக்கா வரையில் எப்படியிருக்கிறது. இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் ரமண மகரிஷியைத் தரிசிக்க ஏராளமான ஜனங்கள் வருகிறார்கள். ரமணாசிரமத்தில் ஸ்ரீரமணரின் தரிசனம் எல்லோருக்கும் சுலபமாகக் கிடைக்கும். ஆனால் ரமணசிரமத்தில் சாப்பிடுவதற்குச் சர்வாதிகாரியின் உத்தரவு வேண்டும்.

திருவண்ணாமலையைப் பற்றி இன்னும் அதிகமான விஷயங்கள் எழுதலாம். எட்டு வருடங்கள் பள்ளிக்கூடத்திலும் இருபத்து நான்கு நாட்கள் சிறையிலும் நான் இவ்வூரில் இருந்திருக்கிறேன்.

ஆளுமை பற்றிய சித்திரத்திற்கு ஒரு சான்று பார்க்கலாம்.

## மேடையிலிருந்து ஆங்கிலத்தை விரட்டியவர்

தமிழ்ப்பொரியார் திரு. வி. கல்யாணசுந்தரனார், சர்வ சமய சமரசம், சமூகச் சீர்திருத்தம், தொழிலாளர் முன்னேற்றம், பெண்கள் முன்னேற்றம், அரசியல் துறை, தமிழ் இலக்கியம், பத்திரிகைத் தொழில் ஆகிய எத்தனையோ துறைகளில் ஈடுபட்டு உழைத்தவர். தமிழர் வாழ்விலே அவர் ஈடுபடாத துறையே கிடையாது. சிறந்த தமிழ்ப் பேச்சாளர்; அதனால் ‘தமிழ்த் தென்றல்’ எனப்போற்றப்பட்டவர். பிழையற்ற அழகான இனிய தமிழை நாளிதழ்களிலும் வழங்க முடியும் என்று அவர் ஆசிரியராயிருந்த ‘தேசபக்தன்’ ‘நவசக்தி’ போன்ற நாளிதழ்கள் நிரூபித்தன.

இளமையிலேயே சுரேந்திரநாத்பானர்ஜியின் பழக்கம் இவருடைய உள்ளத்தில் பெரும் கிளர்ச்சியை எழுப்பிற்று. பானர்ஜியின் பேச்சு, சிங்கத்தின் கர்ஜனை போன்றது. கேட்டோருக்கு மிக்க கிளர்ச்சியை உண்டுபண்ணும். சென்னைக்கு அவர் வந்த போது திரு.வி.க. அவருடைய தொண்டர் படையிலே சேர்ந்து பணிபுரிந்தார். தனிமையிலும் பொது மேடைகளிலும் பானர்ஜி பேசிய பேச்சுகள்

இவருடைய மனதிலே எழுச்சியைத் தந்தன. மக்களைத் தட்டி எழுப்ப, பேச்சிலே ஆவேசமும் தீவிரமும் வேண்டும் என்பதை உணர்ந்தார். அவ்வாறே தமிழில் பேசத்தொடங்கினார். இயல்பாகவே அமைத்த தமிழ்ப்புலமை, நுட்பமான அறிவு, உண்மையுணர்ச்சி ஆகியவை இவருக்குத் துணைபுரிந்தன.

பிறகு இவர் அன்னிபெசன்ட் அம்மையாரோடு நெருங்கிப் பழக நேர்ந்தது. அயர்லாந்துப் பெண்மணி ஒருவர், இந்நாட்டிலே வந்திருந்து, நமது சமய நுட்பங்களையெல்லாம் கற்று, நமது நாகரிகத்தைப் போற்றியது அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. இந்நாட்டு முன்னேற்றத்துக்காகவும் விடுதலைக்காகவும் அவர் உழைத்தது, திரு.வி.க.வின் உள்ளத்தை நெகிழச்செய்தது. அன்னிபெசன்ட், ஒப்பற்ற பேச்சுத் திறமையும் கொண்டவர். அவருடைய பேச்சு உருக்கமாக, இருக்கும். அவரைப்போலவே உருக்கமாக, எளிமையாகத் தாம் பேசவெண்டுமென்று ஆசை கொண்டார் திரு.வி.க. அதைச் செயல்படுத்தினார்.

அக்கால அரசியல் உலகத்தில் வழங்கி வந்தது ஆங்கிலமொழி. தமிழில் பேசமுடியாது, பேசினால் அநாகரிகம் என்றெல்லாம் கருதியகாலம். அதுவரையில் யாருக்குமே விளங்காத ஆங்கில மொழியில் நடந்த அரசியல் சொற்பொழிவுகளைக் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதே மரியாதை, தேசத்தொண்டு என்று நினைத்துவந்த பாமரத்தமிழ்மக்கள், திரு.வி.க.வின் தமிழ்ப் பேச்சைக் கேட்டு அடைந்த ஆச்சரியமும் உள்ளக்கிளர்ச்சியும் சொற்களால் வருணிக்க இயலாதவை. தமிழிலேயே பேசமுடியும்., கொச்சைப் பேச்சாக இல்லாமல் அழகிய நடையிலே, யாவருக்கும் விளங்கும்படியாகப் பேசமுடியும் என்பதைத் தமிழ் மக்கள் உணர்ந்தார்கள்.

பெருங்கூட்டங்களிலே பல்லாயிரக்கணக்கான மக்களிடையே உரையாற்றுவார் திரு.வி.க. சாதாரணமாகத் தமிழ்நாட்டில் இன்றும்கூட, மாலை ஐந்து மணிக்குச் சொற்பொழிவு என்று சொன்னால், ஏழு மணிக்காவது தொடங்கும் என்ற நிச்சயத்தோடு நாம் சொல்லலாம். சில சமயங்களில் அந்த எதிர்பார்ப்பும் பொய்த்தது. இரவு ஒன்பதரை ஆனாலும் ஆகலாம். அப்போதும் நமக்கு ஏமாற்றம் ஏற்படாது. இன்றுவரை குறித்தகாலப்படி நாம் ஒரு வேலையைச் செய்யும் முறை இது. ஆனால் திரு.வி.க.

இவ்வாறானவர் அல்லர். ஐந்துமணி என்றால், ஐந்து மணிக்கு அவர் பேசுகின்ற கூட்டம் தொடங்கிவிடும்.

திரு.வி.க. எங்கே, எதைப்பற்றிப் பேசினாலும் முடிவில் தாம் பேசிய பொருள் அனைத்தையும் தொகுத்துக் கூறும் அழகு ஒப்பற்றது என்று பாராட்டியிருக்கிறார்கள். அரைமணி நேரம் பேசினாரோ, அன்றி மூன்று மணி நேரம் பேசினாரோ-பேசிய செய்திகள் இன்னின்னவை என்று முறையாகப் பேசிய வரிசை பிறழாமல் ஒன்றுவிடாமல் தொகுத்துச் சொல்லுகின்ற ஆற்றல் அவரிடம் அமைந்திருந்தது. பேச்சு முழுவதையும் கேட்டு, முடிவான தொகுப்புரையையும் கேட்டவர்கள் இன்று இன்ன பொருளைப் பற்றி இன்ன செய்திகளை அறிந்தோம் என்ற திட்டமான நினைவோடு கூட்டத்திலிருந்து திரும்பிச் செல்வர்.

அன்று அரசியல் வானில் பெரும் சுடராக விளங்கியவர் இராஜாஜி அவர்கள். அப்போதெல்லாம் சென்னை அரசின் நிர்வாகம் இராஜாஜி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஆனால் நடவடிக்கைகள் யாவும் ஆங்கிலமொழியில்தான் நடந்தன.

நடவடிக்கைகளைத் தமிழிலே நடத்தலாம் என்று நடத்திக்காட்டியவர் திரு.வி.க. அரசியல் கருத்துக்களைத் தமிழில் சொல்ல முடியாது என்று பலர் கருதிக் கொண்டிருந்த காலத்தில் திரு.வி.க. நிர்வாகக் கூட்டங்களிலே இருந்து ஒவ்வொருவரையும் ஆங்கிலத்திலே சொற்களைச் சொல்லச் செய்து, தாம் அதை எளிய தமிழிலே விளக்குவார். இவ்வாறு செய்ததன் மூலம் இராஜாஜிக்கு தமிழை அறிமுகப்படுத்திவைத்தார் திரு.வி.க. தமிழர்க்கும் இராஜாஜியைப் புதிதாக அறிமுகம் செய்த வைத்தார். தமிழ்நாட்டு அரசியல் வாழ்க்கையிலிருந்து ஆங்கிலத்தை மறைந்தோடச் செய்த பெருமை திரு.வி.க.வையே சாரும். அவருடைய தமிழ்ப்பேச்சு, பிற்காலத்தில் பொதுமேடைப்பேச்சுக்களிலே ஆங்கிலமே கூடாது என்று வெருட்டிவிட்டது.

திரு.வி.க. பேசிய தமிழ், திருத்தமான நடைகொண்ட செம்மையான தமிழ். சொல்லமைப்பு, பொருளமைதி, வினைமுடிபு, கருத்தின் தொடர்ச்சி முதலியன யாவும் செம்மையாக அமையப்பெற்ற நடை. அவருடைய எழுத்திலும் இதே நடையையே கையாண்டார். அவருடைய பேச்சும் எழுத்தும் ஒன்றே. தமிழுக்குத் தலைமை தந்த

பெரியார் என்று மேடைகள் காலமெல்லாம் திரு.வி.க.வைப் போற்றும்.

°°°°°°°°

கருத்துச் சித்திரம் என்ற பகுதியிலேயே நேர் கண்டு எழுதுதலைச் சேர்க்க வேண்டும் (Interview Writing) அதற்கு ஓர் எடுத்துக்காட்டு:

பத்மபூஷன் விருதும் கோயங்கா விருதும் பெற்ற சிறந்த இதழியலாளர் என்.ராம் அவர்களோடு உரையாடுவதாக சற்றே மாற்றப்பட்ட இப்பகுதி அமைகிறது. இதற்கு உதவியாக இருந்தது சில ஆண்டுகளுக்கு முன் அவர் சுபமங்களா இதழுக்கு உண்மையில் அளித்த செவ்வி.

கேள்வி: தாங்கள் மரபுசார்ந்த குடும்பத்திலிருந்து வந்தவர். உங்கள் உள்ளத்தில் புரட்சிகரமான எண்ணங்கள் விதைக்கப்படக் காரணங்கள் உண்டா?

ராம்: 1967-68 இல் நான் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் இதழியல் துறையில் படித்துக் கொண்டிருந்தேன். வியட்நாம்போரில் அமெரிக்கா காரணமின்றித் தலையிட்டதையும் இளைஞர்கள் அங்கு பலியிடப்பட்டதையும் எதிர்த்து மாணவர்களும் மக்களும் போர்க்கொடி உயர்த்தினர். இன்னொருபுறம் நிறவேற்றுமைப் பிரச்சினை. கருப்பர்கள் உரிமைகளுக்காகப் போராட்டம் நடந்து வந்தது. அமெரிக்க ஏகாதிபத்தியம் எவ்வளவு கொடுமையானது என்று இந்த நிகழ்ச்சிகள் என் கண்களைத் திறந்துவிட்டன.

கேள்வி: திரும்பிந்த உடனே ‘இந்து’ பத்திரிகையின் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றீர்கள். இந்துவினுடைய மிதவாதக் கொள்கைக்கும் உங்கள் தீவிரப் பார்வைக்கும் ஏதாவது மோதல் இருந்ததா?

ராம்: நான் கொள்கைகளை நிர்ணயிக்கக்கூடிய நிலையில் அப்போது இல்லை. வியட்நாம் யுத்தத்திற்கு ஆதரவான நிலைப்பாட்டை ‘இந்து’ எடுத்தபோது நான் அதிர்ச்சியடைந்தேன். அதேபோலத் தஞ்சை விவசாயிகளைப் பற்றி நான் ஆய்வு செய்து எழுதியபோது பிரச்சினைகள் எழுந்தன. எடிட் செய்யப்பட்டே எனது கருத்துகள்

பிரசுரிக்கப்பட்டன. அப்போதெல்லாம் நான் தலையங்கங்கள் எழுதுவதில்லை. ‘இந்து’ நிர்வாகத்திற்கும் தொழிலாளருக்கும் பிணக்கு வந்த போது நான் தொழிற்சங்கம் பக்கமாகவே இருந்தேன். நிர்வாகம் அதிர்ச்சியுற்றது. இதேபோல், நெருக்கடிநிலையை ‘இந்து’ எதிர்க்கவில்லை. நான் எதிர்த்தேன். 1977இல் ஜனதா ஆட்சிக்கு வந்தபிறகு தலையங்கம் எழுத ஆரம்பித்ததோடு இணை ஆசிரியராகவும் ஆனேன். அப்போது கஸ்தூரி சீனிவாசன் ஆசிரியராக இருந்தார்.

கேள்வி: இந்தியப் பத்திரிகைத் துறையில் இந்திய அரசை உலுக்கி எடுத்த விஷயம் போஃபார்ஸ். ‘இந்து’ பத்திரிகையில் இதுபோன்ற விஷயங்களைத் தோண்டி எடுத்துக்கொண்டு வந்தது பெரிய ஆச்சரியம். இது சம்பந்தமாக உங்கள் போராட்டம் என்ன?

ராம்: போஃபார்ஸீக்கு முன்னாலேயே ஐ.எம்.எஃப் பற்றிய ஒரு பெருங்கதையை ‘இந்து’வில் நான் பிரசுரித்திருந்தேன். அறுநூறுகோடி டாலர் கடனுக்காக ஐ.எம்.எஃப் நிபந்தனைகளை இந்திராகாந்தி அரசு முற்றிலும் மறைக்கப்பார்த்தது. மறைக்க முயன்ற அந்த ஆவணங்கள் முழுவதையும் பொதுமக்கள் பார்வைக்கு நான் வெளிக்கொணர்ந்தேன்.

பீரங்கி விஷயத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்று தீர்மானித்தோம். இந்தியன் எக்ஸ்பிரஸும் இந்த விஷயத்தில் முயன்றது. டைம்ஸ் ஆப் இந்தியா போன்ற மற்றப் பத்திரிகைகள் இதில் ஆர்வம் காட்டத் தயாராயில்லை. சுவிட்சர்லாந்திலுள்ள சித்ரா சுப்பிரமணியத்தின் உதவியுடனும் ஹெல்சிங்கியிலுள்ள என் நண்பர் வி.கே.இராமச்சந்திரன் உதவியுடனும் நான் தகவல் சேகரிக்க முயன்றேன்.

இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிக்கைக்காரர்கள் இதில் அமிதாப்பச்சன் சம்மந்தப்பட்டிருப்பார் என்று அனுமானித்துக்கொண்டு தொடங்கினார்கள். அந்த விசாரணை தவறாகப்போய்விட்டது. எங்களுக்கு ஆலடி அருணா நல்ல உதவியைச் செய்தார். பிட்கோ சங்கம் லிமிடெட் என்ற பெயரில் ஹிந்துஜா பெற்ற பணம் விவரங்கள் எல்லாம் ‘இந்து’வில் வெளிவந்தன. 1988 ஏப்ரலிலும் ஜூனிலும் நூற்றுக்கணக்கான ஆவணங்கள் பிரசுரித்தோம். ஆர்ட்போ டயரிக்

குறிப்புகள் அவருடையதுதானா எனத் தீர்மானிக்க நான் ஸ்வீடன் சென்றேன். ‘இந்து’ பத்திரிகை வெளிவருவதைத் தடுக்கப் பல முயற்சிகள் நடந்தன. சி.பி.ஐ. என்னிடமுள்ள ஆவணங்களையெல்லாம் பறிமுதல் செய்ய முயன்றது. கோர்ட்டில் வழக்கு பதிவு செய்தேன் அதன் பின்னர் சில பகுதிகளை ‘இந்து’ பிரசுரிக்க மறுத்ததும் ஆசிரியருக்கும் எனக்கும் ஏற்பட்ட மோதல்களும் நீங்கள் பலர் இதை மறந்தே போய்விட்டார்களே?

மக்கள் உணர்வில் ஒரு பாதிப்பு ஏற்படுத்துவது என்பது ஒரு எளிமையான காரியம் இல்லை. வேறுபல அமைப்புகளும் உதவி செய்ய வேண்டும். உடனடியாக இல்லாவிட்டாலும் நாள் சென்றாவது பலனைக்கொடுக்கும். ஆனால், எழுதும் விஷயத்தில் நம்பகத்தன்மை நிச்சயம் வேண்டும்.

கேள்வி: பத்திரிகைகள் சில சமயம் உண்மைகளை எழுதுகின்றன. பல சமயங்களில் பரபரப்புத் தன்மையை ஏற்படுத்திவிடுகிறார்கள். இது அவசியமா?

ராம்: மக்களைச் சென்றடையவேண்டும் என்பதற்காகவும், வியாபாரத்திற்காகவும் பரபரப்புடன் விஷயத்தைக் கொடுக்கலாம். ஆனால் உண்மையாக இல்லாமல் வெறும் பரபரப்பு மட்டுமிருந்தால் அந்தப் பத்திரிகை மக்களால் நிராகரிக்கப்பட்டுவிடும்.

கேள்வி: தமிழ் நாளிதழ்கள் பற்றி உங்கள் கணிப்பு என்ன?

ராம்: எனக்கு ஏமாற்றமே மிஞ்சுகிறது. அவை விரிவாக இன்னும் பலதளங்களில் தமது பங்கினைச் செலுத்தவில்லை. மலையாள, ஆந்திர, கன்னடப் பத்திரிகைகள் போல நமது இதழ்கள் இல்லை. தினமணி ரொம்பவும் கன்சர்வேடிவ்வாகப் போய்விட்டது. மற்ற எந்த இதழும் திருப்தி அளிக்கவில்லை.

கேள்வி: பத்திரிகைகள் எப்படி இருக்க வேண்டும்?

ராம்: மூன்று விஷயங்கள் ஒரு பத்திரிகைக்குத் தேவை என நினைக்கிறேன். 1. நம்பகத் தன்மை. 2. செய்திகளின் பின்புலத்தில் உள்ள விஷயங்களை அலசுவதும் அந்தச் செய்திபற்றிப்

பத்திரிகையின் கணிப்பும். 3. அதை அமைப்பதில் (லே அவுட்) உள்ள அழகுத் தன்மை.

கேள்வி: தமிழ்ப்பண்பாட்டுச் செய்திகளை ஆங்கில இதழ்கள் எழுதுவதில்லை. தமிழர்களைப் பற்றி எழுதுவதால் தரம் இறங்கிவிடும் என்று நினைக்கிறீர்களா?

ராம்: தமிழில் நடைபெறும் கலை இலக்கிய விஷயங்களை ஆங்கிலத்தில் எழுதிக்கொடுக்கச் சரியான நபர் எங்களுக்குக் கிடைப்பதில்லை.

கேள்வி: சரியான நபர்களைத் தேடிக் கண்டுபிடிக்கமாட்டீர்களா?

ராம்: அந்த சிரமத்தை நாங்கள் எடுத்துக்கொள்வதில்லை. வங்காளத்திலிருந்தும் மராட்டியிலிருந்தும் தானாக வருவதுபோல இங்கும் வந்தால் நாங்கள் வெளியிடுவோம்.

கேள்வி: சோவியத் ரஷ்யா சிதறுண்ட பிறகு கம்யூனிச இயக்கத்தின் எதிர்காலம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ராம்: ரஷ்யாவின் தோல்வி கம்யூனிசத்தின் தோல்வியல்ல. கியூபாவிலும், சீனாவிலும் நம்பிக்கையூட்டும் வகையில் பொதுவுடைமை முன்னேறுகிறது. ஆண்டுக்கு 10 சதவீதம் வளர்ச்சியைச் சீனமக்கள் காட்டுகிறார்களே? உலக கம்யூனிச இயக்கத்தின் வளர்ச்சியை நான் உற்சாகத்துடன் நம்புகிறேன்.

கேள்வி: இந்தியா பலதேசிய இனங்களின் கூட்டமைப்பு என்ற கொள்கையிலே உங்களுக்கு உடன்பாடு இல்லையா?

ராம்: இந்தியா என்பது என்ன என்பதில் அரசியல்வாதிகளுக்குத் தெளிவில்லை. இந்தியா நிச்சயமாக ஓர் இடத்திலிருந்து மட்டும் ஆளக்கூடிய தேசமல்ல. இரும்புக் கரங்கள் கொண்டு ஆட்சி செய்தால் இந்தியா சிதறிவிடும். மாநிலங்களுக்கு தற்போது சுதந்திரமாக ஆட்சிசெய்ய அதிகாரங்கள் நிறைய வழங்கப்படவேண்டும்;

கேள்வி: இம்மாதிரி கூட்டமைப்பில் இந்தியா சிதறிப்போக வாய்ப்பிருக்கிறது அல்லவா?

ராம்: இல்லை. தேசம் சிதறிப்போக ஃபெடரல் அமைப்பு காரணமாகாது. வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், மதஅடிப்படைவாதம், ஜாதிக்கொடுமைகள் இவையெல்லாம்தான் வலுவான காரணங்களாக அமையும்.

கேள்வி: சீனாவில் மத்திய ஆட்சி சாத்தியமாகிறபோது, இந்தியாவில் அது சாத்தியம் இல்லையா?

ராம்: இல்லை. திபேத் தனியாக ஆட்சிசெய்யப்படுகிறது. ஷாங்காய் தனியாக ஆட்சி செய்யப்படுகிறது. மாநில சுயாட்சி படிப்படியாக அமுலுக்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. மேலும் சீனாவில் மொழிப்பிரச்சினை இல்லை. 95 சதவீதம் மக்கள் மாண்டரின் பேசுகிறார்கள்.

கேள்வி: ஈழப்பிரச்சினை பற்றி?

ராம்: தனிஈழம் கோரிக்கையை நான் ஆதரிக்கவில்லை. சிங்களரால் கொடுமைகள் நடந்தது உண்மைதான். தமிழ்ப்பிரதேசங்களில் சிங்களர்கள் குடியேற்றப்பட்டதும் உண்மைதான். இப்போது நடந்த போராட்டங்களுக்குப் பிறகு ஸ்ரீலங்கா அரசு பல உண்மைகளைப் புரிந்து கொண்டிருக்கிறது. எனவே ஸ்ரீலங்காவின் ஒரு பகுதியாகவே ஈழத்தமிழர்கள் வாழவேண்டும்.

கேள்வி: ஏகாதிபத்தியம் என்பது எப்படிச் செயல்படுகிறது என்று நினைக்கிறீர்கள்?

ராம்: நாம் கடனைத் திருப்பிக் கொடுப்பதில் பின் தங்கியிருக்கிறோம். அதனால் நம்மீது பொருளாதார நெருக்கடிகள் உருவாக்கப்படுகின்றன. இது ஒரு பக்கம். நாம் நலிந்திருக்கும்போது ஐ.எம்.எஃப், உலகவங்கி போன்ற நிறுவனங்கள் உதவிக்கு வருகின்றன. ஆனால் நாம் பலவித சமரசங்களுக்குள்ளாக நேர்கிறது. எல்ஸ்டிங் குரல் கொடுத்தது போல எதிர்ப்புக்குரல் கொடுக்க நம்மால் முடியவில்லை. நமது நாட்டு பேடண்ட் சட்டத்தை திருத்தச் சொல்லி டங்கல் அறிக்கை வற்புறுத்துகிறது. இந்தியா மலிவான விலையில் மருந்துகள் தயார் செய்யமுடியும் என்றாலும் ஏகாதிபத்தியங்கள் விடுவதில்லை. பேடண்ட்டுகளுக்கு உரிமைப்பணம் கேட்கிறது. மருந்து விலையும் கூடுகிறது. அணு ஆயுத முயற்சிகளுக்குத்

தடைவிதிக்கிறது. செயற்கைக்கோள் விடுவதில் நாம் முன்னேற்றம் கண்டிருக்கிறோம். இந்த முன்னேற்றத்தைத் தடைசெய்ய விரும்புகிறது அமெரிக்க ஏகாதிபத்தியம். ரஷ்யாவிலிருந்து சாதனங்கள், ஆலோசனைகளைப் பெறத் தடை விதிக்கிறது. இன்னும் பலவகைகளில் ஏகாதிபத்தியத்தின் கோரப்பிடியில் நாம் சிக்கிக்கொண்டிருக்கிறோம்.



பல சித்திரக் கட்டுரைகள், வாசகர்களைக் கவர்வதற்கு மானிட ஆர்வத்தையோ, உணர்வுகளையோ பயன்படுத்துகின்றன. (திடீர்ச் சம்பவங்கள், சோகம், பரிவுணர்ச்சி, நகைச்சுவை போன்றவை). நல்ல இதழ்க்கட்டுரைகளில் இவற்றோடு கனமான தகவல்கள், விவரங்கள், திறன் வாய்ந்த அலசல் ஆகியவையும் சேர்ந்திருக்கும்; கற்பனைவளம் கூடிய விவரணையும் காணப்படும்.

மக்கள்தொடர்பு அலுவலர்கள், தங்கள் நிறுவனங்களைப் பற்றிய தகவல்களைப் பொதுமக்களுக்கு வெளிப்படுத்தப் பெரிதும் நம்புவன சித்திரக்கட்டுரைகளே. ஒரே நிறுவனத்திற்குள்ளாகவே தகவல்களை அளிக்கவும், தங்களுடையது என்னும் உடைமை உணர்ச்சியை உருவாக்கவும், சித்திரக்கட்டுரைகள் நல்ல கருவிகள். கட்டுரைகள், கற்பனைக்கு விருந்தாகக்கூடியவை; அவற்றின் சம்பவக்கோவைகள் அவற்றை நினைவில் நீங்காது நிறுத்திவிடக் கூடியவை.

## கருத்துச் சித்திரங்களின் முக்கியத்துவம்

முன்பிருந்த தலைமுறையினரைவிட இந்தத் தலைமுறையினர் படித்தவர்களாகவும் பல இடங்களுக்குச் சுற்றுப்பயணம் செய்து அனுபவம் பெற்றவர்களாகவும் உள்ளனர். கம்ப்யூட்டர் தொடங்கிப் பல புதிய சாதனங்களோடு தொடர்பு கொண்டுள்ளனர். தாங்கள் அமைத்துக்கொண்ட இந்த வழ்க்கைமுறைப்படி நடத்தவே அவர்களுக்கு அன்றாடம் அதிகத் தகவல்கள் தேவைப்படுகின்றன. வெறும் மெய்ம்மைகளை அதே சமயம் எவரும் விரும்புவதில்லை; வெறும் தகவல்களும் நிகழ்ச்சிகளும் பயனற்றவை நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ளவும், அவற்றிற்கு அர்த்தம் என்ன என்று அறிந்துகொள்ளவும், அவை தங்களை எப்படிப் பாதிக்கும் என

அறியவும் அவர்கள் ஆசைப்படுகின்றனர். ஒரு செய்தி மட்டும் போதாது: செய்தியின் பின்னணி, அதன் முக்கியத்துவம் ஆகியவை மக்களுக்குத் தேவை. செய்தி நிகழ்ச்சிகள் யாரைப் பாதிக்கின்றன, அந்தச் செய்திகள் எப்படிப் பெறப்பட்டன, அவை குறித்து அந்த எழுத்தாளரின் உணர்வுகள் என்ன என்பன போன்ற தகவல்களையும் மக்கள் அறிந்துகொள்ள ஆசைப்படுகிறார்கள். இந்த இலக்குகளை வெறும் செய்திக் கட்டுரைகளால் நிறைவேற்ற இயலாது. இவற்றை அடையவே கருத்துச் சித்திரங்கள் அல்லது சித்திரக் கட்டுரைகள் உதவுகின்றன.

சித்திரக்கட்டுரைகளில் அகநோக்கும் (Subjectivity) புறநோக்கும் (Objectivity) சமமாக ஒன்றுபடுகின்றன. இவற்றில் பெயர் வரி உண்டு. பெயர் வரி இருப்பது ஒன்றே, சாதாரணச் செய்தியமைப்பை இக்கட்டுரை மீறுகிறது என்று தெரிவிக்கப் போதுமானது.

அறிவினைத் தூண்டும் துணுக்குகளும் தகவல்களும் போதுமானவையல்ல. வாசகரின் உணர்ச்சித் தேவைகளும் நிறைவு செய்யப்படவேண்டும். மெய்ம்மைகளையும் உணர்ச்சிகளையும் ஒன்றிணைத்து ஒரு பரந்த நோக்கில் வாசகர்கள் செய்தியைக் காணவைக்க கருத்துச் சித்திரங்கள் உதவுகின்றன.

## கருத்துச் சித்திரங்களின் அமைப்பு

தலைகீழ்ப் பிரமிடு அல்லது தலைகீழ் முக்கோணமுறை செய்திக் கட்டுரையின் அடிப்படை வடிவம். ஆனால் இந்த அமைப்பு இதழ்க்கட்டுரை எழுத உதவாது. ஒரு கட்டுரை வடிவம் அல்லது சிறுகதை வடிவம் என்பதே சித்திரக்கட்டுரையின் வடிவமாகும். ஒரு அறிமுகப்பகுதி, பிறகு வளர்ச்சிப்பகுதி, இறுதியாக முடிவு அறிமுகப்பகுதி, செய்தியடிப்படையைத் தருவதாக இருக்கும். அறிமுகப் பகுதியில் சொல்லப்பட்ட செய்தியை வளர்ச்சிப் பகுதி விரிவாக அலசுகிறது. அது கொஞ்சங்கொஞ்சமாக ஒரு உச்ச கட்டத்திற்கு இட்டுச் செல்லலாம். கட்டுரையின் மிக முக்கியப் பகுதி இதுதான். முடிவுப்பகுதி, விவரிக்கப்பட்ட செய்தியை தக்கவாறு முடிக்கிறது அல்லது விவாதங்களைத் தொகுத்துத் தருகிறது. சிறுகதை போலவே இதிலும் இறுதியில் ஒரு முடிச்சு (Twist ) எனப்படும்

திருப்பம் தரப்படலாம், ஆனால் இது வரையறுக்கப்பட்ட ஒரு விதியல்ல.

உங்களிடம் என்ன தகவல்கள் இருக்கின்றன, அதை வைத்து நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள் என்பதே இதழ்க்கட்டுரையின் வடிவத்தை வரையறுக்கும். சில சமயங்களில் கால முறைப்படி செய்தியை நேராக விளக்கிச் சொல்ல நேரிடும். சில சமயங்களில் செய்திக் கட்டுரைப் போக்கில் எழுதத் தொடங்கிப் பிறகு ஆசிரியர் சித்திரக் கட்டுரைப் போக்கிற்கு மாறிக் கொள்வதுண்டு. சில சமயங்களில் எந்தவொரு அமைப்பிலுமே கருத்துச் சித்திரம் அடங்குவதாகத் தோன்றுவதில்லை.

சித்திரக் கட்டுரைக்கு அடிப்படை அதன் கருப்பொருள் அல்லது விஷயம்தான். அதை வளர்த்துச் செல்லும்போது, உருவாகின்ற கதைப்போக்கு, ஒரு பார்வைக் கோணத்தை (Point of view or Angle) முக்கியமாக அளிக்கிறது. என்ன விவரங்களைத் தேர்ந்தெடுத்து வாசகர்கள் முன் தர எழுத்தாளர் நினைக்கிறார், எந்தக் கருத்துகளை முதன்மைப்படுத்துகிறார், எவ்வித முடிவுகளுக்கு இட்டுச் செல்கிறார் என்பதே பார்வைக் கோணம் என்பதன் அடிப்படை.

பல சமயங்களில் தலையங்கங்கள் போதனையாகவோ எச்சரிப்புகளாகவோ அமைந்துவிடலாம். தலையங்கம் வாசகர்களுக்கு சில மெய்ம்மைகளை எடுத்துக்காட்டும் ஆனால் வாசகர்களுக்கு அவற்றைப் போதிய அளவுக்கு விளக்க, ஆசிரியவுரையில் இடம் இருப்பதில்லை. இப்படிப்பட்ட சமயங்களில் சித்திரக்கட்டுரைகள் கை கொடுக்கின்றன. ஒரு கருத்துச் சித்திரம், போதிய சான்றுகளை முன்வைத்தது விளக்கி, வாசகர்கள் தாங்களாகவே முடிவுகளை நோக்கிச் செல்லுமாறு செய்கிறது.

ஒரு நல்ல சித்திரக்கட்டுரை என்பது ஒரு கருத்தினை நல்ல முறையில் எடுத்துரைப்பது; சொற்சித்திரம்; கதை சொல்லல்; அது நல்லதொரு இலக்கியவகையும்கூட. ஓர் இலக்கியக் கட்டுரையில் இயல்போ, ஒரு அமைப்போ இயல்பாக ஒரு சித்திரக் கட்டுரையில் பொருந்திவிடுகிறது.

**ஒரு கருத்துச் சித்திரக் கட்டுரை (தகவல் சித்திரம் இது)**

## ஓவியர் உருவாகிறார்

இந்திய அளவிலான ஓவியக் கண்காட்சி முக்கியத்துவம் கொண்டது. அனைத்து மாநிலங்களும் பங்கேற்கும் போட்டி வலுவாய் அமையும். கல்கத்தாவில் (1987) நடந்த ஓவியப் போட்டியில் ‘பலி’ (விக்டிம்) என்ற ஓவியத்திற்காகப் பரிசினையும் பாராட்டுதல்களையும் பெற்றவர் கு. புகழேந்தி.

எம். எச். உசேன் நடுவராகவும், ஷபனா ஆஸ்மி பரிசு வழங்கவும், மிருணாள் சென், மாதவராவ் சிந்தியா ஆகியோர் விழா முக்கியஸ்தர்களாகப் பங்கேற்ற இச்சூழலில் புகழேந்தி பரிசு பெற்ற போது வயது 19.

தஞ்சாவூர் அருகில் தும்பத்திக் கோட்டையில் பிறப்பும் கும்பகோணம் ஓவியக் கல்லூரியில் படிப்பும் கொண்ட புகழேந்தி, தந்தையின் ஊக்குவித்தலை மூன்றாம் வகுப்பிலிருந்தே பெற்றவர். டாக்டர், இன்ஜினீயர், அரசாங்க அலுவலர் என அலையும் நிலையில் ஓவியனாக வரவேண்டுமென விரும்பிய ஏழை விவசாயியின் மகன் இவர். இவரது ஓவியங்கள் அனைத்துக் கண்காட்சியிலும் தனித்தன்மையோடு விளங்கின.

கல்லூரி செல்கையில் உயிரோடும், திரும்புகையில் பிணமாகவும் கிடந்த ஒருவரின் சோக நிகழ்ச்சிதான் ‘பலி’யாக உருவாயிற்று. பலி-பல சிந்தனைகளுக்கு இடமளித்தது. சமூகப் பலியா, மதப் பலியா, அரசியல் பலியா? சமூகத்தைப் பாதிக்கிற நிகழ்ச்சிகள்தான் இவரது ஓவியங்கள். இவ்வகையில் பலி, ஆர்மீனிய பூகம்பம், ஜனநாயகப் படுகொலை 356, நெல்சன் மண்டேலா, ஈழப் படுகொலைகள் குறிப்பிடும்படியானவைகள்.

சமூகப் பாதிப்புகளின் பிரதிபலிப்புக்காக அகில இந்தியப் பரிசு, நுண்கலைக் குழு விருது, லலித்கலா அகாதெமி விருது, இண்டர்நேஷனல் ஏர்போர்ட் அதாரிடி விருதுகளைப் பெற்றவர். இவரது ஓவியங்கள், சென்னை, தஞ்சாவூர், மதுரை ஆகிய இடங்களில்-ஓவியக் கண்காட்சிகளில் இடம் பெற்றுள்ளன. புரியாத பாலுணர்வு, வறுமையின் கோரங்கள், பசி, பொய்யர்களின் புரட்டு, சுரண்டல்களின் கொடூரம், கனவுகள்-இவரது ஓவியங்களின் கருக்கள்.

தமிழகத்திற்கு இவரது ஓவியங்கள் புதியன. பாதிப்புகளை உருவாக்க வல்லன. சிந்தனைகளைத் தோற்றுவிப்பன. நம்மை நாமே கண்டு வேதனை கொள்ளச் செய்வன. மௌனமாய் நம்முள் ஆழமாய் வேர்விடும் உணர்வுகளைத் தோற்றுவிப்பன.

ஓவியர்கள், ஓவியங்கள் பற்றி கு. புகழேந்தி சொல்வது: "சமுதாயக் கண்ணோட்டத்தோடு ஆதிமூலம், வீர, சந்தானம், மருது, பாஸ்கரன், அல்போன்ஸோ, சந்தானராஜ், வித்யாசங்கர், பி. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் காணப்படுகிறார்கள். கூடி மகிழ, விற்பனைக்காக மட்டும் பல கண்காட்சிகள் நடக்கின்றன. ஓவியர்கள், ஓவியங்களின் விளைவுகளைப் பற்றிக் கவலை கொள்ளாமல், விலையைப் பற்றியும், பத்திரிகைகளின் புகழாரங்களைப் பற்றியுமே கவலை கொள்கிறார்கள்.

"ஓவியம் ஒரு ஆயுதம் போன்றது. மக்களிடம் எழுச்சியை உண்டாக்கக் கூடியது. ஓவியங்களின் வண்ணங்கள், கோடுகள், இடம், காட்சிரூபங்கள் சக்தி வாய்ந்தவை. அது பயன்பாட்டின் நேர்த்தியைப் பொறுத்து அமைகிறது."

-சி. அண்ணாமலை, கலைமணி

(தினமணி) 6-9-1991

## பத்தி எழுத்தாளர்கள் (Columnists)

மேலைநாடுகளில் எட்டுப்பேர்-பத்துப்பேர் என்று நல்ல பத்தி எழுத்தாளர்கள் ஒன்று சேர்ந்து ஓர் அமைப்பாகச் செயல்படுவர். இவர்களை 'சிண்டிகேட் எழுத்தாளர்கள்' (கூட்டுப் பத்தியாளர்கள்) என்பர். இவர்கள் ஏற்கனவே பல பத்திரிகைகளில் எழுதிப் புகழ் பெற்றவர்களாக இருப்பார்கள். இவர்களை ஒட்டுமொத்தமாக ஒரு பத்திரிகையாளர் தமது பத்திரிகைக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். பல்வேறு விஷயங்களில் ஆர்வமும் பல்வேறு தனித்தன்மைகளும் கொண்டவர்களாக இவர்கள் இருப்பதால், எந்த ஒரு விஷயத்தையும் இவர்களை எழுதச் சொல்லிக் கேட்க முடியும். உதாரணமாக, இந்தியப் பொருளாதாரம் என்று கொண்டால், இந்தக் குழுவில்

பொருளாதாரம் பற்றி நன்கு ஆராய்கின்ற வல்லுநர் எவரோ, அவர் மொத்தக் குழுவின் சார்பாகக் கட்டுரையை எழுதித் தந்துவிடுவார்.

சிண்டிகேட் எழுத்தாளர்களைப் பயன்படுத்துவது பற்றிக் கடுமையான விமரிசனங்கள் எழுந்துள்ளன.

பெரும்பாலும் அவர்கள் ஒரேமாதிரியான அல்லது ஒரே விஷயத்தைப் பற்றியே எழுதுகிறார்கள்;

பெரும்பாலும் அவர்கள் யாவரும் தலைநகரையோ அல்லது பெருநகரங்களையோ சார்ந்தவர்களாக இருக்கிறார்கள். (ஆகவே நாட்டுப்புற மக்களுடைய பிரச்சினைகள் பற்றி அதிகம் அறியாதவர்களாக உள்ளனர்);

அவர்களது பார்வைக்கோணம் என்னவாக இருக்கும் என்பதை முன் கூட்டியே சொல்லிவிட முடிகிறது; (அதாவது ஒரே மாதிரி பார்வைக் கோணத்திலேயே அதிகம் எழுதுகிறார்கள்);

அவர்களது கட்டுரைகள் உரிய நேரத்தில், நாளில் கிடைப்பதேயில்லை: தாமதமாகிறது:

அவர்கள் எழுதும் பத்திகள் யாவும் ஒரே அளவு நீளம் கொண்டவையாக இருக்கின்றன-அதுவும் உரிய பக்கங்களுக்கு எப்போதுமே அதிகமாக!

அவர்கள் குழுவாக இருந்து பல்வேறு துறைகளில் தகவல்களைத் திரட்டி வைத்திருப்பினும், அப்படிப்பட்ட தகவல்களிலும் எப்போதேனும் தவறுகள் நேர்ந்துவிடுகின்றன.

இவையாவும் சிண்டிகேட் எழுத்தாளர்கள் மீது கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள்.

ஆனால் இத்தனை குறைகள் கூறப்பட்ட போதிலும் அவர்களைத் தவிர்க்க இயலாது என்பதை மேலைநாட்டுப் பத்திரிகைகள் ஒப்புக் கொண்டுள்ளன.

முதல் முக்கியக் காரணம், அதிரடிச் சம்பவங்களோ செய்திகளோ இல்லாத சாதாரண நாட்களில் அவர்கள் பத்திரிகைகளில் பல்வேறு விஷயங்கள் பற்றி எழுதுகின்றார்கள்; அவர்களை வேலை கொள்வதில் செலவு குறைவு.

சில முக்கிய எழுத்தாளர்கள் தங்கள் எழுத்தினால் மிக கௌரவம் வாய்ந்தவர்களாக உள்ளனர்; அவர்கள் தங்கள் பத்திரிகைக்காக எழுதுகிறார்கள் என்பதே தனிச் சிறப்புக்குரியதாகும். பத்திரிகையின் பெயர் பரவும்.

சிண்டிகேட் எழுத்தாளர்களுள் ஒரு சிலர், மிகச் சிறப்பாகத் தங்களை நாட்டத்திற்குரிய விஷயத்தைப் பற்றிய தகவல்கள் அனைத்தையும் திரட்டி, ஆராய்ந்து, அவற்றை மிக இனிய, தனித்துவம் வாய்ந்த நடையில் எழுதி, வாசகர்களைக் கவரக் கூடியவர்களாக இருக்கின்றனர். அவர்கள் அளவு நடைச் சிறப்பு, பொதுவாகப் பிற பத்திரிகை எழுத்துகளில் காணப்படுவதில்லை.

மேலும் தங்கள் தங்கள் விஷயங்களில் அவர்களுக்கு ஆழமான அறிவு இருப்பதால், ஒரு வாசகனை மிக எளிய நிலையில் இருந்து படிப்படியாக உயர்த்திச் சென்று உரிய தகவல்களைத் தர அவர்களுக்கு இயலுகிறது. திடீரென ஓர் அறிமுகமற்ற எழுத்தாளர், ஒரு வாசகருக்கு அறிமுகமில்லாத துறைபற்றி அறியாத தகவல்களைத் தருவதனால் ஏற்படும் மிரட்சியும் பயமும் இங்கு தவிர்க்கப்பட்டு, ஆறுதலும், சௌகரியமும் வாசகனுக்கு விளைகின்றன.

எல்லாவற்றிற்கும் மேலாக, பத்திரிகைத் தொழிலிலேயே காலங்காலமாக இருக்கும் ஆசிரியர்களும் எழுத்தாளர்களும் தொட அஞ்சும் எத்தனையோ விஷயங்களைப் பற்றித் தயக்கமின்றியும் தைரியமாகவும் கூர்மையாகவும் எழுதவல்லவர்களாகப் பத்தியாளர்கள் இருக்கின்றார்கள்.

மேலும் பத்தி எழுத்தாளர்களைப் படிக்கும் வாசகர்கள், அவர்களை தங்களைப் போன்ற சாதாரண மனிதர்களாகவே கருதி அவர்களது கருத்துகளை ஆர்வத்துடன் படிக்கின்றனர்; பத்திரிகை ஒரு நிறுவனம்-

மிகப் பெரிய நிறுவனம் என்னும்போது ஏற்படும் பிரமிப்பு, இவர்களிடம் வாசகர்களுக்கு ஏற்படுவதில்லை.

பத்தி எழுத்தாளர்களைப் பயன்படுத்துவதனால் இம்மாதிரி ஒரு சில குறைபாடுகள் இருப்பினும், ஏராளமான நன்மைகள் இருக்கின்றன, ஆயினும் ஒரு பத்திரிக்கை ஆசிரியர் ஒரு விஷயத்திற்கு ஏற்ற தக்க கட்டுரையாளர்களைத் தேர்ந்தெடுப்பது மிகக் கடினமானது. ஒரு முறை வாஷிங்டன் போஸ்ட் ஆசிரியர் சொன்னார்: "தக்க எழுத்தாளர்களை ஒரு பத்திரிகையாளர் தேர்ந்தெடுப்பது என்பது ஒரு மனைவியைத் தேர்ந்தெடுக்கிற மாதிரி".

வேடிக்கை என்னவென்றால், அமெரிக்கா போன்ற நாடுகளில், ஒரு குறிப்பிட்ட எழுத்தாளரோ, அல்லது எழுத்தாளர் குழுவோ, வேறு பத்திரிகைகளுக்கு எழுதப் போய்விடக் கூடாது என்பதற்காகவே அவர்களைப் பணிக்கு அமர்த்திக்கொள்பவர்களும் உண்டு.

## உடன்-எதிர் அணுகுமுறை (Pro-con Approach)

1970களில், மிகுந்த பொறுப்புணர்ச்சியோடு பொது விஷயங்களை பத்திரிகைகள், அணுக வேண்டும் என்னும் உணர்வு ஏற்பட்டது. அதன்மூலம் தங்கள் பத்திரிகை மீதான நம்பிக்கைத் தன்மையைப் பெருக்கவேண்டும் என்று பத்திரிகையாளர்கள் உணரத் தொடங்கினார்கள். ஆகவே பிரச்சினைகளை அலசுவதில், உடன்-எதிர் அணுகுமுறையினைக் கையாள வேண்டும் என்னும் எண்ணம் பெருகியது. உடன்-எதிர் என்பது உடன்பாட்டு-எதிர்மறை என்பதன் சுருக்கம். இது ஆங்கிலத்தில் 'Pro-con Approach' எனப்படுகிறது. அமெரிக்காவில் இதை ஓர் இயக்கமாகவே வெயின்ட் பீட்டர்ஸ்பெர்க் டைம்ஸ் என்ற பத்திரிகை நடத்தியது. அதன் ஆசிரியர் ராபர்ட்பிட்மன், டைம்ஸ் இதழ் எவ்விதம் 'உடன்-எதிர்' அணுகுமுறையைத் தனது தலையங்கங்களில் கையாளுகிறது என்பதை விளக்கினார். இதை விளக்கும், உடன்-எதிர் அணுகுமுறையைப் புரிந்து கொள்ள உதவும். இதன்படி,

1. எடுத்துக் கொண்ட பிரச்சினையை, நேரடியாக, புறவயத்தன்மையோடு அணுகுகின்ற ஒரு கேள்வியாக வடிவமைத்தல் வேண்டும்.

2. பிரச்சினையின் அறிமுகமும், அதை ஆசிரியர் எவ்விதம் அணுகப்போகிறார் என்பது பற்றிய அறிமுகமும் தரப்படவேண்டும்.

3. எடுத்துக்கொண்ட பிரச்சினைக்கு ஆதரவான வாதங்களையும், எதிரான வாதங்களையும் ஏறத்தாழ, நேரடியாக ஒன்றுக்கொன்று மோதுமாறும், சமப்படுத்துமாறும் அமைத்துக்காட்டுதல் வேண்டும்.

4. பிரச்சினையும் அதன் ஆதரவு வாதங்களும், எதிரான விவாதங்களும் முன் வைக்கப்பட்டுவிட்டதால், தலையங்கம் சுருக்கமானதாகவும் செறிவானதாகவும், வலுவானதாகும் அமைக்கப்படுதல் வேண்டும்.

5. வாசகர்கள் ஒரு குறித்த பிரச்சினையைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிய அவர்களுக்கு ஒரு 'கூப்பனை' அனுப்புதல் தேவை. அதில் அவர்கள் தங்கள் கருத்தினை எடுத்துரைக்கப் போதுமான இடமிருக்கவேண்டும்.

6. அந்தப் பிரச்சினைக்கான பின்னணியை விளக்குதல் அவசியம். அது ஒரு தனிக்கட்டுரை வாயிலாக அளிக்கப்படலாம். தேவைப்பட்டால் அதனுடன் படங்கள், வரைபடங்கள் முதலியவை இணைக்கப்படவேண்டும்.

அந்தத் தலையங்கத்துக்கும், பின்னணிக் கட்டுரைக்கும் பொருத்தமான படங்கள் தரப்படுதல் வேண்டும்.

விஷயத்தின் கனத்தைப் பொறுத்து, வாசகர்களின் எதிர்வினை 4500 முதல் 1000 வரை இருந்தது என்று டைம்ஸ் பத்திரிகை தெரிவித்தது. அதிபர் நிக்சனை வாடர்கேட் ஊழலின்போது பதவியிலிருந்து இறக்குவதா, ராஜிநாமா செய்ய வைப்பதா என்ற கேள்வி எடுத்துக் கொள்ளப்பட்டபோது, 4572 எதிர் வினைகள் அதிகபட்சமாகக் கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது.

உடன்-எதிர் அணுகுமுறைக்குப் பிற அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் சிலர் எதிர்ப்பும் தெரிவித்தார்கள். இது 'ஒரு பத்திரிகை தனது பொறுப்பைக் கைகழுவிவிடுவது' என்று குறை கூறினார்கள்.

இக்குற்றச்சாட்டு தவறு என்றார் பிட்மன்.

ஏனெனில் உடன்-எதிர் அணுகுமுறை. வாசகர்களைச் சிந்திக்க வைக்கிறது; அவர்களைக் கருத்தேற்புக்கு உட்படுத்துகிறது; மேலும் மிகச் சக்தி வாய்ந்த தலையங்கம் எழுத உதவியாக இருக்கிறது என்பது அவர் கருத்து.

இரண்டாவதாக, ‘அந்த அணுகுமுறை, பிரச்சினைகளை எளிமைப்படுத்தி விடுகிறது’ என்ற குற்றச்சாட்டு எழுந்தது. ‘முறையான, முழுமையான விவாதம் எழுப்பப்படவில்லையென்றால் அப்படித்தான் ஆகும்’ என்றார் பிட்மன்.

மூன்றாவதாக, ‘ஒரு பிரச்சினையின் எல்லாக் கோணங்களையும் ஆராய்ந்து, எதிரெதிர் வாதங்களாக அவற்றை உருவாக்கித் தந்து எழுதக் கூடியவர் யார்!’ – என்னும் வினாவும் எழுந்தது. ‘ஆசிரியர் குழுவிலுள்ள யாரேனும் ஓர் ஆசிரியர் தனிப்பட்ட பல சமயங்களில், ஒரு பிரச்சினையை ஆழமாக ஆராய்ந்து எழுதலாம்; சில சமயங்களில் குழுவினரே பகுதிபகுதியாக உழைத்து ஆசிரியவுரையை உருவாக்கலாம்’ என்று விடையிறுத்தார் பிட்மன்.

இதற்குப் பிறகு உலகமுழுவதும் பல பத்திரிகைகள் இந்த அணுகுமுறையைப் பின்பற்றத் தொடங்கின. வாசகர்களுடைய கருத்துகள் தொகுக்கப்பட்டு, அடுத்த வாரத்தில் ஒருநாள், முழுமையாக விவாதிக்கப்பட்டன. தமிழில் தினமணி இதழ் இப்படிப்பட்ட அணுகுமுறையைச் சில ஆண்டுகள் பின்பற்றியது. கூப்பன்கள் வழங்கப்படவில்லை என்றாலும், ஏதேனும் ஒரு பிரச்சினை எழுப்பப்பட்டு, அதுபற்றி தலையங்கம் வரையப்பட்டது; பிறகு வாசகர்கள் அதன் பல்வேறு அம்சங்களைப் பற்றித் தங்கள் கடிதங்களில் (மக்கள் மேடை) எழுதினார்கள். சில சமயங்களில் ஆசிரியரது தொகுப்புரையுடனும் குறுக்கீட்டுடனும் விவாதம் முடிவுற்றது.

சில பத்திரிகைகள், கட்டுரை எழுத்தாளர்களையே எதிரெதிர் நோக்குகளில் எழுத வைத்து மோதவிட்டன. எப்படியாயினும், உடன் - எதிர் அணுகுமுறையின் அடிப்படை நோக்கம், ஒரு பிரச்சினையின் அம்சங்கள் யாவும் - எதிரெதிர் நிலைகளில் நிறுத்தப்பட்டு அலசப்படல் வேண்டும் என்பதே.

**எதிர் நடுப்பக்கம் (OP-ED PAGE)**

பொதுவாக, செய்தித்தாள்கள் இரண்டாக மடிக்கக்கூடிய தாள்களாக வெளிவருகின்றன. இவற்றில் நடுத்தாளின் இடப்பக்கம், ஆசிரியவுரைப் பக்கம் அல்லது தலையங்கப் பக்கம் என்று கருதப்படுகிறது. பெரும்பாலும் வாசகர் கடிதங்களுக்குரிய பக்கமாகவும் அதுவே அமைகிறது. இந்த தலையங்கப் பக்கத்தின் எதிரிலுள்ள வலப்புறப்பக்கம் 'எதிர்நடுப்பக்கம்' (Op-Ed Page) என்று அழைக்கப்படுகிறது.

பல பத்திரிகைகள், எதிர்நடுப் பக்கத்தையும் வாசகர்களின் கடிதங்களை வெளியிடவும், சிண்டிகேட் எழுத்தாளர்களின் கட்டுரைகளை வெளியிடவும், கருத்துப்பக்கத்தில் (இடப்பக்கத்தில் - அதாவது, தலையங்கப் பக்கத்தில்) குவிந்துபோகும் விஷயங்களைப் பரவலாக்கி இதிலும் வெளியிடவும் பயன்படுத்துகின்றன. இப்பக்கம் கருத்துப்பக்கமாக உருவானது, 1920களில் என்று சொல்லப்படுகிறது. நியூயார்க் வோர்ல்ட் என்னும் பத்திரிகை முதன்முதலாக கருத்துப்பக்கத்திற்கு எதிரிலிருந்த இப்பக்கத்தையும் மதிப்புரைகள், விமரிசனங்கள் முதலியவற்றை வெளியிடவும், தொழில்ரீதியான பத்திரிகையாளர்களைத் தவிரப் பிறர் – அதாவது, பொதுமக்கள் - தங்கள் கருத்தைத் தெரிவிக்கவும் பயன்படுத்தியது.

இந்தியாவைப் பொறுத்தமட்டில், இது ஒரே சீராக இன்னும் அமைப்புறவில்லை. சில பத்திரிகைகள், சாதாரணமாகச் செய்திகளைத் தருவதற்கும் எதிர் நடுப்பக்கத்தைப் பயன்படுத்தி வருகின்றன. சில இதழ்கள், ஆசிரியருக்குக் கடிதங்கள் போன்ற கருத்துப்பகுதிகளை வெளியிட இதைப் பயன்படுத்துகின்றன. இன்னும் முழுமையாக ஒரு அமைப்பு முறை இங்கு ஏற்படவில்லை. வெளிநாடுகளில், பொதுமக்கள் அல்லது அமெச்சூர் எழுத்தாளர்களது கருத்துகளை வெளியிடுவதற்கான பக்கமாக எதிர்நடுப்பக்கம் விளங்குகிறது.

# இயல் ஐந்து

# மதிப்புரை வரைதல்

ஒரு நூல்/நாடகம்/கலைகள்/திரைப்படம் பற்றி மதிப்புரை எழுத விரும்புகின்ற எழுத்தாளர்க்கு என்ன தகுதிகள் தேவை, அவர் எவ்வாறு எழுத வேண்டும் என்பனவற்றை இப்பகுதி எடுத்துரைக்கிறது. பெரும் பகுதி இங்கு நூல் மதிப்புரையே பேசப்படுகிறது என்றாலும், பிற கலைகளுக்கும், நூல் மதிப்புரைத்தல் பகுதியினின்றும் பொருத்தமான கருத்துகளை எடுத்துக்கொள்ளலாம்.

## தகுதிகள்

ஒரு மதிப்புரையாளருக்கு இருக்கவேண்டிய தகுதிகள் பலவுண்டு. அவற்றில் மிகவும் அடிப்படையானது நேர்மைதான். ஒரு வாசகரை மிகவும் கவரக் கூடியது, இலக்கியம் அல்லது கலை பற்றிய மதிப்பீடுகளில் ஒரு மதிப்புரையாளர் காட்டுகின்ற பொது நோக்கு அல்லது புறநோக்கு (Objectivity).

ஒருதலைச் சார்பாகவும், வேண்டுமென்றே குறை காண்பதாகவும் எழுதப்பட்ட மதிப்புரை, எழுதியவரின் குறுகிய மனப்பான்மையைக் காட்டுவதாகவே அமையும். ஆகவே மதிப்புரையாளர், தமது சுயச்சார்புகள், விருப்பு வெறுப்புகளை ஒதுக்கிவிட்டு, ஒருபுறம் சாயாத, பெருமளவு உணர்ச்சிக் கலப்பற்ற மதிப்பீட்டை அளிக்க முயலுவதே சிறந்தது.

## பயன்

தேசிய நாளிதழ்கள், பெரிய நாளிதழ்கள் எல்லாவற்றிலும் அவற்றின் கலை இலக்கிய பகுதிகளில் ஓர் அங்கமாக கலை பற்றிய அல்லது நூல்கள் பற்றிய மதிப்புரைகள் வெளிவருகின்றன. மதிப்புரை எழுதுதல், எழுதுபவருக்குப் பல வகைகளில் பயனளிக்கக்கூடியது.

முதலில், மதிப்புரை எழுதுவதன் வாயிலாகக் கிடைக்கும் தொகை (அன்பளிப்பு-Honororium).

இரண்டாவது, மதிப்பீட்டிற்கு வரும் நூலின் பிரதியும் இலவசமாகக் கிடைக்கும் (பிற கலைத்துறைகளாயின், கட்டணமின்றி அவற்றைக் காண அனுமதி கிடைக்கும்); இவை சிறுபயன்கள்.

மூன்றாவதாக, அந்த நூலின் ஆசிரியர் வெளியீட்டாளர் இவர்களோடு மதிப்புரையாளருக்கு ஏற்படுகின்ற மறைமுகத் தொடர்பு. (இது பிறகு நேரடித் தொடர்பாகவும் மலரலாம்). நான்காவதாக, அந்நூலைப் படிக்கின்ற வாசகர்களோடு ஏற்படும் மானசீகத்தொடர்பு. இது மிகவும் முக்கியமானது. ஐந்தாவதாக, இவற்றிற்கெல்லாம் மேலாக, கலை இலக்கியத் துறையினுடைய உத்திகள், தொழில்நுட்பம், கலாச்சாரம், அறிவியல் இவற்றிற்கென அமைந்த அடிப்படை விதிகள், மரபுகள் இவற்றின் காவலராகத் தாம் இயங்குவதை எண்ணி மதிப்புரையாளர் அடையும் மகிழ்ச்சி.

இன்று மதிப்புரைகள் பெரும்பாலும் பாராட்டுரைகளாகவே அமைகின்றன. சான்றுக்கு ஒரு மதிப்புரையினைக் காண்க:

(மதிப்புரை தொடங்குமுன் நூலின் பெயர், ஆசிரியர் பெயர், பதிப்பாளர் முகவரி, பக்கங்கள் விலை ஆகியவற்றைக் குறிப்பிட வேண்டும்.)

**எடுத்துக்காட்டு**

நூல் : அயல்நாடுகளில் தமிழர்

எழுதியவர் : முனைவர் எஸ். நாகராசன்

வெளியிட்டோர் : தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

பக்கங்கள் : 446

விலை : ரூ. 74

அயல்நாட்டுத் தமிழர்களைப் பற்றிய எல்லா செய்திகளும் அடங்கிய ஒருநூல் வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தப் புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது. முதலில் பல்வேறு உலகநாடுகளில் வாழும் தமிழர்களின் மொத்த எண்ணிக்கை, அவர்கள் மிகுதியாக வாழும்

பகுதிகள், மற்ற இந்தியர்களுடன் ஒப்பிட்ட விழுக்காடு போன்ற தகவல்கள் தரப்பட்டுள்ளன. மிகவும் அதிகமாக இலங்கையிலும் (37, 35, 740) மிகக் குறைவாக சீசெல்ஸ் தீவுகளிலும் (3000) தமிழர்கள் வாழ்கிறார்கள். இது தவிர, இந்தியாவிலேயே மற்ற மாநிலங்களில் சுமார் ஒன்றேகால் கோடித் தமிழர்கள் வாழ்கிறார்கள். தமிழர்கள் வெளிநாட்டுக்குச் செல்லக் காரணங்கள் என்ன என்பதையும் நூல் ஆராய்கிறது. கடல் கடந்து அயல்நாடுகளுக்குப் பரவிய தமிழ்ப் பண்பாடு அமைதியான முறையிலேயே பரவியது என்பதை ஆசிரியர் நன்கு எடுத்துக்காட்டியிருக்கிறார்.

தமிழர்கள் அதிகமாக வாழும் அயல்நாடுகள் ஒவ்வொன்றிலும் காணப்படும் சிறப்பம்சங்கள் தனித்தனி அத்தியாயங்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. மலேசியாவில் தமிழ் இலக்கியம் வளர்ந்த வரலாற்றையும் ஒருவாறு இந்நூலால் அறியலாம். நாடகங்களைப் பற்றிய தகவல்களும் உள்ளன. இலங்கை, மலேசியா நாடுகளில் வானொலியில் தமிழ் நிகழ்ச்சிகள் வகிக்கும் பங்கு பற்றியும் சொல்லப்பட்டுள்ளது.

">

தமிழ்ச் சைவசித்தாந்தத்திற்கும் பாலினீசியர்கள் தத்துவத்திற்கும் உள்ள ஒற்றுமைகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. இந்தோனேசியா, பர்மா, தாய்லாந்து ஆகிய நாடுகளில் தமிழர்களுக்குத் தமிழ்க் கல்வி, கோயில் வழிபாட்டுரிமை இருப்பது சொல்லப்பட்டுள்ளது. கம்பூச்சியா, லாவோஸ், வியட்நாம் தமிழர்களின் நிலை பற்றியும் தகவல்கள் உள்ளன. பீகிங் ஒலிபரப்புக் கல்லூரியில் தமிழ்க்கல்வி தொடங்கப்பட்டபோது இருபது மாணவர்கள் சேர்ந்து தமிழறிஞர்கள் ஆனமை குறிப்பிடப்பட்டுள்ளது. பீஜித் தீவில் இன்று தமிழர்கள் நல்ல உரிமையுடனே வாழ்கின்றார்கள். இரண்டரை லட்சம்பேர் தமிழர் வாழும் இங்கிலாந்தில் தமிழ்வளர வாய்ப்புள்ளது.அமெரிக்காவில் பெரிய நகரங்கள் எல்லாவற்றிலும் தமிழ்ச்சங்கங்கள் உண்டு. கனடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா போன்றவற்றில் தமிழர் வாழ்க்கையும் குறிப்பிடப்பட்டுள்ளது. உலகத்தமிழர் நிறுவனங்கள் 16 பற்றிய விவரங்களும் குறிக்கோள்களும் விளக்கப்பட்டுள்ளன.

மொழி, பழக்கவழக்கங்கள், பண்பாடு ஆகியவற்றில் தமிழருக்கும் அவர்கள் வாழும் அயல் நாட்டினர்க்கும் உள்ள ஒற்றுமைகள் மிகவிரிவாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. 1966 கோலாலம்பூர் உலகத் தமிழ் மாநாடு தொடங்கி பல்வேறு நாடுகளில் வாழும் தமிழர்களின் வாழ்க்கை பற்றி அறிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்த வகையில் உலகத் தமிழர்களைப் பற்றி முழுமையான விவரங்களைத் தரும் முதல் நூல் இது. தமிழர் பண்பாடு உலகளவில் பரவி வளரும் வாய்ப்புகளில் ஈடுபாடு கொண்ட நிறுவனங்களுக்கு இந்த நூல் இன்றியமையாத கருவூலம்.



## மதிப்புரையாளரின் பண்புகள்

மதிப்புரை எழுதப் பெரிய அளவு எழுத்துப் பயிற்சி தேவை என்று சொல்ல முடியாது. ஆயினும் தெளிவாகத் தம் கருத்தை வெளிப்படுத்த என்ன மொழித்திறன்கள் தேவையோ அவை அமைந்திருக்க வேண்டும். மேலும் விடாமுயற்சி, உழைப்பு, பிறருடைய வழிகாட்டல் ஆகியவையும் தேவை.

### 1.ஆர்வம்

ஒரு நல்ல மதிப்புரையாளராக நீங்கள் ஆகவேண்டுமாயின், பல துறை நூல்களையும் தேடிப்பிடித்து இடைவிடாமல் படிக்கும் ஆர்வம் உங்களிடம் இருக்க வேண்டும். உலகின் மிகச் சிறந்த மதிப்புரைகளைக் காணவேண்டுமாயின், தி டைம்ஸ் லிடரரி சப்ளிமெண்ட், தி நியூயார்க் ரிவ்யூ ஆவ் புக்ஸ், நியூயார்க் டைம்ஸ், சண்டே மாகஸின் போன்ற இலக்கியப் பத்திரிகைகளில் காணலாம். அவற்றின் முறையை இங்கே அப்படியே பயன்படுத்த முடியுமா என்பது ஐயமே என்றாலும். அம்மாதிரி வார இதழ்களின் மதிப்புரைகளை, மதிப்புரைத்தல் கலையை நன்கு பயிலுவதற்கென்றே படித்துக்கொள்வது நல்லது.

### 2.நேர்மை

நேர்மை என்ற சொல் இங்கே அசையாத புறவயநோக்கு என்னும் அர்த்தத்திலேயே வழங்கப்படுகிறது. ஒரு மதிப்புரையாளர், எந்த நிலையிலும் தமது சுயச்சார்புகளோ மனச்சாய்வுகளோ தமது மதிப்புரையில் குறுக்கிட்டு அதன் நியாயத்தைக் கெடுக்க அனுமதிக்கலாகாது. மேலும் மதிப்புரையாளர்; நூலைப் பற்றிய மதிப்புரை எழுதுவதைக் கைவிட்டுத் தமது புலமையைத் தம்பட்டம் அடித்துக்கொள்ளக்கூடாது. உங்களது சுயமாக இருங்கள், சுயமாக எழுதுங்கள். அப்போதுதான் சரியான மதிப்புரை உருவாகும்.

### 3.தேவையற்ற குறைகாணலைத் தவிர்த்தல்

எங்கே குறைகள் எதுவுமில்லையோ, அங்கெல்லாம் தேவையின்றி ஓட்டைகளைக் கண்டுபிடிக்கக் கூடாது. இம்மாதிரி மனப்போக்கு தேவையற்றது, ஒழுக்கமும் ஆகாது. எமர்சன் சொல்கிறார்:

விமரிசனம் என்பது கோடரிகளுக்கும் மரங்களுக்கும் நடக்கும் சண்டையல்ல. ஆகவே வீண் சண்டைக்கு வருவதாக மதிப்புரை இருக்கக்கூடாது. அது வழிகாட்டுவதாகவும், செய்திகளைச் சொல்வதாகவும், அகத்தெழுச்சியைத் தூண்டுவதாகவும், தென்றல் போல வருடிக்கொடுப்பதாகவும் இருக்க வேண்டுமே அன்றிக் கொண்டல் (கோடையிடிப் பெருமழை) போல இருக்கக்கூடாது.”

ஒரு நல்ல மதிப்புரையாளர், சில மதிப்புகளை நிலை நிறுத்த வேண்டும் என்ற காரணத்திற்காகப் பாடுபடுபவரே அன்றி, கடுமையாக இருக்கவேண்டும் என்ற காரணத்துக்காகவே கடுமையாக நடப்பவர் அல்ல. “நாயை அடிக்க வேண்டுமென்று நினைத்துவிட்டால், கல் ஒன்று கிடைக்காமலா போய்விடும்?”

## முற்சாய்வுகள் (Blases)">

நூல் மதிப்புரை எழுதுவதில் தடை செய்யக்கூடிய சில முற்சாய்வுகள் உள்ளன. சில மதிப்புரையாளர்களுளுக்கு சில எழுத்தாளர்களைப் பிடிக்கவே பிடிக்காது. சில பேருக்குச் சில எழுத்தாளர்கள் வேண்டியவர்களாகவும் இருப்பார்கள். இம்மாதிரியெல்லாம் இருக்கும்போது தானாகவே விருப்பு வெறுப்புகள் தலைதூக்கி நிற்கின்றன.

**சில உதாரணங்களைக் கவனிப்போம்**

1.கீழே தரப்படுவது இல்லஸ்டிரேடட் வீக்லி ஆஃப் இந்தியா 8-11-1987 பதிப்பில் வெளிவந்த ஒரு மதிப்புரை. நூலின் பெயர் மிலன் '86'. ஆசிரியர் மிலன். மதிப்புரை பின்வருமாறு:

“என்னைப் பொறுத்தவரை மிலன் என்றாலே நல்ல எழுத்துதான். அவருடைய எழுதுகோல் ஒரு வண்ணத் தூரிகை போலச் செயல்படுகிறது என்பதால் மட்டுமல்ல - இதோ பாருங்கள் இந்த மனிதரை – தாம் எழுதுவதை நன்கு அனுபவித்து எழுதுபவர். அவருடைய சக ஊழியன் என்ற முறையிலே நான் பாராட்டுவது இந்த இயல்பைத்தான்”.

இது தனிமனிதச் சார்புநோக்கு (Personal Bias) எனப்படும்.

2.இந்தியாவில் பலவிதப் பற்றுகளைக் காணலாம். தங்கள் பிராந்தியம், தங்கள் மதம், தங்கள் மொழி, தங்கள் சாதி என்ற எல்லாவற்றிலும் பற்றுக்கொண்டு பேசுகிறார்கள். ஒரு கன்னடராக இருந்தால் அவர், சிவராம காரந்த்தின் நாவல்களை வானளாவப் புகழ்வார். வங்காளி என்றால் தாகூருக்கு ஈடு இணையே இந்தியாவில் இல்லை என்பார். சிந்தி என்றால் ‘ஆல் அபௌட் ஹேட்டர்’ நாவலுக்கு இணையான படைப்பு இருக்கிறதா என்று கேட்பார். இம்மாதிரி குறுகிய பற்றுகளைத் தாண்டியவராக ஒரு மதிப்புரையாளர் இருக்க வேண்டும். உதாரணத்திற்கு இங்கே ஒரு பகுதி: இது பழங்காலத்தில் ஜான் கீட்ஸ் (John Keats) எழுதிய எண்டிமியான் (Endymion) என்னும் கவிதைக்கு ‘குவார்டர்லி ரிவியூ’ என்ற இதழில் வெளிவந்த மதிப்புரையின் ஒரு சிறுபகுதி.

“இந்தக் கவிதையாசிரியர் கீட்ஸிடம் நல்ல மொழியாளுமைத் திறன் இருக்கிறது… ஒரு ஜீனியஸ் (கருவிலே திருவுடைய) தன்மை காணப்படுகிறது என்பதில் ஐயமில்லை… ஆனால் அவர் காக்னி கவிதை (Cockney Poem) என்று அழைக்கப்படும் ஒரு புதுவகையான குழுவைச் சார்ந்தவராக இருக்கிறார்; அதன் மொழியைக் கையாளுகிறார்… அவலட்சணமான மொழி நடை.”

இது பிரதேசப் பற்றின் (Regional Poem) காரணமாக ஏற்படும் முற்சாய்வு என்று சொல்லலாம்.

## பாலியல் முற்சாய்வு (Sexual bias)

பாலியல் முற்சாய்வு பச்சோந்தி போன்றது; வெவ்வேறு நிறங்களைக் காட்டக்கூடியது. ஒரு நூலின் பின் அட்டையில் ஒரு கவர்ச்சியான நிழற்படம் (நூலாசிரியர் பெண்ணாக இருப்பின்) போதும்: அதைப் பார்த்தே மயங்கிச் சிலபேர் மிகவும் பாராட்டிப் புகழ்ந்துரைப்பார்கள். சிலர் இதற்கு எதிரான நிலைப்பாடு எடுப்பர். ஆனால் ஒரு புறவயநோக்குக் கொண்ட மதிப்புரையில் பாலியல் முற்சாய்வு குறுக்கிடலாகாது. நூலின் தகுதி ஒன்றே அடிப்படையாக இருக்க வேண்டும்.

'பாலியலிலிருந்து சமத்துவத்திற்கு' என்னும் நூலில் நரேந்திரநாத் காலியா என்பார், பாலியல் நோக்கு (Sexism) எது என்பதை நன்கு வரையறுக்கிறார்:

1. மனித இயற்கை, திறன்கள், குணநலம், வேலைக்கான தகுதித்திறமை, வெளிப்பாடு ஆகியவற்றை அளவிடுவதில் அவர்கள் ஆணாக இருப்பதோ பெண்ணாக இருப்பதோதான் முக்கியம் என்று கருதுகின்றவர்கள்;

2. அவர்களுக்குக் கிடைக்கின்ற வாய்ப்புகள், அவர்களது பண்புகள் இவற்றின் அடிப்படை உடல்சார்ந்த வித்தியாசமே என்று கருதுகின்றவர்கள்;

3. ஆண்பால் - பெண்பால் என்னும் அடிப்படையில் சமூக – பொருளாதார நிலைகளில் வேறுபாடு இருந்தே தீர வேண்டும் என்பவர்கள்

இவர்களெல்லாம் பாலியல் நோக்கில் ஊறியவர்கள்".

சமூகத்தில் ஆண் உயர்ந்தவன் - பெண் தாழ்ந்தவள் என்று பார்க்கும் நோக்கோ, (அல்லது அதற்கு மறுதலையோ), நூல் மதிப்புரையையும் பாதிக்கிறது. கம்ப்யூட்டர்களிலும் விண்வெளிக்கலங்களிலும் பெண்கள் பணியாற்றும் இக்காலத்திலும், 'பெண்களுக்குக் கணக்கு வராது; அவர்கள் இலக்கியம் படிக்கத்தான் லாயக்கு' என்று நினைப்பவர்கள் இருக்கிறார்கள்.

ஷேக்ஸ்பியர் எழுதிய ‘வெனிஸ்வணிகன்’ என்னும் நாடகத்தில், போர்ஷியா என்பவள் ஆண் வக்கீல் வேடமிட்டு வாதாடி அண்டோனியோ என்பவனை மீட்கிறாள். அவள் வெற்றிபெற்றதற்குக் காரணமே, அவள் ஆண்வேடமிட்டதுதான் என்று வாதிப்பவர்கள் உள்ளனர். (ஆண்வேடத்தில், ஓர் ஆணின் குணாம்சங்களை அவள் வெற்றிபெற்றதற்குக் காரணமே, அவள் வெளிப்படுத்துவதாலேயே வெற்றிபெறுகிறாள் என்பது அவர்கள் சொல்லும் வாதம்.) அன்னை தெரசா போன்றோர் மிகு வெற்றி அடையக் காரணம், அவர்கள் பெண்களாக வாழ்க்கை நடத்தாததுதான் (அதாவது அவர்கள் சாதாரணப் பெண்கள் போல திருமணம் செய்து கொண்டு கணவனோடும் குழந்தைகுட்டிகளோடும் வாழாமைதான்) என்று நினைப்பவர்கள் உண்டு. இவை யாவும் ‘பாலியல் முற்சாய்வு’ என்பதற்கு நல்ல உதாரணங்கள்.

## நல்ல மதிப்புரை

முற்சாய்வுகளற்ற ஒரு மதிப்புரையாளர், நூலிலுள்ள இலக்கிய, ஒழுக்க, சமூக, சமயச் சமநிலை இன்மைகளை வெளிப்படுத்த முனைந்தாலும், அவர் தமது நிலைப்பாடு, கட்டுப்பாடு, நாகரிகம் ஆகியவற்றை மறந்துவிடக்கூடாது.

மதிப்புரையின் குரல் உயரக்கூடாது. ஒரு நல்ல, நேர்மையான மதிப்புரை என்பது ஒழுக்கத்தையும் நாகரிகத்தையும் காப்பாற்றுவது; தேவையற்ற குறைகாணல், எழுத்தாளனின் வளர்ப்புக் குறைபாடுதான்.

ஹிந்துஸ்தான் டைம்ஸ் இதழில் பின்வரும் மதிப்புரை வெளிவந்தது; வெளிநாட்டில் நிலைத்துவிட்ட இந்தியர்கள் பற்றிய ஒரு நூல், ‘மை ஃபாதர்ஸ்லேண்ட்’ (எங்கள் தந்தையர் நாடு) என்பது. அது பற்றிய மதிப்புரையின் ஒரு பகுதி:

“முதன்முதலில் நிலைத்துத் தங்கப் போனவர்கள் கொத்தடிமைகளாக போனார்கள், அவர்களது வாழ்க்கை நிலையைச் சித்தரிக்கும் முதல் இரு அத்தியாயங்களும் மிகச் சிறப்பாக உள்ளன. நூலாசிரியரின் நோக்கிலிருந்து கதைசொல்பவர், தன் தந்தை, பாட்டன் இவர்களைத் தொழிலாளிகளாகக் காட்டுகிறார். கதைசொல்பவரின் தந்தை வீரசிங்,

தன்னை அவமதித்த ஒரு பிரிட்டிஷ் அதிகாரிக்கு எதிராக எதிர்ப்புத் தெரிவிப்பதாக ஒரு சம்பவம் வருகிறது…

ஆயினும், இந்த இடத்திற்குப் பிறகு, புத்தகம், ஒரு அரசாங்க அதிகாரி தான் பணிபுரியும் நாட்டில் தனக்கேற்பட்ட சம்பவங்களை நினைவுகூர்வதாக ஆகிவிடுகிறது. புத்தகத்தின் தலைப்பு, ஒரு வரலாற்றுப்பூர்வமான ஆய்வையும் இரு கலாச்சாரங்களுக்கிடையிலான உறவுகளையும் சொல்லும் நூல் இது என்ற எதிர்ப்பார்ப்பை உண்டாக்கினாலும், நூலின் மையம்குவிதல்; அழிந்து, வெறும் நினைவுக்கோவைகளாகச் சுருங்கிவிடுகிறது.

நூலாசிரியர் இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையோடு தமது செய்திகளை ஒழுங்குபடுத்தியிருந்தால். தமது இலக்கினைத் தெளிவாக மனத்திற்கொண்டு அதற்கேற்ப அமைந்திருந்தால், இந்தப்புத்தகம் பிறநாடுகளில் வாழும் இந்தியக்குடும்பங்களின் வாழ்க்கை பற்றி நன்கு ஒளியூட்டுகின்ற ஒன்றாக அமைந்திருக்கும்.”

இங்கே மதிப்புரையாளர், நூலின் பலன்கள் பலவீனங்கள் ஆகிய இரண்டையுமே சுட்டிக்காட்டி, உதாரணங்கள் தந்து, தமது கருத்துகளை நிலை நிறுத்திச் செல்வதைக் காணலாம்.

**நேர்மை**

சில மதிப்புரையாளர்கள் புத்தகத்தைப் படிக்காமலே அதைப்பற்றி ‘அளந்து’ விடுவார்கள். புத்தகத்தைப் பற்றிய குறிப்புகள், ஆசிரியரைப் பற்றிய குறிப்புகள் யாவும் சில நூல்களின் உள் அட்டை மடிப்புகள், அட்டையின் பின்புறம் ஆகியவற்றில் தரப்பட்டிருக்கும். இவையே இவர்கள் மதிப்புரை எழுதப்போதுமானது. இது ஒருவகை நேர்மையின்மை. சில மதிப்புரையாளர்கள், தேவையின்றிக் காரசாரமாகவும் கடுஞ்சொற்களோடும் எழுதுவார்கள். சிலர் பண்டித நோக்கில் எழுதுவார்கள்.

ஓர் ஆசிரியர் பல இதுவரை நூல்களை வெளியிட்டவர். புகழ்பெற்றவர் என்றால், நூலகத்தில் கொஞ்சநேரம் செலவு செய்து, இதுவரை அவர் என்ன நூல்கள் எழுதியிருக்கிறார், அவற்றிற்கும் இந்த நூலுக்கும் என்ன தொடர்பு என்பனவற்றை எல்லாம் தெரிந்து கொண்டு மதிப்புரை வரைவது நல்லது.

## பொறுப்பு

நேர்மையான மதிப்புரை செய்யவேண்டுமாயின், நூலை நன்கு ஆழமாகப் படிக்கவேண்டும். தரஉணர்வோடு படிக்கவேண்டும். அடிக்கடி நூலிலிருந்து மேற்கோள்களைக் கொட்டிக்கொண்டே இருக்கக்கூடாது. அந்த எழுத்தாளருடைய பணிகள், ஆளுமை, அவரது மற்றப் புத்தகங்கள் ஆகியவற்றை மட்டுமே விவரித்துவிட்டு இந்த நூலை விட்டுவிடக் கூடாது. இலக்கிய மதிப்புகளையும், ஒழுக்க மதிப்புகளையும் ஒருங்கே காப்பாற்றுகின்றவனே நல்ல மதிப்புரையாளன்.

ஒரு நூலை நன்கு மதிப்புரைக்க, அந்த நூலை மட்டுமே மதிப்புரையாளர் படித்திருந்தாலும் போதாது. அந்தத் துறையில் இன்னும் இதுவரை என்ன நூல்கள் வெளிவந்திருக்கின்றன என்று அறிந்து அவற்றையும் படித்திருக்க வேண்டும். அந்த நூலை வாசகர்கள் வாங்கிப் படிக்கலாமா, பயனுண்டா என்பனவற்றையெல்லாம் சொல்ல வேண்டுமாயின், அதே துறையின் பிற நூல்களுடன் ஒப்பிடுவது இன்றியமையாதது. அந்த நூலிற்காகப் பணத்தையும் காலத்தையும் செலவிட இருக்கும் வாசகனுக்குச் சரியான கருத்துகளை மட்டுமே கூறவேண்டிய பொறுப்பு மதிப்புரையாளருக்கு இருக்கிறது.

வெளிவரும் எல்லா நூல்களையும் யாரும் மதிப்பிட்டுவிடுவதில்லை. மதிப்புரைக்கென ஒருவரிடம் ஒரு நூல் போகுமுன்பே இந்தப் புத்தகம் மதிப்பிட வேண்டியதுதானா என்று முடிவுசெய்யும் பொறுப்பு மதிப்புரையாசிரியர் என்னும் பொறுப்பாளரிடம் இருக்கிறது. இதழ் எழுத்துகளைப் போலன்றி, ஒரு நூல் ஓரளவு நிலைபேறு கொண்டது. ஆகவே எந்த நூலுமே, அந்தக் குறிப்பிட்ட கால கட்டத்தில் நிலவும் அறிவுத் தொகுதிக்கு வளம் சேர்ப்பதாக உள்ளதா என்பது கட்டாயம் நோக்கப்பட வேண்டியது. ஏற்கனவே கூறியவற்றையேகூறும் - அரைத்த மாவையே அரைக்கும் - நூல்கள் மதிப்புரைக்குத் தகுதியுடையன அல்ல. மதிப்பிடும் துறையில், மதிப்பிடுவோரின் அறிவு ஆழமானதாகவும், பிற துறைகளோடு தொடர்பு கொண்டதாகவும், அந்தநாள் வரை ஏற்பட்டுள்ள வளர்ச்சியை அறிந்ததாகவும் இருக்கவேண்டும்.

உண்மையில் இத்தனை தகுதிகளும் வாய்ந்த ஓர் ஆசிரியரைக் கண்டுபிடித்து நல்ல மதிப்புரை ஒன்றைப் பொறுவது என்பது மிகக் கடினமானதேயாகும், ஆகவே இதழாசிரியர் 'இருப்பவர்களுள் சிறந்தவர்' என்ற அடிப்படையிலேயே (பல சமயங்களில் தமக்குத் தெரிந்தவர் என்ற அடிப்படையிலே) இயங்கவேண்டியிருக்கிறது. ஆகவே நல்ல பயிற்சி பெற்ற புத்திசாலித்தனமான மதிப்புரையாளர்களுக்கு எப்போதுமே பத்திரிகைகளில் தேவையிருக்கிறது.

## மதிப்புரையாசிரியர் (Review Editor)

இதழ்களில் எந்தெந்த நூல்களை மதிப்புரை செய்யலாம் என்று தேர்ந்தெடுப்பதற்காகவும், வந்த மதிப்புரைகளை வெளியிடலாமா வேண்டாமா என்று முடிவு செய்வதற்காகவும் செய்தித்தாள்களில் தனியாக ஓர் ஆசிரியரே இருப்பதுண்டு. இவருக்குத்தான் மதிப்புரை ஆசிரியர் என்று பெயர்.

செய்தித்தாள்கள் இடத்தைக் கறாராகப் பயன்படுத்த வேண்டியவை என்பது நமக்குத் தெரியும். சாதாரணமாக, ஒரு செய்தித்தாள் மதிப்புரைக்கென ஒரு வாரத்திற்கு ஒரு பக்கம் ஒதுக்கக்கூடும். ஆனால் அந்த வாரத்தில் நூற்றுக்கணக்கான புத்தகங்கள் மதிப்புரைக்கென வந்திருக்கலாம். எனவே எல்லாப் புத்தகங்களும் தகுதியானவையாக இருக்கும் என்று சொல்ல முடியாது. இரண்டாவதாக, ஆழமற்ற, சரிவர செய்யப்படாத மதிப்புரைகளை வெளியிட இயலாது. எனவே மதிப்புரை ஆசிரியர்தான் முதல் தேர்வாளர். மதிப்புரையாளர்களுக்கு எந்த எந்தப் புத்தகங்களை மதிப்புரைக்கென அனுப்பலாம் எனத் தேர்வு செய்பவர் இவரே.

அவருடைய பார்வைக்கோணத்தில். கட்டாயம் மதிப்புரை வெளியிடவேண்டும் எனத் தோன்றும் நூல்கள் சிலவற்றை அவர் தேர்ந்தெடுக்கிறார். ஆகவே அவர்தான் முதல் மதிப்புரையாளர். எதைத் தள்ள வேண்டும், எதை மதிப்புரைக்குக் கொள்ள வேண்டும் என்று முடிவுசெய்வதற்குப் பல்துறை அறிவு தேவை. அந்தப் பத்திரிகை வாசகர்களின் தேவைகள், அவர் பணிபுரியும் நிறுவனத்தின் கொள்கைகள் போன்றவற்றையும் இந்தத் தேர்வில் குறுக்கிடுகின்றன. பிறகு ஒவ்வொரு மதிப்புரையும் இவ்வளவு நீளம்

இருக்க வேண்டும் என்று குறித்துக்கொள்கிறார். ஒரு மதிப்புரையாளர் தமது துறையில் மட்டுமே பொதுவாக, வல்லுநராயிருப்பார்; மதிப்புரை ஆசிரியரோ பல துறை வல்லுநராயிருப்பது அவசியம்.

## மதிப்புரையாளரது கடமை

மதிப்புரையாளர் தமது வாசகர்களுக்குச் சரியான வழிகாட்டக் கடமைபட்டவர் என்பது முன்னரே சொல்லப்பட்டது. அவர் ஒரு நூலை மதிப்பிடக் கேட்க வேண்டிய அடிப்படையான கேள்விகள் சில உண்டு.

நியாயமாகப் பார்த்தால், ஒரு நூலாசிரியரே இந்தக் கேள்விகளைத் தம்மைக் கேட்டுக்கொண்டு தான் அந்த நூலை எழுதியிருக்கவேண்டும். ஆனால் அவ்வாறு நிகழ்வதில்லை. நூலின் மீது – தமது படைப்பின் மீது – நூலாசிரியர் கொண்டுள்ள உணர்ச்சி பூர்வமான அபிப்பிராயம் காரணமாக இக்கேள்விகளைக் கேட்பதில்லை.

**மதிப்புரையாளர், பின்வரும் கேள்விக்கான விடைகளை வைத்து நூலின் தகுதியை மதிப்பிடுவது அவசியம்.**

1. இந்தப் புத்தகம் இந்தத் துறையில் தேவைதானா? புதிதாக அது எதையாவது சொல்லியிருக்கிறதா?

2. வாசகர் தமது பணத்தைச் செலவிட்டு இந்த நூலை வாங்கிப்படிப்பது அவசியமா?

3. ஏற்கெனவே இந்தத் துறையில் வெளிவந்துள்ள புத்தகங்களைக் காட்டிலும் இது எந்த வகையில் தனித்தன்மை வாய்ந்தது, சிறப்பானது?

4. அத்துறையில் நிகழ்ந்து கொண்டிருக்கும் ஆய்வுகள் அல்லது மாற்றங்கள் அடிப்படையில் இந்த நூலைக் காலத்திற்கேற்றதாக ஆசிரியர் படைத்திருக்கிறாரா?

புத்தகத்தை எழுதுவது வேண்டுமானால் ஓர் ஆழ்ந்த உணர்ச்சிமயமான அனுபவமாக இருக்கலாம். ஆனால் அதை

வெளியிடுவது வாசக – நுகர்வோரின் நுகர்வுக்கெனச் செய்கின்ற, சமூகத்துக்கு பொறுப்புள்ள ஒரு செயலாகும். எனவே இதுவரை வெளிவந்துள்ள நூல்களின் பின்னணியில் இந்த நூலை மதிப்பிடுவது அவசியம்.

பொறுப்பான இதழ்களில் மதிப்புரையாளர்கள் பலர். அந்தந்தத் துறையின் வல்லுநர்களை கலந்து ஆலோசித்த பின்னரே ஒருநூலை மதிப்பிட்டுக் கட்டுரை வரைவதை மேலைநாட்டுப் பத்திரிகைகளில் காணலாம். ஏனெனில் ‘தி டைம்ஸ்’ போன்ற இதழ்களின் இலக்கிய அனுபந்தங்கள் (‘தி டைம்ஸ் லிடரரி சப்ளிமெண்ட்’) உலகமுழுவதும் செல்லக்கூடியவை; பாதுகாத்து வைக்கப்படுபவை. அவற்றின் கருத்துகள் உலக முழுவதுமுள்ள ஆசிரியர்களால் ஏற்கப்படுபவை. ஆகவே சொல்லும் மதிப்புரைகள், நடுநிலைமையோடும் சரியானவையாகவும், அசைக்க முடியாத கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்தும் இருக்க வேண்டும்.

**மதிப்புரையாளர் தாம் கேட்கவேண்டிய கேள்விகளின் விரிவான பட்டியல் மேலும் ஒன்று இங்கே தரப்படுகிறது:**

1. மதிப்புரைக்கென வந்துள்ள இந்த நூலின் துறை (சப்ஜெக்ட்) என்ன? விஷயம் எதைப்பற்றியது?

2. நூலின் நோக்கம் என்ன? புதிய அறிவை அறிமுகப்படுத்தி அளிப்பதா? அல்லது அந்தத் துறையில் ஏற்கெனவே இருக்கும் நிரப்பப்படாத சில இடைவெளிகளையேனும் நிரப்புவதா?

3. புத்தகத்தின் அணுகுமுறை என்ன? ஏற்கெனவே இருக்கும் தகவல்களையே தொகுத்துத் தருகிறதா? அல்லது புதிய சிந்தனைக் கோணங்களை அளிக்கிறதா?

4. இம்மாதிரி எழுதப்பட்டுள்ள பிற சில நூல்களோடு ஒப்பிடுகையில் இதன் தகுதி என்ன?

5. புத்தகத்திலுள்ள குறைகள் என்ன?

6. நூலில் தரப்பட்டுள்ள மெய்ம்மைகளும் புள்ளி விவரங்களும் சரியானவையா? பொருத்தமானவையா? நம்பத் தகுந்தவையா?

7. நூலாசிரியர் இறுதியாக தந்திருக்கும் முடிவுகள், மதிப்பீடுகள் போன்றவை புதியவையாகவும், அத்துறைக்குப் பயனுள்ள வகையிலும் அமைந்துள்ளனவா? அல்லது ஏற்கெனவே உள்ள முடிவுகளையே திரும்ப வலுப்படுத்துகின்றனவா? அல்லது கூறியது கூறலாக அமைந்திருக்கின்றனவா?

8. இறுதியாக, இப்புத்தகத்தின் தேவை என்ன?

9. விலை, புத்தக அச்சமைப்பு, வெளிக்கட்டு, புத்தகக் கடைகளில் கிடைக்கும் நிலை, போன்றவற்றில் பிற நூல்களோடு ஒப்பிடுகையில் இதன் நிலை என்ன?

பெரும்பாலான வெளியீட்டாளர்களுக்குப் புத்தகங்கள் என்பவை விற்கப்படும் சரக்குகள். அவ்வளவுதான். சோப்புகள், பற்பசை, பிஸ்கட்டுகள் போல. பல வெளியீட்டாளர்களுக்கு எது நன்கு விற்கிறதோ அதுதான் சிறந்த பொருள். அதனால்தான் நம்நாட்டில் வெறும் பாலுணர்வையும் வன்முறையையும் விற்பனை செய்யும் மலிவான புத்தகங்கள், பெரிய கல்வித்துறைச் சாதனைகள் போலத் தம்மைக் காட்டிக்கொண்டு வெளிவரும் பொருத்தமற்ற மேலோட்டமான புத்தகங்கள், அலங்கார வார்த்தைகளில் கூறியதையே கூறும் புத்தகங்கள் ஆகியவையே விற்பனை நோக்கில் சிறப்பானவையாகக் கருதப்படுகின்றன. நாட்டின் நூலகங்கள் யாவும் இப்படிப்பட்ட புத்தகங்களாலேயே நிரம்பியிருக்கின்றன.

இந்தப் பின்னணியில் ஒரு மதிப்புரையாரின் பொறுப்பினை நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். ஒரு புத்தக ஆசிரியர் விற்பனைக்காக எதை வேண்டுமானாலும் எழுதி வெளியிடலாம். மதிப்புரையாளர் அவ்வாறல்ல. அவரது சமூகப் பொறுப்பு புத்தக ஆசிரியரின் பொறுப்பினைவிட மேலானது.

## மதிப்புரையாளரின் பணி

நூலின் விஷயம், நடை, பொருத்தம் அல்லது ஏற்புடைமை ஆகிய மூன்றையும் அளவிடுவதே ஒரு மதிப்புரையாளரின் தலையாய பணி. இவற்றினுள் மிக முக்கியமான விஷயம்.

1.விஷயம்: மேம்போக்கான, சோதனை செய்தால் உறுதிப்படாத, திட்டவட்டமாக இராத கேட்பாடுகளைக் கொண்ட புத்தகங்களும் இப்போது சந்தையில் விளம்பரங்கள் வாயிலாகவும், தவறான பின்னட்டைக் குறிப்புகள் வாயிலாகவும் மேன்மையானவை என விற்கப்படுகின்றன. ஒரு துறையில் வெளிவந்துள்ள பல புத்தகங்களைப் பார்த்தால் அவை யாவுமே 'தாங்கள் தான் இத்துறையில் முதல் ஒரே நூல்' 'பெரிய கொடையை அளிப்பவை' 'சுயத் தன்மை வாய்ந்தவை' என்றெல்லாம் கூறிக் கொள்வதைப் பார்க்கலாம். இம்மாதிரிச் சொற்களைப் பார்த்து அந்தப் புத்தகங்களை வாங்கியவர்கள் பிறகு ஏமாற்றமடைகிறார்கள். எனவே மதிப்புரையாளர்கள் தான் இவை பற்றிச் சொல்லவேண்டும்.

2.நடை: புத்தகத்தின் விஷயம் உண்மையிலேயே தகுதியானதுதான் என்று முடிவு செய்துவிட்டால், அது இன்றைய தேவைக்கானது. சிறப்புடையது என்றால், மொழிநடை நோக்கிலிருந்து காணவேண்டும்: நடை தெளிவாக இருக்கிறதா. கவர்ச்சியானதாக இருக்கிறதா, வாசகரை ஈர்ப்பதாக இருக்கிறதா, அலங்காரத் தன்மை கொண்டிருக்கிறதா என்பதையெல்லாம் ஆராய்ந்து கூறவேண்டும். தர்க்க ரீதியான வளர்ச்சிப்போக்கு நூலில் அமைந்திருக்கிறதா என்பதையும் கவனிக்க வேண்டும். ஒரு கருத்திலிருந்து இன்னொரு கருத்துக்குத் தாவும்போதும் தர்க்கரீதியாக அமைந்திருக்கிறதா என்பதைக் காண வேண்டும்.

**3.ஏற்புடைமை:**

ஒரு புத்தகத்தின் நல்ல பண்புகளையும் மோசமான இயல்புகளையும் சுட்டிக் காட்டவேண்டியது மதிப்புரையாளர் கடமை. நமது நாட்டின் இன்றைய நிலைக்கு அந்தக் குறிப்பிட்ட நூல் ஏற்றதுதானா, இன்றைய அறிவுவளர்ச்சிக்கு அது ஏற்றதுதானா, நமது சமூகத்திற்குப் பயன்படக் கூடியதுதானா, என்பதைக் காண வேண்டும்.

நல்ல நடையின் இயல்புகள். ஆற்றொழுக்காகச் செல்லும் தன்மை, நேரடித் தன்மை, வாசக ஆர்வத்தைத் தூண்டும் இயல்பு, தர்க்கம் ஆகிய நான்கும் ஆகும். எழுத்தின் நோக்கத்தைப் பொறுத்தும், விஷயத்தின் ஆழத்தைப் பொறுத்தும், எந்த வாசகர்களை நோக்கி எழுதப்படுகிறது என்பதைப் பொறுத்தும் நடை அமையும். நடை

என்பது ஏதோ அழகுபடுத்துவது, அலங்காரமானது அல்ல. அது தொடர்பு கொள்ளும் ஒரு முறை. செய்தியுணர்த்தலே முதல் நோக்கம். ஒரு மதிப்புரைக்கு உரிய நடை அமைவது அவசியம். நல்ல நடைதான் மதிப்புரைக்கும் வாசகத்தன்மையையும், அதிகாரத்தையும் அளிக்கிறது. தானே மோசமான, எந்திரத்தனமான நடையில் எழுதப்பட்டுள்ள மதிப்புரை, நூலின் நடையை எப்படிக் குறைசொல்ல முடியும்?

அந்தப் புத்தகம் காலத்துக்கேற்றது தானா, பொருத்தமானதுதானா என்னும் ஏற்புடைமையைக் காணப் பின்வரும் குறிப்புகள் உதவும்:

1. அந்த நூலின் வாசகர்களின் வயது.

2. வாசகர்களின் வாங்கும் சக்தி.

3. விஷயத்தில் புதுமை.

4. வாசகர்களின் மீது நிலவியல், அரசியல், சமூகக் கட்டுப்பாடுகள் அமைந்துள்ள விதம்.

5. கருப்பொருளின் காலத்துக்கேற்ற தன்மை.

கடைசியாக ஒரு எச்சரிக்கை: புத்தகங்களின் அட்டைகளில் சொல்லப்படும் கருத்துக்களை பொருட்படுத்தக் கூடாது; பொருட்படுத்தவே கூடாது.

இலக்கியப் படைப்புகளின் மதிப்பீடு:

படைப்பாற்றல் மிக்க, இலக்கிய – கலை எழுத்துகளை மதிப்பிடுவதற்குத் தேவையான, விரும்பத்தக்க பண்புகள் யாவை? இப்போது அவற்றைக் காண்போம்.

1. ஒரு இலக்கியப் படைப்பை, அதன் அளவில் அதன் தளத்தில் ஏற்க வேண்டும்.

2. பிரதியை ஆழ்ந்து வாசித்தே அதன் கட்டமைப்பு, இழைவமைதி போன்ற தன்மைகளை முடிவுகட்ட முடியும்.

3. நூலின் ஆதிக்கம் செய்யும் கருப்பொருட்கூறு, அடிக்கருத்து, படிமம் ஆகியவற்றைக் கண்டறிய வேண்டும்.

4. இன்றைய வாழ்க்கைச் சிக்கல்கள், போராட்டங்களின் அடிப்படையில் அதன் முக்கியத்துவத்தை மதிப்பிடுக.

நடுநிலையான, சமநிலை வாய்ந்த எந்த மதிப்பீடும் -

அ. புறவயநோக்கிலானது; எந்த இலக்கிய வகையினுள் அந்த நூல் எழுதப்பட்டிருக்கிறதோ அந்த இலக்கிய வகையைக் கணக்கில் கொள்வது.

ஆ. நூலின் பிரதியை வைத்தே தகுதியை மதிப்பிடுவது; நூலாசிரியரின் தன்மையை, பிற கருத்துகளை வைத்தல்ல.

இ. நூலின் ஏற்புடைமை, முக்கியத்துவம் ஆகியவற்றை எடுத்துரைப்பது.

ஈ. நூலாசிரியரின் கருத்து நிலைப்பாட்டைக் கணக்கில் எடுத்துக் கொள்வது.

உ. இன்னும் வேறுபல கோணங்கள். விளக்கங்கள், பார்வைகள் தரப்படலாம் என்பதை நன்குணர்ந்தது.

இதுவரை நாம் நூல்களைப் பற்றியே அதிகம் பேசினாலும், திரைப்படங்கள். நாடகங்கள், ஓவியங்கள், இசை, நடனம் ஆகியவற்றை மதிப்பிடுவதற்கும் மேலே தரப்பட்ட கருத்துகள் உதவும். சி. ஏ. விஞ்செஸ்டர் கூறுகிறார்: “இலக்கிய விமரிசனம் என்பது, இலக்கியத்தை மட்டுமே நோக்காகக் கொண்டது. ஆனால் விமரிசனத்தின் பொது அடிப்படைகள் என்பன, விமர்சிக்கப்படும் பொருள் எதுவாயினும் - இலக்கியம், ஓவியம், சிற்பம், இசை எதுவாயினும் - ஒரே மாதிரியானவைதான்”.

அப்படியானால், ஒரு தேர்ந்த நாடக மதிப்புரையாளன், இலக்கியத்தை மதிப்பிடலாம்; இலக்கிய மதிப்புரையாளன், திரைப்படத்தையும் மதிப்பிடலாம் என்று அர்த்தமல்ல. மதிப்பிடும் முறையும் எழுதும் முறையும் ஒரே மாதிரியானவைதான். ஆனால்

அந்தந்தக் கலைகளுக்கே உரிய சிறப்புத்தன்மைகளை அந்தந்த விமரிசனங்கள் அறிந்திருக்க வேண்டும்.

சான்றுக்கென இங்கே திரைப்பட விமரிசனம், நாடக மதிப்புரை, கவிதை நூல் ஒன்றின் மதிப்புரை ஆகியவை அளிக்கப்படுகின்றன. முதலில் திரைப்பட மதிப்புரை: இது ‘சலனம்’ என்னும் சினிமா இதழில் (டிசம்பர் 91 – ஜனவரி 92) வெளிவந்தது.

## தளபதி

1957 – மஞ்சள் துணியில் சுற்றி கருப்பு வெள்ளை ரயிலில் விடப்பட்ட கர்ணன் (சூர்யா – ரஜினி) கால்வாய் மூலம் கதை நடக்கும் இடத்திற்கு வந்து சேர்கிறான்.

1989 - சூர்யா அந்த இடத்தின் “தாதா” துரியோதனனின் (தேவா – மம்முட்டி) ஆள் பிரஸன்னாவை மரண அடி அடிக்கிறான், சூர்யா – தேவா மோதல். பிரஸன்னா சாக சூர்யா சிறை செல்கிறான். உண்மை அறிந்த தேவா சூர்யாவை வெளிக்கொணர்கிறான். சூர்யா – தேவா நட்பு வேர்விட்டு கிளை விட்டு பெரிய மரமாகிறது. உடனேயே –! படம் முடியும் வரை தேவா சூர்யாவை தளபதி என்றும், சூர்யா தேவாவை நண்பன் என்றும் கூறிக் கொள்கின்றனர்.

அந்த ஊருக்கு புதிய கலெக்டர் அர்ஜுன் (அர்ஜுனன் - புதுமுகம் அரவிந்த்) வருகிறான். கூடவே குந்தி (விக்யா)யும் கலெக்டரின் தந்தையும் (ஜெய்சங்கர்) வருகிறார்கள். கலெக்டர் - சூர்யா, தேவா மோதல் வலுக்கிறது. உச்சக் காட்சியில் துரியோதனன் (தேவா) கொல்லப்படுகிறான்.

சினிமாஸ்கோப்பும் வெளிப்புறக் காட்சிகளுமே இப்படத்தின் சிறப்பம்சங்கள். சந்தோஷ் சிவனின் வித்தியாசமான கோணங்களும் இருட்டடிப்பு இல்லாத ஒளிப்பதிவும், புத்திசாலித்தனமான பின்னணி இசை. துல்லியமான ஒலிப்பதிவு, திறமையான தொழில்நுட்பம் போன்றவை இருந்தும் ஏனோ படம் சராசரி படத்தின் ஸ்கிரிப்ட்டில் பல ஓட்டைகள்.

ரஜினியின் Character–க்கு கிடைத்துள்ள Continuity– படத்தில் வரும் மற்ற எந்த கதாபாத்திரத்திற்குமே இல்லை. மம்முட்டியின் கேரக்டரை சரியாக உருவாக்கப்படாததின் விளைவு மம்முட்டி வரும் காட்சிகளில் Overact செய்திருப்பதாகப்படுகிறது.

இப்படத்தின் தொய்வான திரைக்கதை அமைப்பிற்கு காரணம் “நாயகன்” இன் அப்பட்டமான கதைப்போக்கு. அப்படத்தில் கையாண்ட நேர்த்தியான கதையம்சம்; பம்பாயில் நடக்கும் உண்மைக்கு ஒத்துப் போகும் படமாக்கல்; கமலின் கதாபாத்திரத்தை உருவாக்கியிருந்த விதம்; ஒரு தாதா (கமல்) வை யதார்த்தமாக மோதும் ஒரு Inspector (நாஸர்) – போன்றவற்றை தளபதியில் காண முடியவில்லை. நிறைய காட்சிகள் Half-way opening ஆக இருப்பது வேண்டுமென்றே உருவாக்கப்பட்டதா அல்லது Editing-இன் விளைவா என்று தெரியவில்லை. காட்சிகள் அழுத்தமாக இல்லை – வசனங்கள் செயற்கையான காட்சியின் முடிவை நோக்கிச் செல்வதாக அமைந்திருக்கின்றன. (உ.ம்.) ரஜினி-மம்முட்டி சந்திக்கும் காட்சிகள்.

பாடல் காட்சிகளைப் பொருத்தவரை படத்தில் செயற்கையான சேர்க்கையாகவே படுகின்றன.

நாயகன், தளபதி இரண்டும் ஒத்திருக்கின்ற ஒரே விஷயம் - ஒரு மனிதனின் இச் சமுதாய கேடுகளுக்கு எதிரான வன்முறையை, நியாயப்படுத்துவதேயாகும். இப்படத்தில் நல்ல படமாக்கலே இல்லை என்பது போல் விமர்சனம் தோன்றினால் அது தவறு. ரஜினி ஜெய்சங்கர் சந்திக்கும்போது Close-up இலேயே அக்காட்சியை படமாக்கியிருக்கிற விதம். ரஜினியிடம் ஷோபனா தான் வேறொரவரை திருமணம் செய்துகொள்ளப் போவதாக சொல்லும் காட்சி இயற்கையாக அழகான Back drop – ல் ஒரே ஷாட்டில் படமாக்கப்பட்டிருக்கும் விதம் பாராட்டுக்குரியது.

“தளபதி” தமிழ்த்திரை உலகில் விளம்பர சாகசத்துடன், மிகப் பெரிய ஆவலை ரசிகர்கள் மற்றும் G V Flims பங்கு வைத்திருந்தவர்கள் மத்தியிலும் தூண்டியது – அந்த வகையில் இப்படம் மிகுந்த ஏமாற்றத்தைத் தருவதாகத்தான் அமைந்துள்ளது.

இந்தப் படம் முழுவதும் தேடியும் கிடைக்காதவர் மணிரத்னம்தான்.

-பாலகிருஷ்ணன்



இந்த மதிப்புரை, சரியான மதிப்பீட்டை முன் வைத்தாலும், தனது நடையில் பெருமளவு குறையுடையது. முதலில் சராசரி இரசிகனுக்காக எழுதப்பட்டது அல்ல இது. 'ஸ்கிரிப்ட்' போன்ற தமிழ் வரிவடிவில் எழுதப்பட்ட ஆங்கிலச் சொற்கள், Character, Continuity, Overact, Inspector, Halfway opening, Editing, Backdrop, Close-up போன்ற – அப்படியே கையாளப்படுகின்ற ஆங்கிலச் சொற்கள் - ஆகியவை நடையைக் கெடுப்பது மட்டுமின்றி, மதிப்புரையாளருக்குப் போதிய பொறுமையும், பொறுப்பும் இல்லாத தன்மையையும் காட்டுகின்றன. 'பாடல் காட்சிகளைப் பொறுத்தவரை' என இலக்கண எழுத்துப்பிழைகளும் G. V. Films என ஆங்கிலப்பெயர்களும் வேறு. ('பொறுத்தவரை' என்று இருக்க வேண்டும். 'பொறு' (to bear with) என்பது வேர்ச்சொல். 'பொருத்து' என்பது அடிச் சொல்லாயின், பொருந்தியவரை என்றுதான் சொல் உருவாகும். 'பொருந்தியவரை' என வராது. 'பொருத்த' என்பது வினையெச்ச வடிவம் ஆகையால் 'பொருத்த நினைத்தான்' என்பது போல வரும்.) தேவையற்ற நிறுத்தக் குறிகள் (தொடர் புள்ளிகள் முதலியன) பயன்படுத்தப்பட்டுள்ளன. சந்திப்பிழைகள் மிகுதி. ஆங்கிலத்திலே எழுதும்போது பெரும்(!) பொறுப்புணர்ச்சியைக் கையாளும் நம்மவர்கள், தமிழில் எழுதும் போது எவ்வளவு பொறுப்பின்மையை வெளிப்படுத்துகிறார்கள் என்பதற்கு இது ஒரு சான்று.

இனி நாடக மதிப்புரைக்கு ஒரு சான்று காணலாம்: (இது 'வெளி' பத்தாம் இதழிலிருந்து – மார்ச் ஏப்ரல் 1992-எடுக்கப்பட்டது).

ஒரு நடுக்கமான மீட்சிக்கு

- -முபீன்

நிஜந்தன் எழுதி இயக்கிய இந்த நாடகம், அரூபம் நாடகக் குழுவின் இரண்டாவது முயற்சியாக மியூசியம் அரங்கில் மார்ச் 10 ஆம் தேதி அன்று 7-00 மணிக்கு அரங்கேறியது.

அரைவட்ட மேடையை மூன்று ஒளிவட்டங்கள் மூன்று பாகங்களாகப் பிரித்திருந்தன. சீருடை அணிந்த நால்வர் ஒருவரை விசாரிப்பதாக மைய ஒளி வட்டப் பகுதியிலும், குரல் பாவனையிலிருக்கும் நடுவர் கொண்ட டென்னிஸ் விளையாட்டைக் காட்சியில் இல்லாத எதிர் ஆட்டக்காரருடன் விளையாடும் ஒரு டென்னிஸ் வீரர் இடப்பக்க ஒளிவட்டத்திலும், ஒரு டிக்டேட் செய்பவர் – ஒரு டைப்பிஸ்ட் வலப்பக்க ஒளி வட்டத்திலும் என நாடக நிகழ்ச்சிகள் இருந்தன.

தனக்குத் தெரிந்தும் தெரியாததை மறைக்கும் விசாரிக்கப்படுபவரிடமிருந்து தான் அறிந்தும் அறியாததை எதிர்கொள்ள எண்ணும் உக்கிரத்தில் விசாரிப்பவர்கள், வாழ்க்கையின் விசாரணையை நடத்திக் கொண்டிருந்தார்கள். வாழ்வு இயக்கத்திலிருந்து, வாழ்வுப் போராட்டத்திலிருந்து தொலைவாகிப் போன வெற்றியைக் கண்டுவிடத் துடிக்கும் துடிப்பு விசாரிக்கப்படுபவரிடம் இருந்திருக்க வேண்டும். அத்துடிப்பின் சிதறல்கள் மட்டுமே நடிப்பில் இருந்ததால் அது வெறும் கூட்டு இயக்கத்தின் வெற்றியாக, நாடக நிகழ்வின் அதிர்ச்சிகளுக்குப் பரிச்சயமாகாத பார்வையாளர்களுக்கு இருந்தது. விசாரித்தலும் சோர்வாகிப் போன பின் வாழ்வின் இயக்க வெற்றியைக் காணும் ஆவல் தோன்றிவிடுகிறது அவர்களுக்கு. இன்னும் தீவிரமான ஆழமான நடிப்பு வெளிப்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.

விளையாட்டு, வெற்றியை நோக்கித்தான் நகரும் என்னும் நம்பிக்கையில் வாழ்வை விளையாடும் டென்னிஸ் வீரன், தோல்வியின் பிரக்ஞைக்கு இலக்காகிப் போகிறான். இங்கும் போராட்டம் அத்து மீறல்களுக்கு எதிராகத் தொடர்கிறது, ஆனால் விளையாடித் தோற்பதைவிட விளையாடாமல் வெற்றியைக் கொடுப்பதே அவனுக்கு தார்மீக பலமாக இருக்கிறது. தோல்வியை நோக்கித்தான் வாழ்க்கை விளையாடப்பட்டது என்னும் ஆதங்கம் எழ காட்சிப்படுத்தப்பட்டது.

விசாரணையையும், விளையாட்டையும் ஒரு பரிமாணத்திலேயே பதிவு செய்பவர், டைப்பிஸ்ட்டின் விமர்சனத்தை ஏற்காமல் இருப்பதன் மூலம் இறுகிப்போன வாழ்தலை நியாயப்படுத்துபவராகிறார். வாழ்க்கையின் சுகம் உறிஞ்சப்பட்டுவிடுமோ என்னும் அவலத்தில் இவர்கள் வாழ்வு

நகர்ந்து கொண்டிருக்கிறது. விசாரித்ததும் விளையாட்டும், எப்படி நிகழ்ந்தாலும், பதிவு செய்தல் மட்டுமே முதன்மையாகிப் போவதை தவிர்க்க முடியாமல் ஏற்கிறார்கள் இவர்கள்.

வாழ்வின் வன்முறையை, வாழ்தலின் வன்முறையை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் காட்டுகிற இந்நாடகப் பிரதி திணிக்கப்படுதல், அச்சுறுத்தல், அடக்கப்படுதல் எனும் வன்முறையின் செயல் தன்மைகளைக் காட்டியது. அதிகாரப் பிரயோகம் மேடையின் மூன்று பகுதிகளிலும் நிகழ்த்தப்பட்டது. போராட்டம் யாருக்குள் யாரிடம் போன்ற கேள்விகளைத் தொடர்ந்து எழுப்பிக் கொண்டிருந்தது இந்நாடகப் பிரதி;. அடைப்பட்டுப்போன அதிகாரச் சிக்கல்களை மேடைப் பரப்பிற்கு எடுத்து வந்து உருவகப்படுத்தியது. போராட்டம் மகிழ்வைப் பகிர்ந்து உற்சாக விளிம்பில் நின்று பேசவில்லை அந்த நடிகர்கள்.

அவலம் நிறைந்த மனிதத் தன்னிலையானது உறுதிப்படுத்திக் கொள்ளும் இயக்கம், நாடகத்தின் உள்மொழியில் சிக்கியிருந்தது. இத்தன்னிலை வெளிப்படுத்தும் தவிர்க்க இயலாமை தொடர்ந்திருக்கும் தவிப்பு நிலையோடு நடிப்பால் உருவகப்படுத்தப்படவில்லை. மூடியிருக்கும் பாதைகளைக் கொண்ட சிக்கல் நிறைந்த வாழ்வில் இறுகிப் போன விதிகள் திணறடிப்பதை பேசுகிறது இந்நாடகப் பிரதி. மனித வாழ்வை நோக்கி அமைப்பினால் நீட்டப்படும் கேள்விகள் இந்நாடகத்தில் எதிரொலிக்கின்றன. மனித வாழ்நிலை எந்த எந்த முரணையும் சகித்துக்கொள்ளாத தடையைக் கொண்டிருப்பதை உரக்கக் கூறியது இந்நாடகம்.

பரிமாறிக் கொள்ள எதுவுமே தென்படாத உலகில் பரிமாறிக் கொள்ளும் கட்டாயத்தில் தள்ளப்பட்டிருந்ததை உணர்ந்து அதனால் சலிப்படையும் மன உணர்வு, நாடகப் பிரதி எதிர்பார்க்கும் அளவு நிகழ்த்தப்பட்ட பிரதி தரவில்லை. வசனத்தின் கனத்தை அனுபவித்து மௌனத்தின் அமைதியைத் தெளிந்து வசனங்கள் பேசப்பட்டிருக்கலாம். நாடகத்தில் நடித்த சில நடிகர்களுக்கே இந்த வகையான நடிப்பு கைவந்தது.

கால இடைவெளி தொடர்பற்று இயங்கியது இந்நாடகம். நாடகத்தின் கதை காலம், உடன் நிகழ்காலத்தைக் கதையாடலாகப் பொருள்படுத்த

இயலாத வகையில் அதன் வரலாற்றுக் காலம் உள்ளது. ஒளி அமைப்பு மேடையைப் புதிய முறையில் பயன்படுத்தியதாக இருந்தது. ஒலிக் குறைபாடு நாடகத்தின் முழுமையான அனுபவத்தை மட்டுப்படுத்தியது.

இதன் நடையும் கடுமையானதே. படிப்பவர்க்குப் புரியவேண்டும் என்ற எண்ணமின்றி இந்த மதிப்புரை எழுதப்பட்டுள்ளது.

∴∴∴

ஒரு கவிதைக் கோட்பாடு அல்லது விமரிசனம் பற்றிய கட்டுரை நூலுக்கு ராஜமார்த்தாண்டன் எழுதிய நூல் மதிப்புரையினை (காலச்சுவடு சிறப்பிதழ் - 1991)க் கீழே காண்பதுடன் இப்பகுதியை நிறைவு செய்யலாம்.

ந. பிச்சமூர்த்தியின் கலை–மரபும் மனித நேயமும்

புதுக்கவிதை முன்னோடிகளில் ஒருவரும், குறிப்பிடத்தகுந்த ‘மணிக்கொடி’ எழுத்தாளர்களில் ஒருவருமான ந. பிச்சமூர்த்தியின் படைப்புகள் குறித்து, இளம் தலைமுறையினருக்கு அறிமுகப்படுத்தும் நோக்கில், இன்றைய சிறுகதை – நாவல் படைப்பாளிகளில் முதன்மையானவரும் குறிப்பிடத்தகுந்த புதுக்கவிஞர்களில் ஒருவருமான சுந்தர ராமசாமி, இலக்கியச் சிந்தனை அமைப்புக்காக எழுதியுள்ள விமர்சன நூல் இது.

‘மணிக்கொடி’ எழுத்தாளர்களான கு.ப. ராஜகோபாலன், ந. சிதம்பர சுப்பிரமணியன், சி.சு. செல்லப்பா, க.நா. சுப்ரமண்யம், பி.எஸ். ராமையா, சிட்டி ஆகியோர் காலத்தால் ‘வேகமாகப் பழசாகி’க் கொண்டிருப்பதாகவும் ‘மணிக்கொடிக் காலத்தில் மூன்று முக்கிய கலைஞர்கள் என்று புதுமைப்பித்தன், மௌனி, பிச்சமூர்த்தி (வரிசையும் கவனிக்கத்தக்கது) ஆகியோரைச் சொல்லலாம்’ என்றும் கறாரான கணிப்பை முன்னுரையில் கூறியுள்ளார் சுந்தரராமசாமி. கு.ப. ராஜகோபாலனும் பழசாகிக் கொண்டிருக்கிறார் என்பது சற்றே யோசிக்க வைக்கிறது.

இந்தப் புத்தகத்தை ஆழ்ந்து வாசிக்கும் வாசகன், இந்தக் கணிப்புக்கான விமர்சன ரீதியான பொதுக் காரணங்கள் ஒவ்வொரு

பக்கத்திலும் சொல்லப்பட்டடிருப்பதைத் தெளிவாகவே அறிந்துகொள்ள முடியும்.

ஆறு பகுதிகளாக அமைந்துள்ள இந்த நூலில் முதல் மூன்று பகுதிகள் பொதுப்படையானவை.

முதல் கட்டுரை: திறனாய்வில் நம் குரலைத் தேடி...கல்வித்துறை விமர்சகர்கள், சிற்றிதழ் விமர்சகர்களின் இன்றைய போக்குகளை விவரித்து, சுயபார்வையின்மை, போலிப்புலமை, மொழி சம்பந்தப்பட்ட மயக்கங்களில் இரு வகையினரும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள்தான் என்று தன் கணிப்பை முன் வைக்கிறார் ஆசிரியர்.

‘மனித மனத்தை ஊடுருவும் கலை ஆற்றலின் சூக்ஷமங்கள் என்ன? மாறிவரும் காலத்தில் மிதந்து வரும் கலையின் குணங்கள் என்ன?’ என்ற இரண்டும் திறனாய்வின் மிக முக்கியமான கேள்விகளாக இருக்க வேண்டும் என்கிறார்.

மேற்கத்திய விமர்சகர், அவர்களது கவிதைகளில் கண்டு பிடித்த மேன்மைகளை, நம் கவிதையின் மீது பிணைப்பது தமிழ்த் திறனாய்வாகாது என்னும் சுந்தரராமசாமியின் நிலைப்பாடு. இன்றைய சூழ்நிலையில் மேலும் விரிவாகவும் உதாரணங்களுடனும் முன் வைக்கப்பட்டு விவாதிக்கப் பட வேண்டும்.

நமது மேலான இலக்கியப் படைப்புகள் தரும் அனுபவங்களிலிருந்து நம் இலக்கியக் கோட்பாடுகள் உருவாக வேண்டும். இதற்கு உறுதுணையாகவே உலக இலக்கியங்களின் அனுபவங்கள் மற்றும் விமர்சனங்கள் பயன்பட வேண்டும் என்கிறார்.

இரண்டாவது கட்டுரை: ‘நவீனப் படைப்பின் குணமும் மரபும் தொடர்ச்சியும்’ நவீன கவிதை மரபின், தொடர்ச்சியாக இருத்தல் கூடாது. கவிதை, மரபின் தொடர்ச்சியாக மட்டுமே நிற்கும்போது அது பலவீனத்தின் சோர்வையும் வெளிப்படுத்துகிறது என்கிறார். இந்தக் கட்டுரையில் நவீன தமிழ்க் கவிதை பற்றி அனுபவம் சார்ந்த தன் முடிவுகளின் சாராம்சங்களை முன் வைக்கிறார் ஆசிரியர்.

‘வாழ்க்கையை எளிமையாக அணுகும் மனம் காலத்தால் பின் தங்கியது’. (ப. 16)

‘உவமை, உவமேயம், படிமம் போன்ற சகல அலங்காரங்களையும் தேடிச் சேர்க்கும் மனோ பாவத்தை அவன் முற்றாகத் துறந்துவிட்டான்.’ (ப. 18)

‘அவனுடைய (இன்றைய கவிஞனின்) பெரிய சவால் கவிதையில் கவித்துவத்தை எப்படி எழுப்புவது என்பதல்ல. உரைநடையின் தன்மைகளை தக்க வைத்துக் கொண்டு கவிதையை எப்படி எழுப்புவது என்பதுதான்’. (ப. 19)

‘விளக்கம் கூற முடியாத வியப்பை கவிதை எப்போதும் தக்க வைத்துக் கொண்டிருக்கிறது’. (ப. 23)

மேலும், கவிதைகள் அவற்றின் நோக்கம் சார்ந்த எண்ணற்ற குணங்கள் சார்ந்து நிற்கலாம் என்கிறார். தம் கவிதைகள் சார்ந்து அல்லது தமக்குவப்பானவர்களின் கவிதைகள் சார்ந்து கவிதையின் குணங்களை வரையறுக்கும் குறுகிய விமர்சனங்களுக்கு எதிரான, கவிதை அனுபவம் - வரலாறு சார்ந்த நேர்மையான கருத்து இது. இந்த இரண்டு கட்டுரைகளின் தலைப்புகள் பொதுவானவை என்ற போதிலும் கவிதை விமர்சனம் நவீன கவிதையின் கணம் பற்றி மட்டுமே தன் சித்தாந்தங்களை முன்வைத்துள்ளார் சுந்தரராமசாமி.

மூன்றாவது கட்டுரை: ‘கவிதையை நேசிக்கும் விதம்’ இங்கு கவிதையை வாசகன் எவ்வாறு அணுக வேண்டும் என்பது கூறப்பட்டுள்ள போதிலும், நவீன கவிதை பற்றி தன் சித்தாந்தங்களையும் கூடவே ஆசிரியர் முன் வைத்துள்ளார். ‘ஒரு கவிதையைப் படிக்கத் தொடங்கும்போதே ‘உண்மையின் குரல் இது’ என்ற நம்பிக்கையை அது தீவிரமாக உருவாக்க வேண்டும் (ப. 34) என்று கூறி, உண்மையின் குரல்’ பற்றியும் விளக்குகிறார்.

இளம் கவிஞர் பலருக்குக் கவிதை மொழிகை கூடவில்லை; அதற்கான தேடலும் அவர்களிடம் இல்லையென்று இன்றைய கவிஞர்கள் பற்றிய விமர்சனத்தையும் முன் வைக்கிறார்.

நான்காவது கட்டுரை: ‘பிச்சமூர்த்தியின் படைப்புலகம்’, ‘வாழ்க்கை மீது நம்பிக்கை, சக மனிதன் மீது நேசம். இயற்கையின் மீது ஜீவ உறவு. மதிப்பீடுகள் சார்ந்து வாழ்வதில் உறுதி இவைதாம் பிச்சமூர்த்திக்கு முக்கியமானவை’ என்று அவரது படைப்புலகம் குறித்த பொதுக் குணங்களைக் குறிப்பிடுகிறார்.

ஐந்தாவது கட்டுரை: ‘பிச்சமூர்த்தியின் கவிதைக் கலை’. இந்தப் புத்தகத்தில் அதிகப் பக்கங்களை எடுத்துக் கொண்டுள்ள கட்டுரை. (பக். 49-130)

கட்டுரையின் முதல் பகுதியில் பிச்சமூர்த்தி கவிதைகளின் (கதைகளின்) பொதுக் குணாம்சங்கள் என்று வாழ்க்கை மீதான விமர்சனம், மனித நேயத்தை வற்புறுத்தும் மனப்போக்கு ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். தொடர்ந்து, அதன் அடிப்படையில் பிச்சமூர்த்தியின் 13கவிதைகளை எடுத்துக் கொண்டு விரிவாகப் பேசுகிறார். அவ்வகையில் சுந்தரராமசாமியின் விமர்சனப் பார்வை சிறப்பாகவே முன் வைக்கப்பட்டுள்ளது.

ஆனால் கவிதைகளின் கட்டமைப்பு குறித்து விமர்சனபூர்வமாக அணுகவில்லை. (‘ஒரு நல்ல கவிக்கு எதிராக, எதிர்மறை விமர்சனங்களைக் கட்டாயப்படுத்தாமல் இருப்பதும், நாம் அவருக்குச் செய்யும் உதவியாகும்’ என்று ஆசிரியர் கொண்டுள்ள நிலைப்பாடும் இதன் காரணமாகலாம். ஆனால் ‘பிச்சமூர்த்தியின் சிறுகதைகள்’ கடுமையான அளவுகோல்களுடன் விமர்சன ரீதியாக அணுகப்பட்டிருப்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.) “இடம் பெறாதவற்றின் கலை, கவிதை” (ப. 22) என்றும், “…ஒருபோதும் கவிதை விசாலமாக இல்லை. குறைந்த வார்த்தைகளில் விரிந்த அனுபவம் என்பது கவிதையில் தவிர்க்க முடியாத விதியாக எப்போதும் இருக்கிறது” (ப.24) என்றும் கவிதையின் கட்டமைப்பு குறித்துப் பொதுவான கோட்பாடுகளை முன் வைத்துள்ள சுந்தரராமசாமி, தான் எடுத்துக் கொண்டுள்ள பிச்சமூர்த்தி கவிதைகளில் அவற்றைப் பொருத்திப் பார்க்கவில்லை.

பிச்சமூர்த்தியின் கவிதைகள் விளக்கமானவை. அதனால் நெகிழ்ச்சியானவை. தன் அனுபவத்தை, வாழ்க்கைப் பார்வையைக் கவிதைகளைப் படிக்கும் வாசகன் மிகத் தெளிவாக வாங்கிக் கொள்ள

வேண்டும் என்னும் நோக்கில் அதிகமான வாக்கியங்களில் - வார்த்தைகளில் சொல்லிவிடுகிறார். இதன் காரணமாகக் கவிதைகள் பலவும் செறிவான கட்டுக் கோப்பை இழந்து நிற்கின்றன.

'அறிவுரை, வாழ்க்கை பற்றிய தெளிவின் விளைவாகும்' (ப. 15) என்று கூறியுள்ளார் சுந்தரராமசாமி. பிச்சமுர்த்தியின் கவிதைகளோ, வாழ்க்கை குறித்த சில முன் முடிவுகளைத் தெளிவாக முன்வைப்பனவாகவே உள்ளன. இந்த முடிவுகள் பிச்சமூர்த்தியின் அனுபவம் சார்ந்த சுய பார்வையின் வெளிப்பாடுகளே என்ற போதிலும், தெளிவின் அடிப்படை சார்ந்த அறிவுரைகள் என்றே கொள்ள வேண்டும். இதனை, இங்கு சுந்தரராமசாமி எடுத்துக் கொண்டுள்ள கவிதைகளில் ஓரளவிலும், ஏனைய பல கவிதைகளில் மிக வெளிப்படையாகவும் காணமுடியும். ஓர் உதாரணம்:

ஜீவா! விழியை உயர்த்து.

சூழ்வின் இருள் என்ன செய்யும்?

அமுதத்தை நம்பு.

ஒளியை நாடு.

கமுகு பெற்ற வெற்றி நமக்கும் கூடும்.

சூழ்வின் இருள் என்ன செய்யும்?

என்று முடிகிறது 'ஒளியின் அழைப்பு' கவிதை. இதனைத் 'தெளிவின் அடிப்படை சார்ந்த அறிவுரை' என்றுதானே கொள்ள முடியும், எத்தனை மேலான அறிவுரை என்ற போதிலும்! 'ஆத்தூரான் மூட்டை', 'காட்டு வாத்து' கவிதைகளிலும்கூட இப்போக்குகளைக் காணமுடியும்.

'கபோதி' என்ற கதையிலிருந்து ஒரு பகுதியையோ ஒரு வாக்கியத்தையோ ஒரு வார்த்தையையோ அகற்றுவது கடினமானது. அந்த அளவுக்கு கட்டுக் கோப்பானது அது' (ப. 157) என்று சிறுகதையின் செறிவான கட்டுக் கோப்பிற்கு அழுத்தம் கொடுத்து

விமர்சித்துள்ள சுந்தரராமசாமி, பிச்சமூர்த்தி கவிதைகளில் கட்டுக்கோப்பிற்கு அவ்வளவாக முக்கியத்துவம் கொடுக்கவில்லை.

புதுக்கவிதையில் தொடர்ந்து சோதனை செய்தவர், பல இளங்கவிகள் புதுக்கவிதை எழுதக் காரணமான முன்னோடி, கவிதைகளில் தன்னை நேர்மையாக வெளிப்படுத்திய படைப்பாளி என்ற நிலையில், சற்று தாராளமாகவே பிச்சமூர்த்தியின் கவிதைகளை அணுகியுள்ளார், சுந்தரராமசாமி.

ஆறாவது கட்டுரை: 'பிச்சமூர்த்தியின் கதைகள்'. அன்றைய காலகட்டத்துப் படைப்பாளிகளின் பிரச்சினைகள், போக்குகள் குறித்து முதல் பகுதி அமைந்துள்ளது. அடுத்து, பிச்சமூர்த்தியின் ஏழு சிறுகதைகளைத் தேர்ந்து விரிவாக ஆராய்துள்ளார். ஆழ்ந்த விமர்சனப் பார்வையில் கச்சிதமாக அமைந்துள்ளது இக்கட்டுரை. 'பதினெட்டாம் பெருக்கு' கதையைப் புதுமைப்பித்தனின் 'கல்யாணி' கதையுடன் ஒப்பிட்டிருக்கும் பகுதியில், சுந்தரராமசாமியின் மரபு சாராத வாழ்க்கைப் பார்வையும் இலக்கிய அணுகுமுறையின் நுட்பமும் சார்பின்மையும் வெளிப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் பிச்சமூர்த்தியின் வாழ்க்கைக் குறிப்பு இரண்டு பக்கங்களில் தரப்பட்டுள்ளது. பரவலாகக் காணப்படும் அச்சுப் பிழைகளைத் தவிர்த்திருக்கலாம்!

புதிய மதிப்பீடுகளைப் பரிசீலனை செய்யும்போது பிச்சமூர்த்தியிடம் வெளிப்படும் மரபு சார்ந்த பார்வையும், மரபை மீறிய பார்வையும் மனிதன் இயற்கை மற்றும் ஜீவராசிகளிடம் உள்ள ஈடுபாடும் அவரது படைப்புகளில் எவ்விதம் வெளிப்பட்டுள்ளன என்பது அவர் வாழ்ந்த காலகட்டத்தின் சமூக - இலக்கிய மதிப்பீடுகள், அவரது இயல்பு, வாழ்க்கைப் பின்னணியுடன் விமர்சனபூர்வமாக முன்வைக்கப்பட்டுள்ள நிலையில் இது, பிச்சமூர்த்தியின் படைப்புகள் குறித்த முதன்மையான விமர்சன நூலாகும்.

கவிஞன் அல்லாத கவிதை வாசகனுக்காக இந்த நூலை எழுதியிருப்பதாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார் சுந்தரராமசாமி. தேர்ந்த வாசகர்கள் மற்றும் படைப்பாளிகள் - விமர்சகர்களும்கூடப் படித்து, மேலும் சிந்தித்து, உரக்க விவாதிக்க வேண்டிய நூல் இது.

இதனைத் தொடர்ந்து கவிதை, விமர்சனம், இலக்கிய மதிப்பீடுகள் சம்பந்தமாக ஆரோக்கியமான ஆழ்ந்த விவாதங்கள் நிகழுமேயானால், அதனால் நமது படைப்புத் துறையின் சகல நிலைகளிலும் பயனள்ள பாதிப்புகள் ஏற்படும்.

# இயல் ஆறு

# கொஞ்சம் தர்க்கம், கொஞ்சம் அணியியல்

தமது கருத்தைப் பிறர் ஏற்குமாறு எழுத முனைபவர்கள், கருத்தேற்பு உத்திகளில் - தர்க்க உத்திகளிலும், அணியியல் உத்திகளிலும் - திறமை பெற்று விளங்க வேண்டும். இவற்றைக் கற்று அறிபவர்கள் உண்டு; முறைப்படி கற்காவிட்டாலும் உய்த்துணர்வு வழி அறிபவர்களும் உண்டு.

அணியியல் (rhetoric) என்பது கருத்தேற்பு உத்திகளைச் சொல்லித் தருவது. ஒருவரது வாதங்களைத் (அவை திறனுள்ளவையோ, மோசமானவையோ) தகுந்த வெளிச்சத்தில் வைக்கச் செய்வது. தர்க்கம், கூற்றுகளை முறைப்படுத்தி அவற்றின் ஏற்புடைமை அல்லது ஏற்பின்மையை எடுத்துக்காட்டுவது; வாதங்களைத் தெளிவாகவும், ஏற்குமாறும், அழகோடும், மிடுக்கோடும் முன்வைக்க உதவுவது அணியியல்; வாதங்களைப் பகுத்து ஆராய்ந்து உணர்த்துவது தர்க்கம். தர்க்கரீதியான உள்ளமைப்பு இருக்குமாயின், வாதங்கள் தெளிவாகவும் வயப்படுத்தும் முறையிலும் அமையும் என்பதால் அணியியலும் தர்க்கத்தின் சில கருவிகளையும் உத்திகளையும் ஏற்றுக் கொள்கிறது. நடையியலும் அணியியலின் ஒரு பகுதியாகவே கருதப்படுகிறது.

**தர்க்கம்**

ஒரு வார்த்தையின் அர்த்தத்தைத் தெளிவாக எடுத்துக் கூறும் முயற்சி வரையறை ஆகும். ‘அர்த்தம்’ என்பது அவ்வளவு தெளிவில்லாத சொல்லாக இருப்பதால் பல்வேறு வரையறைகள் உள்ளன. அரிஸ்டாட்டில், வரையறையைச் சாராம்ச வரையறை, உருவ முறைப்படியான வரையறை, சொல்லாலான வரையறை என மூன்றாகப் பகுத்தார்.

சாராம்ச வரையறை என்பது மாற்றியமைக்கக் கூடிய (எழுவாயையும் பயனிலையையும் இடம் மாற்றக் கூடிய) கூற்று ஆகும். சான்றாகப்

பார்க்க:

1. மனிதன் சிந்திக்கக் கூடிய பிராணி.

2. மனிதன் இருகால் பிராணி.

இவற்றை மாற்றியமைத்தால்,

3. எந்த சிந்திக்கும் பிராணியும் மனிதனே.

4. எந்த இருகால் பிராணியும் மனிதனே.

மூன்றாவது கூற்று இயலக் கூடியது (சாராம்சமானது): நான்காவது கூற்று இயலாதது.

சாராம்ச வரையறையில் மூன்று உறுப்புகள் உண்டு. வரையறைப்படுத்த வேண்டிய சொல் (definidendum), இனம் (அந்தச் சொல் எந்தப்பகுப்பில் அமைகிறதோ அது – genus), வித்தியாசம் (அந்தச் சொல்லை அதே இனத்தின் மற்றக் கூறுகளிலிருந்து விலக்கும் பண்புகள் - differential).

'மனிதன் பகுத்தறிவார்ந்த பிராணி' என்பதில் 'மனிதன்' வரையறைப்படும் சொல்; 'பிராணி' என்பது இனம்; 'பகுத்தறிவார்ந்த' என்பது வித்தியாசப்படுத்தும் கூறு.

முறைசாரா வரையறை என்பதில், ஒரு சொல்லின் அர்த்தத்தை உதாரணங்கள் தந்தோ, சமச்சொற்கள், எதிர்ச்சொற்கள் தந்தோ, வேர்ச்சொல் வருவித்தோ சுட்டிக் காட்டலாம்; அல்லது அச்சொல் குறிக்கும் பொருளை வருணித்தும் காட்டலாம்.

வரையறைகளை மெய்யானவை, பெயரளவிலானவை என்றும் பகுக்கலாம். மெய் வரையறை என்பது அந்த வார்த்தை முன்வைக்கும் மெய்ம்மையை விளக்க முயல்வது. சான்றாக, 'மனிதன் பகுத்தறிவுள்ள பிராணி' என்பதை தர்க்கவியலார் மெய்வரையறை என ஏற்பார்கள். ஏனெனில் மனிதனின் சாராம்சமான குணமாகப் பகுத்தறிவை இது குறிக்கிறது. பெயரளவு வரையறை

மெய்ம்மையைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அது சொல்லின் பயனை மட்டுமே கருத்தில் கொள்கிறது. சான்றாக,

“நமது நோக்கத்திற்காக, மனிதன், ஒரு வரிசெலுத்தும்

பிராணி எனக் கொள்வோம்”

(தற்காலிக வரையறை)

ஒரு பதத்தின் பொதுமைப்பட்ட அர்த்தம் உள்ளர்த்தம் எனப்படும். அந்தப்பக்கம் குறிக்கும் தனித்த பொருட்களின் தொகுதி விரிவர்த்தம் எனப்படும்.

மரபு வழியாக, தர்க்கம் பகுமுறை தர்க்கம் (Deductive logic) பொதுவான முடிவுகளிலிருந்து தனிக்கூற்றுகளை வருவிக்கும் முறையாகும். இது தனிக்கூற்றுகளைப் பகுத்து ஆராய்வதற்கும். அவற்றின் தகுதியை மதிப்பிட்டு வரிசைபடுத்தவுமான ஒரு முறை. தகுதி என்பது தர்க்கத்தில் உண்மையைக் குறிப்பதன்று: சரியான தன்மையை மட்டுமே சுட்டிக் காட்டும் தொடர்புள்ள கூற்றுகளின் சரித்தன்மையை ஆராயும் ஒரு முறை. முக்கூற்று வாதம் (Syllogism) என்பது, அதில் ஒரு முதன்மைக் கூற்று. ஒரு துணைக் கூற்று, முடிவு ஆகிய மூன்று கூற்றுகள் காணப்படும்.

எல்லா மனிதர்களும் இறப்பாரே ஆவர். - முதன்மைக் கூற்று

கந்தன் ஒரு மனிதன் - துணைக்கூற்று

ஆகவே, கந்தன் இறப்பவனே ஆவான். - முடிவு

ஒரு முக்கூற்று வாதத்தின் இரு கூற்றுகளும் உண்மையானவை, வடிவமும் சரியானது என்றால் முடிவும் உண்மையாக இருக்கும். முக்கூற்றுவாதம் சரியானதாக, ஆனால் மெய்யற்றதாக அமையும் வாய்ப்பும் உண்டு (கூற்றுகள் மெய்யற்றவை எனில்):

எல்லா மனிதர்களும் கழுதைகளே.

கந்தன் ஒரு மனிதன்.

ஃ கந்தன் ஒரு கழுதையே.

இந்த முக்கூற்று வாதம் அமைப்பில் சரியானது; ஆனால் மெய்யற்றது. இதே போல அமைப்பில் தவறாகவும், ஆனால் முடிவு உண்மையாகவும் அமைபவையும் உண்டு:

எல்லா மனிதரும் இறப்போரே ஆவர்.

கந்தன் இறந்துவிட்டான்.

ஃ கந்தன் மனிதனே ஆவான்.

இங்கு வடிவம் தவறு; ஆனால் கூற்று (முடிவு) உண்மை. இங்கு சற்றே அறிமுகத்திற்காக மட்டுமே இவை சொல்லப்பட்டன. விரிவாக அளவையியல் (Logic) நூல்களில் படிக்கலாம். இன்னும் ஆழமாக, நுட்பமாகக் குறிகளைப் பயன்படுத்திப் படிக்க நினைப்போர் ‘குறியீட்டு அளவையியல்’ படிக்கலாம்.

நிபந்தனை முக்கூற்றில் முக்கியக்கூற்று நிபந்தனை எச்சம் சேர்ந்து வரும்.

(உ.ம்): படித்தால், நீ அதிக மதிப்பெண் பெறலாம்.

ஈரடி முக்கூற்றில், முக்கியக் கூற்று, ‘இது அல்லது அது’ என்ற வடிவத்தில் (இது வாகவோ, அது வாகவோ) வரும்.

(உ.ம்): மோசமான இச்செயலைச் செய்தவன் அறிவற்றவனாகவோ, குற்ற மனப்பான்மையுள்ளவனாகவோ இருத்தல் வேண்டும்.

கரப்பு அணிசார் முக்கூற்றில் ஏதேனும் ஒரு கூற்றோ, முடிவோ வெளிப்படையாகச் சொல்லப்படாது.

(உ.ம்): ‘இவர் ஒரு மருத்துவரானதால், பொதுநலம் கருதுபவர்’. இங்கே மருத்துவர்கள் யாவரும் பொது நலம் கருதுபவர்கள்’ என்ற கூற்று மறைந்துள்ளது.

பொதுவாகத் தலையங்கங்களில் அல்லது கட்டுரைகளில் அணிசார் முக்கூற்றே இடம் பெறும். அவற்றை ஆராயும்போது, உள்

மறைந்திருக்கும் கூற்று என்ன என்பதைக் கட்டாயம் காணவேண்டும்.

தொடராகத் தொடர்ந்துவரும் அணிகள் கூற்றுகள் உண்டு. ஆங்கிலத்தில் இதனை Sorties என்பர்.

தொகுமுறை தர்க்கம், (Inductive Logic) தனித் தகவல்களிலிருந்து சரியான கூற்றுகளைத் தொகுப்பது பற்றியது. குறித்த கூற்றுகளிலிருந்து பொதுக்கூற்றுகளுக்குச் செல்வது. அது அடிக்கடி பயன்படுத்தும் உத்திகள் வகைப்படுத்துதல், உதாரணப்படுத்துதல், எண்ணியறிதல், ஒப்புமைப்படுத்தல் முதலியன. இவ்வழியான தர்க்கத்தில் பொதுவாக ஏற்படும் நியாயப் போலிகள் (Fallacies) சில பின்வருமாறு:

**1.தவறான பொதுமைப்டுத்தல் (Hasty generalisation):**

மிகக் குறைந்த உதாரணங்களிலிருந்தோ மாதிரிகளிலிருந்தோ தகவல் தொகுப்பது இந்தத் தவறை உண்டாக்கும்.

(உ.ம்) இக்கால இளைஞர்கள் யாவரும் பொறுப்பற்றவர்கள்.

**2. தவறான ஒப்புமை (False analogy):**

இரண்டு ஒப்புமையற்ற, அல்லது மேலோட்டமான ஒப்புமை படைத்த கூற்றுகளை ஒப்புமைப்படுத்துதல்.

(உ.ம்) பறவைகளுக்கும், மனிதர்களுக்கும் இரண்டு கால்களே உள்ளன; ஆகவே பறத்தல் மனிதனுக்கும் இயலும்.

**3. ‘இதன் பின் வருவதால். இதன் விளைவாக இது’ (Post hoc ergo propter hoc).**

(உ.ம்) மழை பெய்த பின் விளையாடியதால் இந்திய கிரிக்கெட் வீரர்கள் தோற்றனர்.

**4. நிரூபிக்கவேண்டியதை நிரூபணமாக்குதல் :**

(உ.ம்) ‘கடவுள் எல்லாப் பொருள்களையும் படைத்ததனால் சர்வ வல்லமை படைத்தவர் என்பதை உணரலாம்.’

**5. கோணற் கேள்வி:**

குற்றத்தைப் பிறர்மேல் சுமத்துவது. "பரிட்சையில் காப்பி அடிப்பதை விட்டுவிட்டாயா?" (இதற்கு ஆம் என்றாலும் இல்லை என்றாலும் தவறை ஒப்புக்கொள்வதாகவே ஆகும்).

**6. தவறாகச் சமப்படுத்தல்:**

ஒரே வார்த்தையை இருவேறு அர்த்தங்களில் ஒரே வாதத்திற்குள் பயன்படுத்துதல்.

(உ.ம்) "கடவுளுக்குக் கண்ணில்லை, அவர் எப்படி அன்புள்ளவர் ஆவார்?" "அதில் ஒன்றும் தவறில்லை, அன்பு குருட்டுத்தனம் கொண்டதுதானே?"

இவையேயன்றி இன்னும் ஏராளமான நியாயப் போலிகள் உண்டு. அவற்றையெல்லாம் இங்கே சுருங்கச் சொல்வது கடினம். தக்க அளவை நூல்களில் இவை பற்றிக் காண்க.

## அணியியல்/சொற்பிரயோகவியல் (Rhetoric)

இங்கு முதலில் மேலை மரபு சார்ந்த பிரயோகம் சொல்லப்படுகிறது. சொற்பொழிவாற்றலுக்கான அணியியலாகத் தொகுத்தனர் மேலைநாட்டினர். மேடைப் பேச்சு, சட்டப் பேச்சு, புகழ்தல்/இகழ்தல் (பாராட்டுரை/இழிப்புரை) என மூன்றாகச் சொற்பொழிவுத் தன்மையை வரையறுத்தனர். பிறரை வயப்படுத்தும் கூறுகளாக சொற்பொழிவுக்கென முன் வைக்கப்படுவனவற்றை, நாம் எழுத்துக்கும் கொள்ளலாம்.

### 1.தொடக்கம் (Inventio):

தனக்கான விஷயத்தைத் தேர்ந்தெடுப்பதையே இச்சொல் குறிக்கிறது. செவ்வியல் அணியியலாளர் உயர்நடை பயன்படக்கூடிய விஷயங்களையே தேர்ந்தெடுக்குமாறு அறிவுறுத்தினார். 'தலைப்புகளைத் தேர்ந்தெடுத்தல், (topoi) என்பது ஒரு முறை. ஒரு விவாதத்தை வளர்த்துப் போக என்ன தலைப்புகளை/கூறுகளைப் பட்டியலிடலாம் என ஆராய்வது.

**2. வரிசைப்படுத்தி அமைத்தல் (Dispositio):**

விவாதத்தை முறைப்படுத்தி வளர்க்கும் முறை இது. பல்வேறு அமைப்புகள் இதில் உண்டு என்றாலும் பரவலாகக் கையாளப்படும் ஓர் ஒழுங்கமைவைக் காண்போம். இதன் கூறுகள் ஏழு:

1. Exordium – பிரச்சினை அறிமுகம்.

2. Narratio – மெய்ம்மைகளை முன்வைத்தல்.

3. Expositio – நிரூபிக்க வேண்டிய விஷயத்தை விளக்குதல்.

4. Partitio – விவாதத்தின் பல்வேறு நிலைகளைப் பகுத்துரைத்தல்.

5. Conformatio – நிரூபித்தல்.

6. Confutatio – எதிர் வாதங்களை மறுத்தல்.

7. Epilogue– வாதங்களைத் தொகுத்துக்கூறி, தக்க செயலுக்குத் தூண்டுதல்.

இந்த வாத அமைப்பு முறை மேலை நாடுகளில் கிரேக்கர் காலந்தொட்டு பல நூற்றாண்டுகளாகப் பின்பற்றப்பட்டு வந்த ஒன்றாகும். இந்தப் படிநிலைகளை பயன்படுத்தினால் எந்த ஒரு வாதத்தையும் முழுமையாகவும், தெளிவாகவும், பயன்தரும் வகையிலும் முன்வைக்க முடியும் என்பது அனுபவம்.

**3. நடைவளம் (Elocutio):**

வாதத்திற்குத் தகுந்த நடை – சொற்கள் தேர்வு, வாக்கிய அமைப்பு, தகுந்த அணிகளைப் பயன்படுத்துதல் ஆகியவை - இதில் அமையும்.

சொற்களை அர்த்தவியல் நோக்கில் வகைப்படுத்தலாம். நுட்பமொழி (Abstract Language) என்பது அருவமான, நுண்மையான பண்புகளைக் குறிக்கும் சொற்களைக் கையாளுதல் ஆகும். பொதுச் சொற்கள் நுட்பச் சொற்களல்ல. (மனிதர், விலங்கு போன்றவை பொதுச் சொற்கள்; நன்மை, சுதந்திரம், குடியரசு, நிர்வாகம் போன்றவை அருவச் சொற்கள் அல்லது நுட்பச் சொற்கள்.)

பருமொழி/புலன்மொழி (Concrete or Sensory Language) மனத்தில் சித்திரங்களை உண்டாக்கக் கூடிய சொற்கள் ஒரு செயலின் இயக்கத்தை உணர்த்தக்கூடிய சொற்கள் போன்றவை. இவற்றையும் சிறப்புப் பெயர்களிலிருந்தும் (கந்தன், வள்ளி…), சுட்டுச் சொற்களிலிருந்தும் (இந்தப் புத்தகம், அந்த ரேடியோ), வேறுபடுத்திப் பார்க்க வேண்டும்.

அறிவு மொழி (Referential Language), உணர்வுமொழி (Emotive Language) என வகைப்படுத்துவதும் உண்டு. இன்றைய அதிகபட்ச வெப்பநிலை 36 degree celcius என்பது அறிவுமொழி. ‘ஆ! எவ்வளவு கடுங்குளிர் தில்லியில்!’ என்பது உணர்வு மொழி. அறிவுமொழி, சொற்களின் மேற்சுட்டுப் பொருளை முதன்மைப்படுத்துகிறது. உணர்வுமொழி, இரண்டாம்நிலை (அ) உள் அர்த்தத்தை முதன்மைப்படுத்துவது. (மேலர்த்தம்) (Denotation), உள்ளர்த்தம் (Connotation) என்பன பொதுவாகச் சொற்களில் அமையக்கூடியவை. உதாரணமாகத் ‘தாய்’ என்பதன் மேலர்த்தம் ‘பெற்ற பெண்மணி – அம்மா’ என்பது. பாசம், அன்பு, தண்மை, பாதுகாப்பு யாவும் இச்சொல்லின் உள்ளர்த்தங்கள்.

புதுச் சொல்லாக்கம் (Neologism) என்பது புதுச்சொல்லை உண்டாக்குவது, அல்லது பழைய சொல்லைப் புதுப் பொருளில் ஆள்வது. (உதாரணமாக, இந்தப் புத்தகத்தில் பயன்பட்டுள்ள ‘கருத்தேற்பு’, ‘கருத்துவயப்படுத்துதல்’ என்னும் சொற்கள்).

பழஞ்சொற்பயன்பாடு (Archaism) இயல்புக்கு மாறாகப் பழைய / மறைந்துபோன/ புழக்கத்திலில்லாத சொற்களைப் பயன்படுத்துவது. (“நீவிர் யாவிரோ என்றாற்கு, யானோர் புலவன் என செம்மாந்துரைத்தார் அவர்”)

ஒலிநயம் (Euphony) இனிய, இசைந்து செல்லும் ஒலிகளை உடைய, ஆற்றொழுக்கான சொற்களைப் பயன்படுத்துவது ஒலிநயம் எனப்படும். இதற்கு எதிராக, ஆங்கிலத்தில் மோசமான ஒலியமைப்பு அல்லது ஒலிநயமின்மை (cacophony) என்பதையும் பிரித்துக் காட்டுவார்கள்.

தமிழில் அலங்கார நடை அல்லது ஆடம்பர நடை என்று சொல்வதை மேலை அணியலார் பல்வேறு வகைகளாகப் பிரிப்பார்கள். Perissolgia என்பது நமது மேடைகளில் நாம் இடையறாது காணும் ஒன்று; தேவையற்ற சொற்கூட்டங்களைப் பொழிதல். (வார்த்தை மழை).

Pleonasm என்பது மிகைச் சொற்களை அர்த்தமின்றித் திரும்பக் கூறுதல்.

Bombast என்பது ஒரு பொருளை ஆடம்பர வெற்று ஆரவாரச் சொற்களால் பேசுவது.

Macoronic என்பது அந்நியச் சொற்களையும் தாய்மொழிச் சொற்களையும் கலந்து, கேட்போர் நகைச்சுவையாக நினைக்குமாறு பேசுதல், எழுதுதல்.

உயர்ந்த நடை (Elevated style) என்பது உருவகங்கள், உவமைகள் மிகுதியும் இடம் பெறுவது: சிக்கலான தொடரமைப்புகள், நீண்ட வாக்கியங்கள் கொண்டது; எதுகை மோனை போன்ற தொடைகள் இடம் பெறுவது; இத்துடன் உணர்ச்சி வேகம் அங்கங்கே இடம் பெறுமாறும், தனது சூழலிலிருந்து தான் தனித்து நிற்குமாறும் நடை அமைந்தால், அது ‘வண்ணக்கலவை நடை’ (மோசமான நடைதான்!) எனப்படும் உயர்ந்த நடையிலே பழங்காலச் சொற்களும் மிகுதியாகச் சேர்ந்து அமைந்தால் அதைப் பண்டித நடை என்பார்கள்.

இலக்கிய நடை என்பது இலக்கிய உத்திகளான எதுகை மோனை போன்றவை அளவோடிருக்க, உருவகம், உவமை போன்ற அணிகள் அழகூட்ட, சமநிலை இடம் பெற, மறைகுறிப்பு (Allusion) போன்றவையும் இடம் பெற வருவதாகும். முறை சார்ந்த நடை அல்லது முறையான நடை (Officialess) என்பது அலுவலகக் கடிதங்கள், ஆணைகள், குறிப்புகள் போன்றவற்றில் பயன்படக்கூடிய கற்பனையற்ற நடை. ஜார்கன் (Jargon) என்பது ஒரு துறை சார்ந்த கலைச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்துதல் ஆகும்.

Slang என்பது கொச்சநடை. ஒரு சமூகத்தின் குறிப்பிட்ட உட்குழுவினர் பயன்படுத்தும் நடை. கொச்சையாக எழுதுதல், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு, இடத்திற்கு அப்பால் புரியாமல் போகிறது. பொதுநடை அல்லது பொது மொழி (Standard Language) என்பதுதான்

பத்திரிகைகள் பயன்படுத்தும் நடை. பிற வெகுசனச் சாதனங்களும் முறை சார்ந்த நிகழ்ச்சிகளுக்கு (செய்திகள், விவாதங்கள்…) பயன்படுத்துவது இதுவே. பொது மேடைகளிலும், வகுப்பறைகளிலும் நிறுவனங்களிலும் கொச்சை தவிர்த்தால் வழங்குவது பொது நடை (Common Style) என்று சொல்லலாம்.

Vulgarism என்பது 'பொது மொழி'யினின்றும் தரங்குறைந்த, ஆபாசமான சொற்கள் சேர்ந்த, பிறரைப் புண்படுத்த எனத் தேர்ந்தெடுக்கும் நடை, எனச் சொல்லலாம். Barbarism என்பது நாகரிகமற்றோர் அறியாது சொற்களைத் தவறாகப் பயன்படுத்தும் நடை. பொதுவான இலக்கணத்தை மீறித் தொடரமைப்பு, சொல்லமைப்பு அமைதல் Solecism எனப்படும்.

மரபுத் தொடர் (Idiom) என்பது ஒரு சமூகத்தினர் வழிவழியாக ஒரு குறிப்பிட்ட அர்த்த மாற்றத்துடன் பயன்படுத்தும் தொடர். உதாரணமாக, ஏமாற்றுவதை 'நாமம் போடுதல்' என்பது. இன்னபிற, தாழ்ந்த நடை (Low Style) என்பது பேச்சு வழக்கு (Colloialism), ஜார்கன் போன்றவை கலந்து அமையும் நடை.

Ciceronian Style என்பது எல்லாவித அணியலங்காரங்கள் உத்திகளையும், தர்க்கத்தையும், கையாளுகின்ற கம்பீரமான நடை. இதற்கு எதிரானது Senecan style என்பது. இது கூர்மையானது, செறிவானது, பொன் மொழிகளைக் கொண்டு அமைவது போன்றது; பல சமயங்களில் அறிவார்ந்த நகைச்சுவையும் சேர்ந்தது.

நமது நாட்டிலும் வைதர்ப்ப நெறி, கௌட நெறி, பாஞ்சால நெறி என நடையினை மூன்றாகப் பகுத்துக் காட்டியிருக்கின்றனர். இவை இலக்கியக் குணங்கள் என்பனவற்றின் அடிப்படையில் அமைபவை. இலக்கியக் குணங்கள் என்பவை, ஆசிரியனின் ரசவுணர்ச்சியில் தொடங்கி, அதை வாசகனுக்குத் தொற்றவைத்தலில் முடிபவை என்று சொல்லுவர். அவற்றைச் சப்த குணங்கள் என்றும் அர்த்தக் குணங்கள் என்றும் பிரிப்பர். சப்த குணங்கள் மூன்று: மோனை, யமகம், சிலேடை என்பன. அர்த்த குணங்கள் மூன்று: ஓஜஸ் (விஷயத்தின் தீவிரத்தன்மை), இனிமை, பிரசாதம் (ஆற்றொழுக்கான தன்மை) என்பன. அலங்கார குணங்கள் நான்கு: 1. உவமை; 2. உருவகம்; 3.

உயர்வுநவிற்சி அல்லது அதிசய அணி; 4. முரணணி (விரோத அணி – Paradox ) என்பன.

மிக எளிமையான இனிய நடையை சுகுமார நடை (இதற்கு கௌடநடை என்றும் பெயர்) என்றனர். இதற்கு மாறான அலங்காரங்கள் நிறைந்த வலிய நடையை விசித்திர நடை என்றனர் (கௌட நடை). இவையிரண்டும் கலந்த, அல்லது இரண்டிற்கும் மத்தியமான ஒரு நடையினை பாஞ்சால நடை (மத்திம நடை) என்றனர். இவை மேற்கூறிய பத்துக் குணங்களில் தமக்கென உரிய குணங்களைத் தேர்ந்தெடுத்து அமைபவை. இவற்றின் விளக்கத்தைத் தண்டியலங்காரம் முதலிய நூல்களில் காணலாம்.

சமஸ்கிருத இலக்கிய மரபில், இலக்கியங்களை மதிப்பிடும்போது ‘உசிதம் அல்லாதவை’ (அனௌசித குணங்கள்) என்று பகுத்துப் பார்த்துள்ளனர். இவை எழுத்துக்கு உரிய குணங்களுக்கு மாறான குறைபாடுகள் அல்லது தோஷங்கள். இவை சொல், வாக்கியம் எடுத்துக்கொண்ட விஷயம், உள்ளடக்கும் பாவம் ஆகியவற்றில் ஏற்படலாம்.

**வார்த்தைக் குறைபாடுகள்:**

துஸ்ரவத்துவம் (ஓசைக்குறைபாடு), அஸலீலம் (ஆபாசம்), அனுசித அர்த்தம் (விரும்பிய அர்த்தம் உண்டாகாமை), அப்ரயுக்தம் (பழஞ்சொற்களை ஆளுதல்), கிராமியம் (பேச்சு வழக்குநடை), அப்ரதீதம் (முழு அர்த்தம் வெளிப்படாமை), சம்திக்தம் (அர்த்த மயக்கம்), நேயார்த்தம் (பொருந்தா அர்த்தம்), நிஹதார்த்தம் (திருகலான அர்த்தம், அவாசகம் (தவறான அர்த்தம்), கிளிஷ்டம் (வலிந்த அர்த்தம்). வித்தமதிக்ருதம் (எதிர் அர்த்தம்), அவிம்ருஷ்டவிதேயம் (எழுவாய் பயனிலைச் சொற்களை மாற்றுதல்) என்பன.

**வாக்கியக் குறைபாடுகள்:**

பிரதிகூலவர்ணம் (கடின ஓசைகொண்ட வாசகம்), அதிக நியூனகதித பதம் (சொற்கள் தேவைக்குக் கூடவோ குறையவோ செய்தல்), பதப்பிரகர்சம் (சொல்வதில் தளர்ச்சியுடைமை), விசலேச அசலீல கஷ்டம் (விட்டிசைத்தலும், இன்னிசை இன்மையும்) ஆகியவை.

**அர்த்தத்தில் ஏற்படும் தோஷங்கள்:**

அபுஷ்டம் (நீர்த்துப் போதல்), துஷ்கிரமம் (ஒழுங்கின்மை), கிராமியம் (பேச்சுநடை), வியாகதம் (சுய முரண்பாடு), அசலீலம் (ஆபாசம்), கஷ்டம் (பொருள் விளங்காமை), அனவிக்ருதம் (பொருள் மாறுதலின்மை), சம்திக்தம் (பொருள் மயக்கம்), நிர்ஹேது (தர்க்க ரீதியாக அமையாமை), விருத்தம் (முரண்பட்ட அர்த்தம் தருதல்), புனருக்தம் (கூறியதுகூறல்), வித்யாவிருத்தம் (பல்வேறு துறைகளிலிருந்து தவறான கருத்துகளைத் தருதல்), சாகாங்க்ஷதை (அர்த்த நிறைவு பெறாமை), சஹசரபின்னதை (ஏற்புடைமையின்மை) விசேஷா விசேஷம் (குறித்த ஒன்றைப் பொதுவானதாகவும், பொதுவான ஒன்றைக் குறித்ததாகவும் ஆக்கிக்கூறுதல்) அஸ்தாந யுக்ததா (சொல்லும் ஒழுங்கை மாற்றுதல்) என்பன.

**தமிழ் மரபு:**

தமிழ் இலக்கண மரபில் எழுவகை மதங்கள், பத்துக்குற்றங்கள். பத்து அழகுகள், முப்பத்திரண்டு வகை உத்திகள் என்றெல்லாம் சொல்லும் முறையைப் பகுத்துள்ளனர்.

**எழுவகை மதங்கள்:**

1.பிறரோடு உடன்படுதல் 2. பிறரை மறுத்தல் 3. பிறரது கோட்பாட்டினை ஓரளவு ஏற்றுப் பிறகு மறுத்தல் 4. தானே ஒரு பொருளை எடுத்து நிலைநாட்டுதல் 5. இருவர் முரண்பட்டுக் கூறும் கோட்பாடுகளில் ஒன்றினை எடுத்துச் சரியானது என நிறுவுதல் 6. பிறர் நூலின் கோட்பாட்டுக் குற்றங்களை எடுத்துக்காட்டல் 7. பிறர் கோட்பாடு எதற்கும் உட்படாமல் தானே ஒன்றை உருவாக்கி நிறுவுதல் என்பன.

**பத்துக்குற்றங்கள்:**

1.குறைக்கூறல் 2. கூறியது கூறல், 3. மிகைப்படக் கூறல் 4. மாறுபடக் கூறுதல், 5. தவறான சொற்சேர்க்கை, 6. மயங்க வைத்தல் (ambiguity) 7. வேற்றுச் சொற்களை அமைத்தல் 8. கூறவந்ததை விட்டு வேறொன்றை விரித்துரைத்தல், 9. சென்று தேய்ந்து இறுதல் 10. ஒரு பயனின்றி பேசுதல் எழுதுதல்.

**நூலில் அமைய வேண்டிய அழகுகள் பின்வருமாறு:**

1. சுருங்கச் சொல்லல்.

2. விளங்கவைத்தல்

3. நவின்றோர்க்கு இனிமை ( வாசித்தவர்க்கு இனிமை பயத்தல்)

4. நன்மொழி புணர்த்தல்

5. ஓசையுடைமை

6. ஆழம் உடைத்தாதல்

7. மறைவைப்பு

8. உலகம் மலையாமை

9. விழுமியது பயத்தல்

10. விளக்கமான உதாரணங்களைத் தருதல்

ஆகியவை.

**முப்பத்திரண்டு உத்திகளாகக் கருதப்படுபவை இவை:**

1. நுதலிப்புகுதல் (இது செய்தவன் ‘விளைவு இப்படியாகும்’ என சொல்லுதல்)

2. ஓத்துமுறை வைப்பு (காரணகாரிய முறைப்படி பகுதிகளை அமைத்தல்)

3. தொகுத்துச் சுட்டல் (பலவற்றையும் திரட்டித் தொகுத்துச் சொல்லுதல்)

4. வகுத்துக்காட்டல் (அவ்வாறு தொகுத்தவற்றைப் பல வகைகளாகப் பகுத்தல்)

5. முடித்துக்காட்டல் (முன்னோர் முடிந்தவாறு தானும் முடித்துக்காட்டுதல்)

6. முடிவிடம் கூறுதல் (தான் சொல்லும் கூற்றுக்கு சான்று கிடைக்குமிடம் சொல்லுதல்)

7. தானெடுத்து மொழிதல் (பழையனவற்றை மேற்கொள் காட்டுதல்)

8. பிறன்கோள் கூறல் (பிறரது கோட்பாடுகளை எடுத்துக் கூறுதல்)

9. சொற்பொருள் விரித்தல் (பதவுரை பொழிப்புரை தருதல்)

10. தொடர்ச்சொல் புணர்த்தல் (ஒன்றற்கொன்று தொடர்புடைய கூற்றுகளை இணைத்துக் காட்டுதல்)

11. இரட்டுற மொழிதல் (இரு பொருள்படச் சொல்லுதல்)

12. ஏதுவின் முடித்தல் (காரணம் கூறி முடிவு சொல்லுதல்)

13. ஒப்பின் முடித்தல் (ஒப்புமையால் முடிவு சொல்லுதல்)

14. மாட்டெறிந்து ஒழுகல் (ஒன்றனது இலக்கணத்தை இன்னொன்றுக்கும் பொருந்துமானால் அதற்குப் பொருத்திக் காட்டுதல்)

15. இறந்தது விலக்கல் (முற்காலக் கோட்பாடுகளுள் இன்று பொருந்தாதனவற்றை விலக்குதல்)

16. எதிரது போற்றல் (பிற்காலத்துத் தோன்றிய கோட்பாடுகளிலும் பொருத்தமானவற்றை எடுத்துக் கொள்ளுதல்)

17. முன்மொழிந்து கோடல் (முன்னே கோட்பாட்டைச் சொல்லி, பின்னால் அதை நிலைநாட்டவோ வலியுறுத்தவோ எடுத்துக் கொள்ளுதல்)

18. பின் அது நிறுத்தல் (முதலில் இடம்பெற வாய்ப்பில்லாவிட்டால் அதனைப் பின்னால் நிறுவி நிறுத்துதல்)

19. விகற்பத்தின் முடித்தல் (வேறுபட்ட இரு கருத்துக்களைக் கூறி முடித்தல்)

20. முடிந்தது முடித்தல் (முன்பு முடித்து விட்டதையே தெளிவுக்கெனப் பின்னும் நிறுவிக் காட்டுதல்)

21. உரைத்தாம் என்றல் (முன்பே கூறியதனைச் சுட்டிக் காட்டுதல்)

22. உரைத்தும் என்றல் (பின்னே இதனைத் தெளிவுபடுத்திக் காட்டுவேன் என்று கூறுதல்)

23. ஒருதலைத் துணிதல் (இரண்டு மாறுபட்ட கோட்பாடுகளுக்கிடையே ஒன்றைத் துணிதல்)

24. எடுத்துக்காட்டல் (தான் ஒரு கோட்பாட்டை நிறுவி அதற்குச் சான்றுகளை எடுத்துக்காட்டுதல்

25. எடுத்த மொழியின் எய்தவைத்தல் (எடுப்பான சொற்களால் தனது முடிவுகளை வாசகர்க்கும் எட்டுமாறு செய்தல்;

26. இன்னது அல்லது இது என மொழிதல் ('இதுவல்ல, இது' என்று தெளிவுபடுத்தல்)

27. எஞ்சிய சொல்லின் எய்தக்கூறல் (எஞ்சியுள்ள சில சொற்களினாலும் எய்தும்படியாகச் சொல்லுதல்)

28. பிற நூல் முடிந்தது தான் உடம்படுதல் (பிற நூல்கள் கூறியவற்றுள் சிலவற்றுடன் தான் உடன்படுதல்)

29. தன்குறி வழக்கம் மிக எடுத்துரைத்தல் (தனது சங்கேதங்களைத் தானே எடுத்து விளக்குதல்)

30. சொல்லின் முடிவில் அப்பொருள் முடித்தல் (சொல்லுதல் முடியும்போது சொல்ல வேண்டிய பொருளையும் சற்றும் மீதமின்றி கூறிமுடித்துவிடுதல்)

31. ஒன்றினமுடித்தல் தன்இனம் முடித்தல் (ஒப்புமைப்பட்ட முடிபுகளைக் காட்டித் தனது வாதத்தை நிலைநிறுத்தல்)

32. உய்த்துணர வைப்பு (வாசகர்களை உய்த்துணரச் செய்தல்) என உத்திகள் முப்பத்திரண்டு வகைப்படும் என்பர். இவற்றின் விளக்கங்களை நன்னூல், தொல்காப்பிய நூல்களிலும், அவற்றின் உரைகளிலும் காணலாம்

இவையன்றி, உவமை, உருவகம், முரண்தொடை போன்ற அணிகள், தொடைகள் ஆகியவற்றையும் குறிப்பு முரண் (Irony) போன்ற இலக்கியக் கருவிகளையும் கருத்துவயப்படுத்தும் முறையில் எழுத விரும்புவோர் கையாளப் பழக வேண்டும்.